# கோயில் பண்பாடு

முனைவர் சிலம்பு நா. செல்வராசு
விரிவுரைஞர் இலக்கியப்புலம்
புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம்
புதுச்சேரி – 605 001

அனிச்சம் இலக்கிய வட்டம்
புதுச்சேரி - 605 005

* கோயில் பண்பாடு

* சிலம்பு நா. செல்வராசு

* உரிமை: **பாக்கியவதி செல்வராசு**

* வெளியீடு: அனிச்சம் இலக்கிய வட்டம்
உரிமையாளர்: பாக்கியவதி செல்வராசு
11, இரண்டாம் தெரு, மோகன் நகர்
புதுச்சேரி - 605 005

* பதிப்பு: முதற்பதிப்பு: 1999 சூலை 11
திருவள்ளுவர் ஆண்டு 2030 ஆனித்திங்கள்

* விலை: **ரூபாய் அறுபது (ரூ. 60/-)**

* அச்சகம்: சபாநாயகம் அச்சகம்
கீழைத்தேர்வீதி, சிதம்பரம் - 608 001.

# படையல்

எம் தாயர்

அமரர் செல்லக்கண்ணு ரெங்கையா

அமரர் ஆச்சிக்கண்ணு ராமசாமி

அமரர் காசியம்மாள் நாராயணசாமி

ஆகியோரின்

தூய நினைவுகளுக்கு...

# கொடியேற்றம்

என்னுடைய ஆராய்ச்சியின் பிறிதொரு பக்கமாக இந்நூலைக் கொள்ளுதல் வேண்டும், 1987–ஆம் ஆண்டிற்குப் பின்னர் எழுதப் பெற்ற கட்டுரைகளுக்கும் அதற்கு முன்னர் எழுதப் பெற்ற கட்டுரைகளுக்கும் வேறுபாடு உண்டு. 1987–இல் **பேராசிரியர் க. ப. அறவாணன்** அவர்களைச் சந்தித்த பின்னர் எனது ஆய்வுப் போக்குகள் வேறுதடம் கொண்டன. அத்தடத்தில் அமைந்தனவும் சமூகவியல் மானுடவியல் அணுகுமுறைகள் கொண்டனவுமாகிய கட்டுரைகளே இதுவரையும் எனது ஆறு நூல்களிலும் இடம் பெற்றன.

1980–இல் எனது ஆராய்ச்சி தொடங்கியது. அது முதல் 1987 வரையிலான எனது ஆய்வுப்போக்குகளை இங்கே பதிவு செய்தல் வேண்டும். இக்காலக் கட்டத்தில் நாட்டுப்புறவியல் தொடர்பான கட்டுரைகளையே மிகுதியும் எழுதி வந்தேன். ‘உடுக்கைப் பாடல்களில் சக்தியின் ஒருமைப்பாடு’ என்ற எனது முதல் கட்டுரை தோழர் **முனைவர் சி. மகேசுவரன்** துணையால் இ. ப. த. மன்ற 13–ஆம் கருத்தரங்க ஆய்வுக் கோவையில் வெளிவந்தது.

அடுத்தடுத்த எனது கட்டுரைகள் தமிழ்ப்பொழில், பண்பாட்டு ஆய்வு முதலிய இதழ்களில் வெளிவந்தன. 1982-இல் பூண்டிப் புட்பம் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் பொறுப்பேற்றிருந்த **பேராசிரியர் ம. செ. இரபிசிங்** அவர்கள் தமிழ்த்துறைச் சார்பாகப் பண்பாட்டு ஆய்வு (Cultural Research) என்ற இதழைத் தோற்றுவித்தார்கள். தொடர்ந்து இந்த இதழ் வெளிவராதது தமிழ் இலக்கிய ஆராய்ச்சி வரலாற்றிற்குப் பெரிய இழப்பு என்றே கருத வேண்டி உள்ளது. இந்த இதழில் நாட்டுப்புறச் சமயப் பண்பாடு குறித்துத் தொடர்ந்து கட்டுரைகள் எழுதி வந்தேன்.

இந்தப் பின்னணியில் 1983-இல் உருவாக்கப்பட்டதே இந்த நூல். இந்நூலின் பின்னால் மறைந்திருக்கும் **பேராசிரியர் ம. செ. இரபிசிங்** அவர்களின் நெறி ஆளுகையும் ஆர்வமும் ஆலோசனையும் நன்றியோடு போற்றுவதற் குரியன.

1983-இல் எழுதப் பெற்ற இந்நூல் எவ்வித மாற்றமும் இன்றி அப்படியே அச்சிடப்பட்டுள்ளது. என் ஆய்வுப் போக்கை மதிப்பீடு செய்வதற்கு இது ஒரு வாய்ப்பாகவும் அமையும்.

நூல் எழுதப் பெற்ற காலத்தில் துணைசெய்தவர் பலர் ஆவர். ஆசிரியர் மிருத்யுஞ்செயன், **சிற்பி ரேவதி கலைக்கண்ணன்**, தமிழாசிரியர் **ந. சண்முகம்** ஆகியோர் நன்றிக்குரியவர்கள். தோழர்கள் **பா. நடராசன், சி. மணி வண்ணன், தமிழாழிக் கொற்கைவேந்தன்** ஆகியோர்க்கும் இந்நூல் உருவாக்கத்திற்கும் தொடர்பு உண்டு. இவர் களுக்கான நன்றி மகிழ்ச்சியோடு இங்குப் பதிவாகிறது.

நூல் எழுதிய காலத்தில் தகவல் தந்தோர் பலர் இன்று உயிருடன் இல்லை. இவர்களின் தூய நினைவைப் போற்றுதல் வேண்டும்.

* * *

தமிழர்களின் கோயில் பண்பாடு என்ற ஒன்றைக் கட்டமைக்கும் முயற்சியாக இந்நூல் தோன்றக் கூடும். ஆனால் சைவம், வைணவம், சிறுதெய்வச் சமயம் மூன்றையும் ஒரு பண்பாடாக அடக்கும் முயற்சி மேற்கொள்ளவில்லை என்பதை இங்கே அடிக்கோடிட்டுச் சுட்டுதல் வேண்டும். சைவம் வைணவம் ஒருபுறமும் நாட்டுப்புறத் தெய்வச் சமயம் ஒருபுறமும் தனித் தனியேதான் நிற்கின்றன. சைவ வைணவத்தை நாட்டுப்புற மக்கள் தம் அனுபவம் சார்ந்த நிலையில்தான் / தம் வாழ்க்கையோடு தொடர்பு கொண்ட நிலையில்தான் சில இடங்களில் ஏற்றுக் கொண்டுள்ளனர். இந்நிலையைத் தவிர ஏனைய இடங்களில் அச்சமயங்கள் தனியேதான் நிற்கின்றன என்பதையும் இங்கே கூறுதல் வேண்டும். என்றாலும் தவிர்க்கமுடியாதபடி வேதாகமங்கள் சார்ந்த சைவ வைணவப் பண்பாடும் தமிழக நாட்டுப்புற மக்களின் உயிர்ப்போடு கூடிய நாட்டுப்புறச் சமயமும் சேர்ந்ததே "தமிழரின் கோயில் பண்பாடு" என்று கூற வேண்டியுள்ளது.

கோயில் பண்பாடு என்ற பொருண்மை பற்றிய ஒரு முன்மாதிரி அளவீட்டு நூலாக இதனை வாசகர்கள் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

* * *

இந்நூல் வெளிவருவதில் மகிழ்ச்சி கொள்ளும் எம் நிறுவன இயக்குநர் **முனைவர் எல். இராமமூர்த்தி** அவர்களுக்கும் நிறுவனத் தோழர்களுக்கும் நிறைந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்பன்

**சிலம்பு நா. செல்வராசு**

# உள்ளே

## பகுதி ஒன்று

## பகுதி இரண்டு

# முன்னுரை

பண்டைய கிரேக்கர்களுடைய சிறப்பான வாழ்விற்குக் காரணமாகக் "கோயில் பண்பாடு" அமைந்ததைப் போலத் தமிழர்களுடைய மேம்பட்ட வாழ்விற்கும் "கோயில் பண்பாடு" பெரிதும் காரணமாக அமைந்துள்ளது. கோயில்கள் தமிழர்களுடைய வாழ்க்கையோடு பல நிலைகளிலும் பின்னிப் பிணைந்து நிலைத்தன. எனவேதான் தமிழர்கள், கோயிலைச் சுற்றிலும் குடியிருப்புப் பகுதிகளை அமைத்துக் கோயிலோடு நீக்கமற நிலைத்து வாழும் முறையைக் கையாண்டனர்.

தென்னகத்தில், குறிப்பாகத் தமிழகத்தில் அதிகமாகக் கோயில்கள் அமைந்திருந்தாலும், தஞ்சை மாவட்டத்தில் தான் ஏனைய மாவட்டங்களைவிட அதிக எண்ணிக்கையிலான கோயில்கள் அமைந்துள்ளன. தஞ்சைத் தரணியிலுள்ள கோயில்கள், கலை வளமும், இலக்கியச் செழுமையும் மிக்கனவாகும். எனவே தமிழர் கோயில் பண்பாட்டைப் புரிந்து கொள்ளத் தஞ்சை மாவட்டக் கோயில்கள் பெரிதும் துணை செய்கின்றன. தஞ்சை மாவட்டத்தில் கோயில்கள் மிகுதியாக உள்ள சீர்காழி வட்டம் இந்த ஆராய்ச்சிக்குக் களமாகக் கொள்ளப் பெற்றுள்ளது.

தமிழர்கள் கோயில்களோடு கொண்டுள்ள தொடர்பால், சமய வாழ்க்கைப் பல சிறப்புக் கூறுகளைப் பெற்றிருந்தது. தமிழர்களின் புராதனக் கலைகளும், இலக்கிய வளங்களும், வழிபாடு போன்ற செயற்பாடுகளும், மக்களின் உயர் மனப்பான்மையையும், பக்தி நெறியையும், சமயப் பண்பாட்டையும் காட்டவல்லனவாகும். இவை அறிவியல் வளர்ச்சியின் புற மாறுதல்களுக்குட்பட்டு, மறைந்தும், அருகியும், மாறியும் வருகின்றன. இவை அழியாமல் பதிவு செய்து பாதுகாப்பதற்கு இவ்வாய்வு

வாய்ப்பளிக்கிறது. பண்டைக் காலந்தொட்டுத் தமிழர்களின் வாழ்வில் ஊடுருவிப் பரந்து நிலைத்தவை கோயில்களே ஆகும். இக்கோயில்களை ஆராய்வதின் மூலம் தமிழர்களின் சமயப் பண்பாட்டைப் புரிந்து கொள்ள இவ்வாய்வு துணை செய்கிறது. தமிழ் இலக்கியங்களில் ஒரு பெரும் பிரிவான பக்தி இலக்கியங்கள் கோயில்களினால் வளர்க்கப் பட்டனவே ஆகும். இவ்வாய்வு, பக்திப் பாடல்கள், புராணங்கள், சிற்றிலக்கியங்கள், தத்துவப் பாடல்கள் முதலிய இலக்கியங்களின் வளத்தைத் தெரிந்துகொள்ளத் துணை செய்கிறது. மேலும் தஞ்சை மாவட்டத்தில், சைவ வைணவச் சமயங்கள் தழைத்தோங்கி, சமயம் வளர்த்த பெருமையையும் புரிந்து கொள்ள இவ்வாய்வு வாய்ப் பளிக்கிறது.

இதுகாறும் கோயில்களைப் பற்றி வந்த நூல்களை நான்கு பெரும் பிரிவுகளுக்குள் அடக்கலாம்.

**கோயில் பற்றிய நூல்கள்/ஆய்வுகள்**

| (1) | (2) | (3) | (4) |
|---|---|---|---|
| தலபுராணம் தோத்திரப் பாடல்கள் முதலியன. | கோயில்களின், புராண, இலக்கிய, கலை, கல்வெட்டுச் சிறப்புப் பற்றிய தனி நூல்கள். | பத்திரிக்கைகள், இதழ்கள், வழங்கும் திருத்தலப் பெருமை குறித்த கட்டுரைகள் முதலிய பல. | ஆய்வேடு கள் |

(1) கோயில்களுக்குப் புராணமெருகேற்றி, இறைத் தன்மை மிளிர உலவ விட்ட பெருமை தலபுராணங் களையே சாரும். "காழித்தலபுராணம்", "புள்ளிருக்கு வேளூர்த் தலபுராணம்", முதலிய தல புராணங்களை இதற்குச் சான்றுகளாகக் கூற இயலும். இவையல்லாமல், அடியார்கள் கோயிலைப் பற்றி எண்ணிறந்த தனிப்பாடல் களையும், சிற்றிலக்கியங்களையும் அருளிச் செய்துள்ளனர்.

தேவார திருவாசக நாலாயிரத் திவ்ய பிரபந்தப் பாடல் களையும், "திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ்", "முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ்" – போலும் சிற்றிலக்கியங்களையும் இதற்குச் சான்றுகளாகக் கூறலாம்.

(2) இரண்டாம் நிலையாக, கோயில்களின் புராணங் கள், இறைவன் கீர்த்தி, கட்டட அமைப்பு, சிற்பங்கள், இலக்கியங்கள், கல்வெட்டுகள், ஓவிய நடன நுணுக்கங்கள், கோயிலின் காலம், அமைவிடம், செல்லும் வழி போன்ற பல செய்திகள் அடங்கிய நூல்கள் பல வெளிவந்துள்ளன.

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் "வேங்கடம் முதல் குமரி வரை" – என்ற நூலை; "பாலாற்றின் மருங்கினிலே", "பொன்னியின் மடியினிலே", "காவிரிக் கரையிலே", பொருநைத் துறையிலே"–என்னும் பகுதிகளாக்கி, தமிழகக் கோயில்களைப் பற்றி ஆராய்ந் துள்ளார். நா. சுப்புரெட்டியார் அவர்கள், "மலைநாட்டுத் திருப்பதிகள்", "சோழ நாட்டுத் திருப்பதிகள்", "தொண்டைநாட்டுத் திருப்பதிகள்", "பாண்டிய நாட்டுத் திருப்பதிகள்" – என்ற நூல்களில் பல வைணவத் தலங்களை ஆராய்ந்துள்ளார். மேலும், கண்ணப்ப முதலியார் அவர்களின், "தொண்டை நாட்டுப் பாடல் பெற்ற சிவத்தலங்கள்", "பாண்டிய நாட்டுப் பாடல் பெற்ற சிவத்தலங்கள்" என்னும் நூல்களும், கி. முத்துப்பிள்ளை அவர்களின் "சிறப்புமிக்க சிவாலயங்கள்". "புகழ் மணக்கும் வைணவத் தலங்கள்" என்னும் நூல்களும் மேற்கூறிய செய்திகளில் சிலவும், பலவும் பெற்று அமைந்தனவாகும்.

கலை, கல்வெட்டு, வரலாறு இவற்றிற்கு முக்கியத் துவம் கொடுத்துச் சில நூல்கள் வெளிவந்துள்ளன. சிற்பங்கள், ஓவியங்கள், செப்புத் திருமேனிகள், கல்வெட்டுகள் காட்டும் வரலாற்றுச் செய்திகள் முதலிய வற்றின் சிறப்புகள் இந்நூல்களில் அடங்கியுள்ளன.

ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளை அவர்களின், "சோழர் கோயிற் பணிகள்", "தஞ்சைத் திருக்கோயில்கள்", "தஞ்சை இராசராசேச்சுவரம்", - முதலிய நூல்களும், குருசாமி தேசிகர் அவர்களின் "தென்னாட்டுத் திருக் கோயில் கல்வெட்டுக்கள்", இரா. நாகசாமி அவர்களின், "தமிழகக் கோயில் கலைகள்", இராமசாமி அவர்களின் "தமிழ்நாட்டுச் செப்புத் திருமேனிகள்", எஸ். ஆர். பால சுப்பிரமணியன் அவர்களின், "சோழர் கலைப்பாணி", "முற்காலச் சோழர் கலையும் சிற்பமும்" முதலான பல நூல்களும் மேற்கூறிய செய்திகளை உள்ளடக்கியனவே ஆகும். மேலும் "பழனித் தலவரலாறு", "ஸ்ரீரங்கநாதர் கோயில் வரலாறு", "தில்லைச் சிற்றம்பலவன் கோயில்"- எனத் தனியொரு கோயில் பற்றிய நூல்களும் வந்துள்ளன.

(3) மூன்றாவதாக; திருத்தலங்கள் பெருமை குறித்துப் பத்திரிக்கைகள், இதழ்கள் வெளியிடும் கட்டுரைகளைக் குறிப்பிடலாம். பரணிதரன் (ஆனந்த விகடன்) பொன் பாஸ்கர மார்த்தாண்டன் (இதயம் பேசுகிறது) போன்றோர் இக்கட்டுரைகளை எழுதி உள்ளனர். "திருக்கோயில்", "ஞான பூமி", "ஞானசம்பந்தம்", தர்மசக்கரம்", "திருக்கயிலை" - முதலியன சமயந் தொடர்பான இதழ் களாக, சமயக் கட்டுரைகளைத் தாங்கி வெளிவருகின்றன.

(4) நான்காவதாக; கோயில் பற்றிப் பல ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. கே. கே. பிள்ளை அவர்கள் "சுசிந்தரம் கோயிலையும்", சி. கிருட்டினமூர்த்தி அவர்கள் "திருவாரூர் கோயிலையும்", கே. கோபாலகிருட்டினன் அவர்கள் "திருக்கழுகுன்றக் கோயிலையும்", உமா மகேசுவரி அவர்கள் "நெல்லையப்பர் கோயிலையும்", கே. வி. இராமன் அவர்கள் "காஞ்சி காமாட்சியம்மன் கோயிலையும்", ந. கல்யாணசுந்தரம் அவர்கள் "திருச் செந்தூர் முருகன் கோயிலையும்", சி. மணி அவர்கள் "கும்பகோணம் சக்கரபாணி கோயிலையும்" - எடுத்துக்

கொண்டு ஆராய்ச்சி செய்துள்ளனர். மேலும் கதிர்வேலு அவர்கள் "சேலம் மாவட்டத்துச் சிறு தெய்வங்கள்" குறித்தும் ஆய்வு செய்துள்ளார்.

இவை வரலாற்றுப் பின்னணி, நில அமைப்பு, கட்டட அமைப்பு, காலம், செயற்பாடு, கலைகள், கல்வெட்டுகள், இலக்கியங்கள், சமுதாயத் தொடர்பு போன்ற செய்திகளை மட்டும் உள்ளடக்கியனவாக உள்ளன.

மேற்குறிப்பிட்ட நூல்களும், கட்டுரைகளும், ஆய்வேடு களும், நாடு தழுவிய நிலையில் உள்ள கோயில்களையோ, அல்லது தனித்த ஒரு கோயிலையோ கொண்டு பொது வான சிறப்புச் செய்திகளையே கூறியுள்ளன.

மேற்குறிப்பிட்ட நூல்களிலும், கட்டுரைகளிலும், ஆய்வேடுகளிலும் மேற்கொள்ளப்படாத, ஒரு வட்டந் தழுவிய அளவில், சைவ, வைணவ, சிறு தெய்வக் கோயில் களை உள்ளடக்கிக் கோயில் அமைந்திருக்கும் வட்டம் மற்றும் ஊர்கள் பற்றிய செய்திகளும், சமய நிலையும், நேர்த்திக்கடன், நம்பிக்கை, செயற்பாடு, விழா, கூத்துக்கள் முதலியவற்றால் வெளிப்படும் பண்பாட்டுக் கொடை பற்றியும், கோயிலினால் வெளிப்படும் இலக்கியக் கொடை பற்றியும், சமுகத் தொடர்பு குறித்தும், சமூக இயல் கண்ணோட்டத்தோடு ஆய்வு செய்வது இதுவே முதல்முறையாகும். இப்பகுப்பு முறையையோ, அணுகு முறையையோ, மேற்குறிப்பிட்ட நூல்கள் முதலியன மேற் கொள்ளவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. இவ்வாய்வு தமிழர்களின் கோயில்கள் மூலம் வெளிப்படும் பண்பாட்டுக் கொடை பற்றிய உண்மைகளைத் தெரிந்து கொள்வதற்கு வாய்ப்பளிக்கிறது.

இவ்வாய்வேடு ஏழு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. முதல் இயலில் ஆய்வுப் பொருள் அறிமுகம், வரையறை போன்ற செய்திகள் இடம் பெறுகின்றன. ஆய்வுப்

பின்னணியின் முக்கியத்துவத்தைக் கருதி, இரண்டா இயலில் சீர்காழி வட்டத்தின் பெயர், அமைப்பு, சமயநிலை பொதுவாக வட்டத்திலுள்ள கோயில்கள் பற்றிய செய்திக ஆராயப்பட்டுள்ளன.

மூன்றாம் இயலில் கோயில் அமைந்துள்ள ஊர்க கோயில்களின் அமைப்புகள், தலவிருட்சம், தீர்த்தம், இை உருவம், கீர்த்தி ஆகியன பற்றிய செய்திகள் ஆராய பட்டுள்ளன. நான்காம் இயலில் கோயிலின் செயற்பாடா வழிபாட்டு முறைகள், பாடல்கள், நம்பிக்கைகள், நேர்த்தி கடன்கள், விழாக்கள், விழாக்காலக் கூத்துக்கள் ஆகி செய்திகள் ஆராயப்பட்டுள்ளன. ஐந்தாம் இயல் கோயிலி வரலாறு பற்றியமைந்தது. இவ்வியலின் விரிவுக்கு அஞ் சீர்காழி சட்டைநாதர் கோயிலின் வரலாறு மட்டு ஆராயப்பட்டுள்ளது. ஆறாவது இயல் கோயில் சமுதாய தோடு கொண்டுள்ள தொடர்பை விளக்குவது. இதில் பூை செய்வோர், பாடகர்கள், பாமர மக்களின் வழிபாடு மரபுகள், கோயிலுக்கும் சமுதாயத்திற்குமுள்ள தொடர் ஆகிய செய்திகள் ஆராயப்பட்டுள்ளன. ஏழாவது இய அரிதாகப் பெறப்பட்ட சில வழிபாட்டுச் செய்திக கட்டுரைகளாக இடம் பெற்றுள்ளன. இவற்றை இந்நூலி இரண்டாம் பகுதியாகக் கொள்ளுதல் வேண்டும்.

இக்கள ஆய்வில் ஆய்வு தொடர்பாகச் செய்திகளை சேகரிப்பதற்குத் தலபுராணங்களும், பக்தி இலக்கியங்களும் கல்வெட்டுக்களும், செவிவழிச் செய்திகளும், சுவடிகளும் அறநிலைத்துறை அறிக்கைகளும், கோயிலோடு தொட புடையவர்கள் தந்த தகவல்களும், சமயத் தொடர்புடை பெரியோர்கள் தந்த செய்திகளும் பெருமளவில் துணை செய்தன. எண்ணற்றசெவிவழிச்செய்திகளையும், நம்பிக்கை கதைகளையும் பலர் எடுத்துரைத்தனர். சுவடிகளில் உள்ள செய்திகள், பழைய கையெழுத்துப் பிரதிகொண்டு சரிபார்க் கப்பட்டு, அந்த வடிவிலேயே கொடுக்கப்பட்டுள்ளன.

## அ. சீர்காழி வட்டம்

**பெயர்க்காரணம்:**

தஞ்சைத் தரணியில் வளங்கொழிக்கும் காவிரி நதியின் கடைமுகப் பகுதியில் அமைந்துள்ள வட்டம் சீர்காழி யாகும்.

சோழவள நாட்டில் உள்ள பாடல் பெற்ற சிவத்தலங்களுள் பதினான்காவது தலமாக விளங்குவது சீர்காழி.[1] காளியங்கன் என்னும் பாம்பு கண்ணனால் வலியழித்து ஏவ, அப்பாம்பு இத்தலத்தை அடைந்து பிரும்மபுரீசுவரரை வழிபட்டதால் "ஸ்ரீ காளிபுரம்" - என்ற பெயரை இத்தலம் பெறுவதாயிற்று. நடராச பெருமானோடு நடவாதம் புரிந்த காளிதேவி தன் குற்றம் நீங்க இறைவனை இத்தலத்தில் வணங்கியதாலும் "ஸ்ரீ காளிபுரம்" - என்ற பெயர் ஏற்படுவதாயிற்று. இப்பெயரே "ஸ்ரீ காளி" எனவும், "சீகாளி" எனவும் "சீகாழி" எனவும் "சீர்காழி" எனவும் மருவிய வடிவைப் பெற்றது.[2] இவ்வூரைக் 'கழுமலம்' என்றே பழந்தமிழ் நூல்கள் குறிப்பிடுகின்றன. "காவிரி நாடன் கழுமலங் கொண்ட நாள்" - என்று களவழி நாற்பது கூறுகிறது.[3] திருஞானசம்பந்தர் "கழுமல மூபதி" என்றும்[4] சேக்கிழார் "கழுமல மூதூர்" என்றும்[5] கூறுகின்றனர்.

**சீர்காழியின் பிற பெயர்கள்:**

சேக்கிழார் பெருமான், திருஞானசம்பந்தர் அவதாரத் தலத்தைக் கூறுமிடத்துச் சீர்காழிக்குரிய பன்னிரு பெயர் களைப்,

பிரமபுரம் வேணுபுரம் புகலிபெரு வெங்குருநீர்ப்
பொருவில்திருத் தோணிபுரம் பூந்தராய் சிரபுமுன்ரம்

வருபுறவஞ் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம்
பரவுதிருக் கழுமலமாம் பன்னிரண்டு
திருப்பெயர்த்தால்

எனக் கூறியுள்ளார்.[6] பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச் சைவயம், கழுமலம் என்ற அப்பன்னிரு பெயர்களேயன்றி, சங்கநிதிபுரம், பசுமநிதி புரம், சிவாசாரியபுரம், பராசரசேத்திரம், புனர் சன்மபுரம், கிரிபுரம், உமாபதிபுரம், சீவன்முத்திபுரம், நீலகண்ட வெற்பு, மாலைமாற்றுபதி, எழுகூற்றிருக்கைப்பதி, இலிங்காடவி, குய்யகாசி, மூலாதார சேத்திரம் என்னும் பெயர்களும் உண்டு.[7] இப்பெயர்களுக்குரிய காரணிகளைப் பற்றித் தல வரலாறு கீழ்க்குறிப்பிடுமாறு கருத்துக்களைத் தெரிவிக்கின்றது.[8]

பிரமர்கள் பலர் தங்கள் படைத்தல் தொழில் இடையூறின்றி முற்றுப் பெற இறைவனை வழிபட்டு வந்ததால் "பிருமபுரம்" எனப்பட்டது. இறைவன் மூங்கில் வடிவாய்த் தோன்றிச் சூரபன்மனுக்கு அருள் செய்ததால் "வேணுபுரம்" என்றழைக்கப்பட்டது. சூரபன்மனுக்கு அஞ்சிய தேவர்கள் தங்களுக்குப் புகலிடமாகக் கொண்டு பூசித்தமையால் "புகலி" என்று பெயர் பெற்றது. அசுரர்களால் தன் வலி குன்றிய காரணத்தால் சுக்கிரன் பூசித்ததாலும், யமதர்மன் குருத்துவம் பெற இறைவன் குருவாகத் தோன்றி அருள் செய்ததாலும், குருத்தன்மை இழந்த வியாழன் குருத்துவம் பெறப் பூசித்ததாலும் "வெங்குரு" என்ற பெயர் தோன்றியது. ஊழிக் காலத்தில் எல்லா உலகமும் அழிந்தபோது இத்தலம் ஒன்றே மேன்மை பெற்று விளங்கும் வண்ணம் சிவபெருமான் உமையம்மையோடு சுத்தமாயையைத் தோணியாகக் கொண்டு வந்து தங்கியதால் "தோணிபுரம்"-

என்று அழைக்கப்பட்டது. இரணியாக்கரனைக் கொன்ற வராகமூர்த்தி வழிபட்டதால் "பூந்தராய்" எனப்பட்டது. தலைக் கூறாகிய இராகு வணங்கியதால் "சிரபுரம்" என்ற பெயர் தோன்றியது. சிபிச் சக்கரவர்த்தி நற்கதி அடைந்தமையால் "புறவம்" எனவும் பெயர் பெற்றது.

சண்பைப் புல்லால் மாய்ந்த தம் குலத்தவரால் வந்த பழி தன்னைத் தொடராது இருக்கும்படி கண்ணன் வழிபட்டதால் "சண்பை நகர்" எனப்பட்டது. எத் தலங்களிலும் தொலையாத தம்மலத் தொகுதி நீங்குமாறு உரோமச முனிவர் இறைவனை வணங்கியதால் "கழுமலம்" என்றழைக்கப்பட்டது. திருஞானசம்பந்தர் இப்பன்னிரு பெயர்களையும் தன் பதிகங்களில் வைத்துப் பாடிப் போற்றியுள்ளார்.[9]

### சீர்காழி வட்டத்தின் அமைப்பு:

பழைய தஞ்சை மாவட்டத்தின் வடக்குப் பகுதியில் அமைந்திருக்கும் வட்டம் சீர்காழி யாகும். இவ்வட்டம் இரு ஒன்றியங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவ்வட்டத்தின் வடக்குப்பகுதி கொள்ளிடம் ஒன்றியமாகவும், தெற்குப் பகுதி சீர்காழி ஒன்றியமாகவும் வகுக்கப்பட்டுள்ளது. நாற்புறமும் ஆறுகளும், கடலும் சூழ்ந்து சீர்காழி வட்டத்தை ஒரு தீவாக ஆக்கியுள்ளன. கிழக்கு எல்லையாக கொடியம்பாளையம் முதல் பூம்புகார் வரையிலும் வங்கக் கடல் பரவி நிற்கிறது. வடக்கு எல்லையாகவும், வடமேற்கு எல்லையாகவும் கொள்ளிடம் நதி ஓடுகிறது. மேற்கே பழவாறும், தென்கிழக்கே காவிரி நதியும் எல்லைகளாக அமைந்துள்ளன. கொள்ளிடம், வங்கக் கடலில் சங்கமமாகும் இடத்தருகே உள்ள கொடியம்பாளையம், கொட்டயமேடு ஆகிய ஊர்கள் சீர்காழி வட்டத்தின் தீவுகளாகும்.

**புகழ் பெற்ற ஊர்கள்**

சீர்காழி நகரை மையமாக வைத்து ஏனைய ஊர்கள் இருக்குமிடத்தை அறியலாம். சீர்காழியின் கிழக்கிலும், மேற்கிலும் முறையே திருமுல்லைவாயிலும், கொண்டலும் அமைந்துள்ளன. தெற்கில் வைத்தீசுவரன் கோயில் இருக்கிறது. வடக்கில் கொள்ளிடம், புத்தூர், அரசூர் ஆகிய ஊர்கள் உள்ளன. தென்கிழக்கில் திருநகரி, திருநாங்கூர், திருவெண்காடு, பூம்புகார் ஆகிய ஊர்கள் அமைந்திருக்கின்றன. வடகிழக்கில் மகராசபுரம், மாதானம், மகேந்திரப்பள்ளி, ஆச்சாள்புரம், கூட்டுமாங்குடி, நல்லூர் ஆகிய ஊர்கள் உள்ளன. தென்மேற்கில் திருப்புன்கூர், ஆதனூர், பெருமங்கலம் ஆகிய ஊர்கள் அமைந்து உள்ளன. வடதிசையில் முருகன் திருத்தலமான திருமயிலாடி என்ற நகர் உள்ளது. வடமேற்கில் உள்ள வடரங்கம் வைணவத் தலமாகும். இவைகளில் சில புகழ்பெற்ற ஊர்கள் வருமாறு:

**சீர்காழி:**

வட்டத்தின் தலைநகரம். திருஞானசம்பந்தர், அவதரித்து ஞானப்பால் உண்ட தலம்.[10] வட்டாச்சி அலுவலகமும், நீதிமன்றமும் இந்நகரில் உள்ளன. இந்நகரைச் சுற்றிலும் அமைந்திருந்ததாக எண்ணப்படும் நவக்கிரகக் கோயில்களைப் பற்றி தற்போது ஆய்வு நடந்து வருகிறது.[11] ஆய்வின் முதன்மைக் களமாக விளங்குவது இவ்வூர்.

**பூம்புகார்:**

இது சோழர்களின் தலைநகராக முற்காலத்தில் விளங்கிய நகர். இன்று காவிரிப்பூம்பட்டினம் என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. காவிரி நதி புகும் பட்டினம் என்பதால் இப்பெயரைப் பெற்றிருக்கவேண்டும். காவிரி

நதி கடலோடு கலக்கும் சங்கம முகம் இங்குதான் உள்ளது. சிலப்பதிகாரத்தின் ஒரு களமாக விளங்கிய ஊராகும். இன்றைய புகார் பண்டைய புகாரின் புறநகராக அமைந் திருக்கவேண்டும் என்ற ஐயப்பாடுப் பொதுவாக நிலவி வருகிறது.

**வைத்தீசுவரன் கோயில்:**

இவ்வூர் புகழ்பெற்ற சிவத்தலமாகும். 'புள்ளிருக்கு வேளூர்' என்பது ஆதிப்பெயர். புள் (சடாயு) இருக்கு (வேதம்) வேள் (முருகன்) ஊர் (சூரியன்) ஆகிய நால்வரும் வழிபட்டதால் "புள்ளிருக்கு வேளூர்" எனவும், சடாயு வழிபட்டதால் "சடாயுபுரி" எனவும், வேதம் வழிபட்ட தால் "வேதபுரி" எனவும், கந்தன் வழிபட்டதால் "கந்தபுரி" எனவும், சூரியன் வழிபட்டதால் "பரிதிபுரி" எனவும், அங்காரகன் வழிபட்டதால் "அங்காரபுரம்" எனவும், அம்பிகை வழிபட்டதால் "அம்பிகாபுரம்" எனவும் பல பெயர்களை இத்தலம் பெறுவதாயிற்று. இங்குதான் புகழ்பெற்ற வைத்தியநாதர் கோவில் உள்ளது.

**திருப்புன்கூர்:**

இங்குச் சிவலோக நாதர் கோவில் உள்ளது. இக்கோயி லின் தல விருட்சம் புங்கு மரமாகும். எனவே திருப்பன்கூர் எனப் பெயர் வழங்கலாயிற்று. திருநாளைப் போவார்க்காக வேண்டி நந்தி விலகிய தலம் இதுவாகும்.

**திருநாங்கூர்:**

சீர்காழியிலிருந்து 7 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள நகராகும். ஏழு சைவ கோயில்களும், ஏழு வைணவ கோயில்களும் இங்குள்ளன.

**திருநகரி:**

வயலாழி மணவாளர் என்னும் கல்யாண ரெங்கநாதர் கோயில் இங்குள்ளது. திருமால் திருமணக் கோலத்தோடு வந்து திருமங்கை மன்னனுக்கு அருள் செய்த தலம் இதுவாகும்.

**திருவெண்காடு:**

காவிரிக்கு வடபால் விளங்கும் சைவப் பதிகளில் பதினோராவதாகப் பண்டையோரால் வைத்து எண்ணப் படுவது திருவெண்காடாகும். வடமொழியில் 'சுவேதா ரண்யம்' என்ற பெயர் வழங்குகிறது. (சுவேதம்–வெண்மை, ஆரண்யம் – காடு) "வேதவெண்காடு", "சுவேதவனம்", "காலாஞ்சரம்", "வில்வ வனம்", "மகாவரங்கம்", "முத்தி வாயில்", "முத்திநகர்", "தமோநாசபுரம்", "முருகன் பூண்டி", "பாதாளகயிலாயம்", "ஞானவனம்", "சிவா னந்தக்காடு" முதலிய பெயர்களும் இப்பதிக்குண்டு.[13] இங்கு அகோரமூர்த்தியின் கோயில் உள்ளது.

**திருமுல்லைவாயில்:**

கடற்கரை நகராகும். இங்கு முல்லை வனநாதர் கோயில் உள்ளது. முல்லைநாதர் பெயரால் இவ்வூர் இப் பெயரைப் பெற்றது.

**வடரெங்கம்:**

திருவரங்கப் பெருமான் எழுந்துள்ள வைணவத் தலமாகும். கொள்ளிட நதியோர ஊர்.

**திருமயிலாடி:**

இவ்வூர் முருகன் தலமாகும். இவ்வூருக்கு அருகிலுள்ள பழமையான ஒரு கோயிலைக் கண்டு புதுப்பித்துத் "தென் திருப்பதி" என்ற பெயரால் வழிபட்டு வருகின்றனர்.

வருசபத்து:

மார்க்கண்டேயர் திருக்கடையூர் செல்லும் வழியில் பத்து இலிங்க மூர்த்தங்களை வரிசையாக வைத்து வணங்கியதால் "வருச பத்து" (வரிசைப்பத்து) என்ற பெயர் ஏற்பட்டது.

மாதானம்:

பெரிய பிரார்த்தனைத் தலமாகும். இங்கு மாரியம்மன் கோயில் ஒன்று உள்ளது.

ஆச்சாள்புரம்:

நல்லூர்ப் பெருமணம் என்ற பழைய பெயரை உடையது. திருஞானசம்பந்தர் முக்தி பெற்ற தலமாகும்.

## ஆ. சமயநிலை

"சமயம்" என்பது சமூக உறவை வளர்க்கும் ஒரு சாதனம். மனிதன் தன் ஆசைகளைச் சொல்லிக் கொள்ளவும், தன் ஏமாற்றங்களுக்கு ஆறுதல் காணவும் இது உதவுகிறது.[14] காரணம் தெரியாத முடிபுகள், பரம்பரையாக வந்த கொள்கைகள், புராணக்கதைகள் இவற்றை விலக்கி விட்டால் சமயம் என்பதே இல்லாமல் போய்விடும். மனிதனுக்கு ஏற்படும் அடிப்படைத் தேவையை நிரப்பிக்கொள்வதற்காக மனிதனுடைய அறிவு படைத்த ஒன்றே சமயமாகும்.[15] சமய உணர்வு உலகெங்கும் எக்காலத்தும் காணப்படுவதொன்று. ஒவ்வொரு மனிதனும் ஒரு சமயத்தைச் சார்ந்தே வாழ்கிறான். சமயம் என்ற தமிழ்ச் சொல்லுக்கு இணையாக 'ரிலிஜன்' (RELIGION) என்ற ஆங்கில சொல் பயன்படுத்தப்படுகிறது. 'ரிலிஜன்' என்பதற்கு இரு பொருள் உண்டு.

1. குறி சொல்வது. அதாவது இறைவன் திருவுள்ளத்தை அறிவதற்குச் சில நிகழ்ச்சிகளையும், காட்சிகளையும் அடையாளமாகக் கொள்வது.
2. இறைவனோடு ஒன்று படுத்துவது.[16]

சமயக் கொள்கையை ஹெர்பர்ட் பிரபு' பின்வருமாறு பகுத்துக்கூறுவர்:[17]

1. உயர்வற உயர்ந்த ஒரு பொருள் உண்டு என்ற நம்பிக்கை. இப்பொருள் எல்லவாற்றிற்கும் முதற் காரணமாயிருப்பது, வரம்பில்லா ஆற்றல் உடைமை முதலிய பதினோரு பண்புகளை உடையது.
2. இந்தப் பொருளை வழிபடுவது மனிதனின் கடமை ஆகும்.
3. அறமும், அன்பும் இவ்வழிபாட்டின் முதன்மையான கூறுகள்.
4. இப்பொருளுக்கு எதிராகச் செய்யும் பாவத்திற்கு மனம் வருந்தித் தகுந்த ஈடு செய்ய வேண்டும்.

என்று சமயக் கொள்கைகளை வரையறுத்துக் கூறியுள்ளார்.

**தமிழகத்தில் சமயநிலை:**

கடைச் சங்க காலத்திற்குப் பிற்பட்ட பகுதியில் வலுவுடன் திகழ்ந்த இரு மதங்கள் பௌத்தமும், சமணமும் ஆகும். களப்பிரர்களையும், பல்லவர்களையும் தமக்குத் துணையாகக் கொண்டு இம்மதங்கள் தமிழகத்தில் ஆழ வேரோடின. இம் மதங்களைப் புறங்கண்ட பெருமை சைவ, வைணவ சமயங்களைச் சாரும். ஆழ்வார்கள் நாயன்மார் களின் தோற்றம், இச்சமயங்களுக்கு மறுமலர்ச்சியைத் தோற்றுவித்தது. இதற்குப் பின்னர் வந்து நிலைத்த இசுலாம், கிருத்துவம் போன்ற மதங்கள் கூட இச் சமயங்களின் இடையே ஊடுறுவிப் பரவமுடியாத அளவுக்குச் சைவமும், வைணவமும் நிலைத்த தன்மையைப்

பெற்றுள்ளன. இன்றைய தமிழகத்தில் விளங்கி வரும் இரு பெரும் சமயங்கள் சைவமும், வைணவமும் ஆகும். சிவனைத் தலைவனாகக் கொண்டோர் சைவ சமயத்தவராவார். விட்டுணுவைத் தலைவனாகக் கொண்டோர் வைணவ சமயத்தவராவார்.

வேதாகம உபநிடத சட்தரிசன புராணோதிகாசமாகிய எல்லாம், 'சிவ' என்னும் இரண்டு எழுத்தில் அடங்கு கின்றன.[18] 'சிவ' என்னும் சொல் செம்மை என்பதன் அடியாகப் பிறந்தது. அது சிவப்பு என்றும், நன்மை என்றும், மங்களம் என்றும் பொருள்படும்[19] 'விட்டுணு' '(விஷ்ணு)' என்பதற்கு எங்கும் நிறைந்தது என்பது பொருள். ஒவ்வொரு பொருளின் உள்ளும், புறமும் நிறைந்தது அதனைக் காத்துக் கொண்டுள்ள பொருளுக்கே 'விட்டுணு' என்ற பெயரிட்டு வழங்கினார்.[20] 'விண்ணு' என்ற பெயரே 'விண்டு' எனவும் 'விஷ்ணு' எனவும் மாறிற்று. இருக்கு வேதத்தில் விண்ணிற் பரவிய கதிர் ஒளியே 'விட்டுணு' வாகப் பேசப்பட்டது.[21]

இவ்விரு தலைவர்களைக் கொண்ட சமயங்கள் இந்து மதத்தின் இரு கண்களாகும். இம்மதத்தைப் பற்றிக் கா. சுப்பிரமணியப் பிள்ளை அவர்கள் கூறுவது வருமாறு:[22] பல சமயங்கள் இணைந்ததுதான் இந்துமதம். உலகிலுள்ள மதங்களின் பெயர்கள் மூன்று காரணிகளின் அடிப்படையில் அமைவன. அவை கடவுள் பெயர், அல்லது ஆசிரியன் பெயர், அல்லது பிரமான நூலின் பெயர் என்பதாகும். ஆனால் இந்து மதம் அவ்வாறு அமையாது அம்மதத்தைத் தழுவிய மக்களைக் காரணமாக வைத்துப் பெயர் சூட்டப் பட்டுள்ளது. சிந்துநதிக்கரையில் உள்ள மக்களை மேலையர் இந்துக்கள் என்றனர். இந்துக்களுள் பல மதங்கள் இருப்பதை அறியாத மேலை நாட்டவர், இந்துக்கள் எல்லோருக்கும் ஒரு மதம் இருப்பதாக எண்ணி இந்து மதம் என்ற பெயரைத் தோற்றுவித்தனர். எனவே முற்காலத்தில்

வலுவுடன் விளங்கிய மதங்களாக சைவமும், வைணவமும் இருந்திருக்க வேண்டும். இந்து மதம் தோற்றுவிக்கப்பட்டவுடன் அம்மதத்தின் கூறுகளாக இச்சமயங்கள் இணைந்தன என்று ஊகித்தறிய வாய்ப்புண்டு.

## சீர்காழி வட்டச் சமய நிலை

சைவம், வைணவம் ஆகிய இரு சமயங்களும் இணைந்து தமிழகத்துப் பிற மதங்களைப் புறங்கண்டன. இந்தஇணைப்பின் காரணமாகத்தான் சில கோயில்களில் சிவனுக்கும், திருமாலுக்கும் சந்நிதிகள் அமைத்து வழிபாடு செய்யப்பட்டது. சிவத்தலமான வைத்தீசுவரன் கோயிலில் இராமர்க்குச் சந்நிதி இருந்தது என்றும், வைணவ வழிபாடு நடைபெற்றது என்றும் செவிவழிச் செய்தி யொன்று உண்டு.[23] அதே போல் சீர்காழி சட்டைநாதர் கோயில் ஞானசம்பந்தர் எழுந்திருக்கும் இடத்தில் திருமால் கோயில் இருந்ததாக ஓர் ஊகக் கொள்கை உண்டு. இதனை; இக்கோயிலை அடுத்து விளங்கும் "ஹரிகுளம்"[24] என்ற தீர்த்தமும், அதனை அடுத்த 'திருமஞ்சன வீதியும்' வைணவ சமயப் பெயர்களாய் விளங்குகின்றன என்ற சான்றுகளைக் காட்டி விளக்குவர்.[25] இவ்வாறாக இரு சமயங்கள் இணைந்துதான் இறைப்பணி ஆற்றி வந்திருக்கவேண்டும். சமயப் போட்டிகள் மிகுந்த காலத்தில் இவை பிரிந்தன.

## சீர்காழி வட்டத்தில் தோன்றிய அடியார்கள்

சீர்காழி வட்டம் பல சைவ, வைணவ அடியார்களைப் பெற்ற பெருமையை உடையது. திருஞானசம்பந்த்ர். இவர் காலத்தில் சீர்காழியில் வசித்த மற்றொரு நாயனார் கணநாதர். ஆதனூரில் நந்தனார். பெருமங்கலத்தில் அவதரித்த ஏயர்கோன்கலிக்காமர். பூம்புகார்ப் பல்லவனீச்சுரத்தில் தோன்றிய இயற்பகை நாயனார். காவிரிப்பூம் பட்டினத்து வணிகர் பட்டினத்தார். நல்லூர்ப் பெருமணத்தில் சோதியுட் கலந்தவர்கள் திருநீலநக்கர்,

முருகநாயனார், நீலகண்ட யாழ்ப்பாணர், மதங்கசூளாமணி, சிவபாத இருதயர், நம்பாண்டார். வைணவர்களில் ஆழ்வார் திருமங்கை மன்னன் முதலிய அடியார்களைப் பெற்ற பல திருத்தலங்களை உடையது சீர்காழி வட்டம்.

சீர்காழியில் அவதரித்த திருஞானசம்பந்த பெருமான், தோணியப்பர் தீர்த்தங்கரையில் ஞானப்பால் உண்டு சிவஞானம் பெற்றார். இதனைச் சேக்கிழார் பெருமான்,

சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகுஞ் சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில்ஓங் கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்

என்று போற்றுவார்.[27] திருஞானசம்பந்தரும், திருமங்கை ஆழ்வாரும் ஒரு காலத்தவரே என்றும், இருவரும் சந்தித்துக் கலந்துரையாடினர் என்றும் குரு பரம்பரைக் கதையொன்று உண்டு என்பர்.[28] இருவரும் வேறு காலத்தவர் என்றும் கூறுப. ஞானசம்பந்தர் தனது பதினாறாவது வயதில் நல்லூர்ப் பெருமணத்தில் திருமணநாளன்று இறைச் சோதியுட் புகுந்துய்ந்தார்.

கி. பி. ஐந்தாம் நூற்றாண்டைச் சார்ந்த நந்தனார் திருப்புன்கூர் சிவலோகநாதனைத் தரிசிப்பதற்காக வேண்டி நிற்க நந்தி மறைத்தது.

சிவலோக நாதன் திருச்சந் நிதானம்
மலையாகிய நந்தி மறைத் திடுமிங்கே
பலகாலஞ் செய்த பாழ்வினை குவிந்து
மலையாகி இப்படி மறைத்ததோ வென்றார்[29]

என்று இறைவனை வேண்ட நந்தி விலகியது. இறைவனை வணங்கி உய்ந்தார்.

திருப்புன்கூர்க்கு வடக்கே பெருமங்கலத்தில் அவதரித்த பெருமான் ஏயர்கோன் கலிக்காம நாயனார் ஆவார்.

சுந்தரருக்காக இறைவன் தூது நடந்ததைக் கேள்வியு
அவர்மீது வெறுப்புக் கொண்டார். இறையருளால்
வெறுப்பு நீங்கி நட்புக்கொண்டனர். பல்லவனீச்சுவரத்
இயற்பகை நாயனார் தோன்றி இறைவனுக்குத்
மனைவியையே அளித்த பெருமையைப் பெற்ற
பூம்புகாரில் தோன்றிய பட்டினத்தார் சைவ அடிகளான
திருவெண்காட்டில் அவதரித்த மற்றொரு குறிப்பி
தக்கவர் சிவஞான போதத்தை அளித்த மெய்கண்ட
ஆவார்.

சோழ மண்டலத்தில் திருவாலி நாட்டின்
திருக்குறையலூரில் தோன்றியவர் திருமங்கையாழ்வ
திருமால் கல்யாண ரெங்கநாதனாக வந்து திருவெ
டெழுத்து ஓதி ஞானம் கொடுத்து மீண்டார். இ
சீர்காழி வட்டத்தில் பதினெட்டு வைணவக் கோயில்க
மங்களாசாசனம் செய்துள்ளார்.

மணிமாடக் கோயில் வணங்குஎன் மனனே
வைகுந்த விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே
அரியே விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே

என்று திருநாங்கூர் திவ்ய பதிகளைப் பாடியுள்ளார்.[30]

**இன்றைய சமயநிலை:**

பொதுவாக இந்த வட்டத்தில் சிறு தெய்வ வழிப
மிகுதியும் நடைபெறுகிறது. சைவ சமயத்தினரும், வை
சமயத்தினரும் வழிபடும் பெருமையைச் சிறு தெய்வ
பெற்றதால் இவ்வழிபாடு அதிகமாயின எனலாம். அ
வைணவ சமயத்தைச் சார்ந்தோர் சமயப்பற்று மிக்
களாய்க் காணப்படுகின்றனர். இப்பகுதியில் சைவக் கோ
களைப் பாதுகாக்கத் தருமபுர மடம் இருப்பது
வைணவக் கோயில்களைப் பராமரிக்க நிறுவனம் இல்
காரணத்தால் வைணவர்கள் சமயப்பற்று மிக்கவர்க

இருக்கின்றனர் எனலாம். பெரும்பாலான சைவக் கோயில்கள் ஆதீனக் கட்டுப்பாட்டிற்குள் இருப்பதால் வைணவர்களைப் போன்று சைவர்களிடம் சமயப் பரபரப்பைக் காணமுடியவில்லை.

மக்கள் சமயப் பொறையுடையவர்களாய்த் திகழ்கின்றனர். சைவ சமயத்தினர் சடங்குகளில் கூட வைணவம் இடம் பெறுகிறது. இவர்கள் இறந்தவர்களை எடுத்துச் செல்லும்போது கூடக் "கோவிந்தா" என்று குரல் எழுப்பிச் செல்வதைக் காணமுடிகிறது. சில சைவர்கள் புரட்டாசித் திங்கள் முழுவதும் திருமாலுக்காக விரதம் இருந்து வேங்கடமலையான் குறித்துத் தளியல் போடுவது மரபாகக் கொண்டுள்ளனர். இது போல் வைணவ யாதவர்கள் தில்லைக் காளியின் மேல் பற்றுடையவர்கள்.

கோயில் திருவிழாக்கள் முன் போல நடைபெறுவதில்லை. பல சிறு தெய்வ விழாக்கள் மறைந்து வருகின்றன. தருமபுர ஆதீனத்திற்குட்பட்ட சைவக் கோயில்களின் விழாக்களில் சமயச் சொற்பொழிவுகளை நடத்திச் சமயம் பரப்பி வருகின்றனர். 'பரகாலன் பைந்தமிழ் மன்றம்', நாங்கூர் கருடசேவை போன்ற விழாக்களில் வைணவச் சொற்பொழிவுகளை நடத்தி வருகிறது.

வைணவக் கோயில்களுக்குத் தனியே குழுவமைத்து வசூல் செய்து திருவிழாக்களை நடத்தி வருகின்றனர். பெரும் வைணவ விழாவான நாங்கூர் கருடசேவை விழாவைக் குற்றால நாராயணப்பிள்ளையைத் தலைவராகவும், அரங்காச்சாரியாரைச் செயலராகவும் கொண்ட ஐவர் அடங்கிய குழு பொறுப்பேற்று நடத்தி வருகிறது. இந்து அறநிலைத் துறைக்கு உட்பட்ட கோயில்களுக்கு அறங்காவல் குழு நிறுவப்பட்டுள்ளது.

சீர்காழி நகரில் 'வள்ளலார் மன்றம்' அமைத்து மாதந்தோறும் சமயச் சொற்பொழிவுகள் நடத்தி வருகின்றனர். பெருஞ் செல்வர்களின் சமயப் பணி குறிப்பிடத்தக்கது. இப்பணியின் ஒரு கூறே 'பெரிய புராணத் தொடர் சொற்பொழி'வாகும். 'கூட்டுமாங்குடி திருமுருகன் அந்தாதி', 'அங்காரகன்', 'வைத்தியநாதர் பதிகம்', 'சட்டைநாதர் பதிகம்' போன்ற நூல்கள் வெளிவர இவர்களே காரணமானவர்கள்.

இவ்வட்டத்தில், சைவ வைணவச் சமயங்களேயன்றி கிருத்துவ, இசுலாமிய மதங்களும் சிறப்புடன் விளங்கி வருகின்றன. வடகால், திருமுல்லைவாசல், புத்தூர் போலும் பல ஊர்களில் இசுலாமியர் மசூதிகளைக் கட்டி வழிபட்டு வருகின்றனர். சீர்காழி நகரின் மையத்தில் கிருத்துவ தேவாலயம் ஒன்று உள்ளது. கிருத்துவர்கள் தனியே கல்வி நிலையம், விடுதி முதலியன வைத்துக் கல்வி வாயிலாக மதம் பரப்பி வருகின்றனர்.

## இ. சீர்காழி வட்டக்கோயில்கள்

சேக்கிழார் அடிச்சுவட்டில் என்ற நூலில், அறுபத்து மூவர் யாத்திரை செய்த சுமார் 90 திருத்தலங்களுள் 53 க்கும் அதிகமான தலங்கள் தஞ்சை மாவட்டத்தில் அமைந்துள்ளதையும், இவற்றுள் பதினொன்றுக்கும் அதிகமான தலங்கள் சீர்காழி வட்டத்தில் உள்ளதையும் வரைபடம் மூலம் விளக்கப்பட்டுள்ளது.[31] இதுபோலப் பாடல் பெற்ற 108 வைணவத் தலங்களுள் பதினெட்டுத் தலங்கள் சீர்காழி வட்டத்தில் உள்ளன. ஏராளமான சிறு தெய்வக் கோயில்களும் இங்குள்ளன.

**ஒன்பது கோள்கள்:**

சீர்காழி சட்டைநாதர் கோயிலைச் சுற்றிலும் ஒன்பது கோள்களுக்குக் கோயில்கள் இருந்தன என்ற செவிவழிச் சான்றை வைத்து இன்று ஆய்வு மேற்கொள்ளப் பட்டுள்ளது. ஞானசம்பந்தர் தன் கோளறு திருப்பதிகத்தில் 'வேயுறு தோளிபங்கன் தம் உளம் புகுந்தவதனால் ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, பாம்பிரண்டும் (இராகு, கேது) ஆசறு நல்ல நல்ல அடியாரவர்க்கு மிகவே' – என ஓதியருளினார்.

இக்கோள்கள் ஒன்பதிற்கும் தனித்தனிக் கோயில்கள் அமைந்திருக்க வேண்டும். இராகு, கேது இரண்டிற்கும் சிதிலமடைந்த நிலையில் கோயில்கள் உள்ளன. பாம்பு இரண்டில் கேது செந்நிறம் உடையது ஆதலின் அது 'செம்பாம்பு' எனப்பட்டது. இப்புராண வரலாற்றை ஓட்டி சீர்காழியின் கீழ்த்திசையில் உள்ள ஓரிடத்திற்கு 'செம்பாம்பன் குடி' என்ற பெயர் வழங்கலாயிற்று. இதுவே தற்போது செம்மங்குடி என்றழைக்கப்படுகிறது. இங்குக் கேதுவிற்கு இடிந்த நிலையில் ஒரு கோயில் உள்ளது.

சீர்காழிக் கடைவீதியின்கண் இராகுவிற்கு ஒரு கோயில் அமைந்துள்ளது. இதனை 'நாகேசுவரமுடையார் கோயில் என்றழைப்பர் இந்நகரின் வடகிழக்கிலுள்ள ஈசானியந் தோப்பில் சட்டைநாதக் குளக்கரையில் ஓர் இடிந்த கோயில் காணப்படுகின்றது. இதனை 'அக்னிபுரீசுவரர் கோயில்' என்பர். ஞாயிறுக்கு எடுக்கப்பட்ட கோயில் இதுவாக இருத்தல் வேண்டும்.

வைத்தீசுவரன் கோயிலில் செவ்வாய்க்கு வழிபாடு நடைபெறுகிறது. தில்லை விடங்கன் என்ற ஊரில் சந்திரனுக்குக் கோயில் உள்ளது. சீர்காழி சிதம்பரம்

சாலையில் உள்ள விளந்திட சமுத்திரம் சேந்தன்குடி ஆகிய ஊர்களுக்கிடையே பல இடிந்த கோயில்கள் காணப் படுகின்றன. சீர்காழியின் கீழ்ப்பாதியிலுள்ள திருத்தோணி புரம் முதலான ஊர்களிலும் பல பழைய கோயில்கள் உள்ளன. இக்கோயில்களின் தெய்வங்கள் இதுவென அறிய முடியவில்லை. இக்கோயில்களில் மற்ற கோள்கள் எழுந்துள்ள கோயில்கள் எதுவென ஆராய்ந்து வருகின்றனர்.

## சைவக் கோயில்கள்

சீர்காழி தோணியப்பர் கோயில் 'சட்டைநாத சுவாமி தேவதானம்' என்ற பெயரால் விளங்குகிறது இங்குப் பிரம்ம புரீசுவரர் இலிங்க மூர்த்தமாகவும் தோணியப்பர் குரு மூர்த்தமாகவும், சட்டைநாதர் சங்கம மூர்த்தமாகவும் எழுந்துள்ளனர். பிரும்ம தீர்த்தக்கரையில் திருநிலை நாயகிக்கும், இத்னை அடுத்துத் திருஞானசம்பந்தர் பெருமானுக்கும் தனித்தனிக் கோயில்கள் அமைக்கப் பட்டுள்ளன.

இக்கோயிலின் மேற்கே 'திருக்கோலக்கா' திருத்தலம் உள்ளது. ஞானசம்பந்தரின் முதல் யாத்திரை இங்குதான் நடந்தது. சுவாமிக்குத் 'திருத்தாளமுடையார்' எனவும், அம்மைக்கு 'ஓசை கொடுத்த நாயகி' எனவும் திருப்பெயர்கள் விளங்குகின்றன.

சட்டைநாதர் கோயிலின் வடதிசையில் அமைந்துள்ளது நல்லூர்ப் பெருமணக் கோயிலாகும். சம்பந்தர் சோதியிற் கலந்தது இங்குதான். திருமணத்தின் போது அம்பிகை தோன்றித் திருவெண்ணீறு அளித்துச் சோதியுட் புகுவித்த தலம் ஆதலின் ஆயாள் புரம் ஆச்சாள்புரம் எனப்பெயர் பெற்றது.

சீர்காழியின் கீழ்த்திசையில் இரு புகழ்பெற்ற சைவக் கோயில்கள் உள்ளன. திருமுல்லைநாதர் கோயிலும், திருக் கருகாவூர் கோயிலும் பாடல் பெற்ற சிவத் தலங்களாகும்.

சீர்காழியின் தென்திசையில் புள்ளிருக்கு வேளூர் வைத்தியநாதசுவாமி எழுந்துள்ளார். இக்கோயிலின் கீழ்த் திசையில் வைரவக் கடவுளும், மேற்றிசையில் வீரபத்திரக் கடவுளும், தென்திசையில் கற்பக விநாயகரும், வடதிசையில் காளியும் அமர்ந்து காவல் புரிகின்றனர். அம்மையின் திருப் பெயர் தையல்நாயகி. செல்வ முத்துக்குமரசுவாமி இங்குப் புகழோடு விளங்குகிறார். அங்காரகன் உய்ந்ததும், சடாயு மோட்சம் பெற்றதும் இத்தலத்தில்தான் என்று தலவரலாறு கூறும்.[32]

திருவெண்காட்டில் சுவேதாரண்யர் சுவாமி கோயில் கொண்டுள்ளார். நந்தி பெருமான் பொருட்டு அகோர மூர்த்தி அவதாரஞ் செய்து மருத்துவ அரக்கனை அடக்கினார். புதனுக்கு இங்குத் தனிக்கோயில் அமைக்கப் பட்டுள்ளன.

திருப்புங்கூர் சிவலோகநாத சுவாமி சுயம்புலிங்கமாகத் தோன்றியவர்.

நாங்கூரில் அமைந்துள்ள ஏழு சைவக் கோயில்கள் குறிப்பிடத்தக்கன. ஓரே ஊரில் ஏழு சைவக் கோயில்களும் ஏழு வைணவக் கோயில்களும் அமைந்த பெருமை இவ்வூர்க்கு உண்டு. நம்புவார்க்கு அன்பர், சுந்தரேசர், கைலாச நாதர், அமிர்தபுரீசுவரர், மதங்கீசுவரர், நேர்த்தரார் அர்ப்பனே சுவரர் ஆகிய சைவ மூர்த்தங்களுக்குக் கோயில்கள் உள்ள தாகத் தெரிகிறது. சில கோயில்கள் அழிந்துபட்டன.

ஆர்ப்பாக்கத்திலும், கன்னியாக்குடியிலும், பெருந் தோட்டத்திலும், வைரவனிருப்பிலும் கைலாசநாதர் கோயில்கள் அமைந்துள்ளன. நல்ல விநாயக புரத்தில் விசுவநாதர் கோயில் ஒன்று உள்ளது. இதே விசுவநாதர் வரவுக் குடியிலும் கோயில் கொண்டுள்ளார். வானகிரி என்ற ஊரில் வேதபுரீசுவரர்க்குக் கோயில் ஒன்று உள்ளது. சாய்க்

காட்டில் சாயாவனேசுவரர் கோயிலும், பல்லவனீச்சுரத்தில் உள்ள சைவக்கோயிலும் குறிப்பிடத்தக்க சைவக் கோயில்கள் ஆகும்.

**வைணவக் கோயில்கள்:**

ஆழ்வார்கள்வழிக் குரவர் வரலாற்று நூலில் வைணவ ஆச்சாரியரான திருக்கச்சியப்ப நம்பிகள் சோழநாட்டுத் திருப்பதிகளைச் சேவிக்கத் திருவுளங்கொண்டு திருக் குடந்தை, திருக்காழிச் சீராமவிண்ணகரம் முதலிய திருப் பதிகளை வணங்கி திருவாவியை அடைந்தவர் அங்குத் திருமங்கை ஆழ்வாரை வணங்கிய பின்னர்த் திருவாலித் திருநகரைச் சூழ்ந்துள்ள பதினோரு திருப்பதிகளையும் வணங்கித் திருச்சித்திரக்கூடம் வீரநாராயணபுரம் முதலிய பதிகளையும் வழிபட்டனர் என்று கூறப்பட்டுள்ளது.

திருவாவியைச் சூழ்ந்த பதினோரு கோயில்களில் ஏழு கோயில்கள் திருநாங்கூரில் உள்ளன.

'மணிமாடக்கோயிலில் பத்ரி நாராயணமூர்த்தி எழுந் துள்ளார். வைகுந்த விண்ணகரக் கோயிலில் வைகுந்தப் பெருமாள் கோயில் கொண்டுள்ளார். திருவரங்கப்பெருமாள் அருள் பொழியும் கோயிலாக அரிமேய விண்ணகரம் விளங்கு கிறது. இராமன் புருசோத்தமராக வண்புருடோத்தமம் கோயிலிலும், காஞ்சி வரதராசர் திருமேனிக் கூடத்திலும் எழுந்துள்ளனர். குடமாடு கூத்தரும், செம்பொன்னரங்கரும் செம்பொன் செய்கோயிலிலும், திருத்தெற்றி அம்பலத்திலும் அமைந்துள்ளனர்.

அண்ணன் கோயிலில் திருப்பதி சீனுவாசப் பெருமாள் கோலங்கொண்டு விளங்குகிறார். பிரயாகை மாதவன் கீழைச்சாலையில் எழுந்துள்ளார். நாவளம்பாடியில் கோயில் கொண்டவர் மதுரா கண்ணன் ஆவார். திருவல்லிக் கேணி பார்த்தசாரதி பார்த்தன் பள்ளியில் அமைந்துள்ளார்.

இப்பதினோரு கோயில்களையும் வைணவர்கள் 'திவ்ய தேசங்கள்' என்றழைக்கின்றனர்.

இப்பகுதியில் இப்பதினோரு திருத்தலங்கள் அன்றி வேறு ஏழு திருக்கோயில்களும் உள்ளன. திருநகரியில் வயலாழி மணவாளர் கல்யாண ரெங்கநாதர் கோயில் உள்ளது. திருக்குறையலூர் நரசிம்மபெருமாள் கோயில் சிறப்பு மிக்கது. இங்குதான் திருமங்கை ஆழ்வார் அவதாரம் செய்தார். திருவாலியில் கல்யாண ரெங்கநாதர் கமலவல்லித் தாயாருடன் காட்சியளிக்கிறார். மங்கை மடத்தில் வரதராசப் பெருமாளும், பார்த்தன் பள்ளியில் கோலவல்லி ராமனும், தலைச்சங்காட்டில் திருச்சங்கை நாள் மதியப் பெருமாளும் கோயில் கொண்டு விளங்குகின்றனர். சீர்காழியில் சீராம விண்ணகரத்தில் உலகளந்த பெருமாளாக நாராயணன் திருக்கோயில் கொண்டுள்ளார்.

இவையன்றி திருமுல்லை வாசலில் வரதராசப் பெருமாளும், நல்லூரிலும் மகேந்திரப்பள்ளியிலும் கோதண்டராமசாமியும் அமைந்து அருள் புரிகின்றனர். நவநீதக் கண்ணபுரம், நவநீதக் கண்ணன் பெயரால் விளங்குகிறது. பச்சைப் பெருமாள் நல்லூரில் திருமாலுடையார் எழுந்துள்ளார்.

திருவரங்கத்திற்கு இணையாக வடரங்கம் நாராயணன் விளங்குகிறார். தற்போது திருமயிலாடியில் கண்டுபிடிக்கப் பட்ட வெங்கடேசுவரர் கோயிலைத் தென் திருப்பதித் தலமாக எண்ணி வழிபடுகின்றனர். இவ்வட்டத்தில் நூற்றுக் கணக்கான வைணவப் பசனை மடங்கள் உள்ளன என்பதும் குறிப்பிடத்தக்கது.

**சிறு தெய்வக் கோயில்கள்:**[33]

சிறு தெய்வங்களை வணங்குவதற்கு என்று தனியே சமயம் இல்லை. இவர்களே சிவன், திருமால் போன்ற

பெருந்தெய்வங்களையும் வழிபடுகின்றனர்.

> அகால மரணமடைந்தவர்கள்,
> கன்னியர்கள், ஆபத்தில் போராடி
> மாண்ட வீரர்கள், அன்புடைய
> தலைவர்கள் – இவர்கள் நாட்டுப்புறத்
> தேவதைகளாக மாற்றப்பட்டனர்

என்று கூறுவர்.[34] தமிழர்களின் மூலக்கடவுளர் என்று இத்தேவதைகளைக் கூறமுடியும். இன்றுள்ள "வீரனார் கோயில்" பண்டைக் காலத்தில், களத்தில் போராடி மாண்ட வீரனுக்காக எடுக்கப்பட்டதாக இருக்கவேண்டும். "ஐயனார் கோயில்" படைத்தலைவன் நடுகல் கோயிலாக விளங்கி இருத்தல் வேண்டும். எனவேதான் இவர்கள் விரும்பும் இரத்தப் பலியும், குதிரை வாகனமும் இவர்களுக்கு அளிக்கப்படுகின்றன. முனீசுவரன் கோயில் முனிவர்களுக்கான சமாதி என்று கொள்வதில் தவறில்லை. ஈஸ்வரனுக்கு முன்னுள்ள பரம்பொருளை அறிந்த இவர்களை முன் ஈஸ்வரன் என்றழைத்து வழிபட்டு வந்தனர். காளியும், மாரியும் இயற்கைக் கடவுள் என்பர்.[35] மனிதக் கடவுளரானதால் வீரன், ஐயன், முனீசுவரன் கோயில்கள் ஊரின் புறத்தே எல்லையில் அமைந்துள்ளன.

இவ்வட்டத்தில் கோயில் கொண்டுள்ள சிறு தெய்வங்கள் வருமாறு:

காளியம்மன், மாரியம்மன், கன்னியம்மன், திரௌபதியம்மன், அங்காளம்மன், துர்க்கையம்மன், பிடாரியம்மன், ஆவடியம்மன், காமாட்சியம்மன், கெங்கையம்மன், பச்சையம்மன், பேச்சியம்மன், காத்தாயியம்மன், எல்லையம்மன், காட்டேரி, மீனாட்சியம்மன், முதலிய பல பெண் சிறு தெய்வங்களும்,

விநாயகர், முருகன், ஐயனார், ஐயப்பன், வீரனார், முனீசுவரன், பதினெட்டாம்படியார், மதுரை வீரன், இருளப்பன், வீரபத்திரன், முத்தாளய்யா, குட்டியாண்டவர், காமன், உருத்திராபதியார், காத்தவராயன், முதலிய பல ஆண் சிறு தெய்வங்களும் இவ்வட்டத்தில் கோயில் கொண்டுள்ளனர்.

சீர்காழி நகரில் புத்தடி மாரியம்மன், தோப்படி மாரியம்மன், வடபாதி மாரியம்மன் ஆகிய கோயில்கள் கீர்த்தியோடு விளங்குகின்றன. மாதானத்தில் எழுந்துள்ள மாரியம்மன் பல ஆயிரக்கணக்கான பக்தர்களைக் கொண்டவள். வேட்டங்குடியில் புத்தடி மாரியம்மனும், திருமுல்லைவாயிலில் முத்து மாரியம்மனும் விளங்குகின்றனர்.

காளியம்மன் கோயில்களில் சீர்காழி இரட்டைக் காளியம்மன் கோயில் குறிப்பிடத்தக்கது. திருமுல்லை வாயிலில் எழுந்துள்ள காளியம்மன் மீனவர்களின் குல தெய்வமாகும். சுமார் 1000 தலைக்கட்டுக்குக் காவல் தெய்வமாக விளங்குகிறாள். அனுமந்தபுரம், பெருமங்கலம் ஆகிய ஊர்களில் சிறப்பான காளி கோயில்கள் உள்ளன. திருநாங்கூர் மதங்கீசுவரர் கோயிலில் மகாகாளி அமைந்துள்ளாள்.

சீர்காழியில் அமைந்துள்ள அங்காளம்மன் கோயிலில் ஆண்டிற்கொருமுறை 'மயான குறை' விழா நடைபெறுகிறது. வருசபத்து அங்காலம்மன் கோயிலில் சுமார் 120 ஆண்டுகளுக்கு முன்னர் 'வனப்பூசை' விழா நடைபெற்றதற்கான சான்றுகள் கிடைத்துள்ளன. மேலும் பெருமங்கலத்திலும் வள்ளுவக்குடியிலும் இத்தெய்வத்திற்கு கோயில்கள் உள்ளன.

பாரதக் கதையின் தலைவியான திரெளபதிக்குத் திருமுல்லைவாசல், கடவாசல், சீர்காழி, பச்சைப்பெருமாள்

நல்லூர், மகாராசபுரம் ஆகிய ஊர்களில் கோயில்கள் அமைக்கப்பட்டுள்ளன.

ஊர்தோறும் அமைந்துள்ள கோயில்களில் குறிப்பிடத் தக்கவை. காமன் கோயில், கன்னிக் கோயில், விநாயகர் கோயில், உருத்திராபதியார் கோயில் முதலியன ஆகும்.

திருமயிலாடி முருகன் கோயில், வைத்தீசுவரன் கோயில் செல்வ முத்துக்குமரன், குமாரக்குடி முருகன் முதலிய பல முருகன் தலங்கள் உண்டு.

ஒவ்வொரு ஊரின் எல்லையிலும் ஐயனார், வீரனார், முனீசுவரன் ஆகியத் தெய்வங்கள் கோயில் கொண்டுள்ளனர். மதுரை வீரன், காத்தவராயன், பேச்சியம்மன் ஆகிய தெய்வங்கள் துணைத் தெய்வங்களாக அங்காளம்மன் கோயிலிலும் மாரியம்மன் கோயிலிலும் இடம் பெற்றுள்ளனர்.

## குறிப்புகள்

1. முத்துப்பிள்ளை, சி; **சிறப்பு மிக்க சிவாலயங்கள்,** (சென்னை, பைலட் பப்ளிகேஷன்ஸ், முதற்பதிப்பு 1978.) ப. 68.
2. **சீர்காழித் தலவரலாறு;** (தருமை ஆதீன வெளியீடு, 1980.) ப. 2.
3. **களவழி நாற்பது;** பாடல் எண்: 36.
4. திருஞானசம்பந்தர்; **தேவாரம்,** (தலமுறை, திருப்பனந்தாள் வெளியீடு, 1980.) பக். 124–136.
5. **பெரியபுராணம்;** (திருப்பனந்தாள், காசிமட வெளியீடு, 1974.) ப. 299.
6. **பெரியபுராணம்:** ப. 301.

7. **சீர்காழித் தலவரலாறு**; ப. 2.
8. ஷை பக். 2–3.
9. திருஞானசம்பந்தர்: தேவாரம், (தலமுறை) பக். 137–138.
10. தற்போது உள்ள பிரும்ம தீர்த்தக்கரையில் ஞான சம்பந்தர் ஞானப்பால் உண்டதாகக் கருதப்படும் இடத் தருகேதான், திருமுலைப்பால் விழா நடைபெறுகிறது.
11. இவ்வாய்வைத் திரு சித்ரூப சுவாமிகள் செய்து வருகின்றார்.
12. **புள்ளிருக்கு வேளூர்த் தல வரலாறு**; (தருமை ஆதீன வெளியீடு, 1980.) பக். 1–2.
13. **திருவெண்காட்டுத் தலவரலாறு**; (திருவெண்காட்டு, சுவேதாரண்ய சுவாமி தேவதான வெளியீடு, 1976.) பக், 6–8.
14. இராதாகிருட்டிணன், எஸ்; **நம்பிக்கையின் மறுமலர்ச்சி**, (தமிழாக்கம்: எம். ஸ்ரீ. செல்லம்.) (சென்னை, அமுத நிலையம் லிமிடெட், 1968.) ப. 12.
15. **கலைக்களஞ்சியம்**; (தொகுதி: நான்கு, முதற்பதிப்பு 1956.) ப. 44.
16. **கலைக்களஞ்சியம்**; ப. 448.
17. ஷை ; ப. 452.
18. **திருக்கோயில்**; (மாத இதழ்.) மறைமலையடிகள், "சிவ என்னும் சிறப்புப்பெயர்", ஏப்ரல் 1977. ப. 37.
19. சுப்பிரமணியப் பிள்ளை, கா; **தமிழர் சமயம்**, (திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக்கழகம், இரண்டாம் பதிப்பு 1953 ) ப. 45.
20. **திருக்கோயில்**; (மாத இதழ்) சுப்புரெட்டியார், "திருமழிசையாழ்வார் திருநெறி", சனவரி 1975. ப. 21.

21. சுப்பிரமணியப்பிள்ளை, கா: **தமிழர் சமயம்**, ப. 37.

22. ஷை ; ப. 65.

23. தகவல்: திரு கல்யாணசுந்தர தேசிகர், வைத்தீசுவரன் கோயில்.

24. இன்று இது கரிக்குளம் என்ற பெயரால் அழைக்கப் படுகிறது.

25. தகவல்: சேடாத்திரி அவர்கள், சீர்காழி.

26. சிவபாதசுந்தரம், சோ; **சேக்கிழார் அடிச்சுவட்டில்**, (சென்னை, வானதி பதிப்பகம், முதற்பதிப்பு 1978.) ப. 1.

27. **பெரியபுராணம்**: ப. 309.

28. இராதாகிருட்டிணன், மா; **திராவிட முனிவர்கள்**, (ப. இ.), ப. 96.

29. **திருப்புன்கூர் தலவரலாறு**: (திருப்புன்கூர், சிவலோக நாத சுவாமி தேவதான வெளியீடு, 1980.) ப. 14.

30. முத்துப்பிள்ளை, சி; **புகழ் மணக்கும் வைணவத் தலங்கள்**, (சென்னை, பைலட் பப்ளிகேஷன்.) (ஆ.இ.) பக். 118–121.

31. சிவபாதசுந்தரம், சோ: **சேக்கிழார் அடிச்சுவட்டில்**,ப.1.

32. முருகையா தேசிகர்; **அங்காரகன்** (ப. இ.) பக். 2–8.

33. ஆய்வுக்கு வசதியாக, சிவன், திருமால் அல்லாத பிற அனைத்து இந்து சமயத் தெய்வங்கள் குடிகொண்டுள்ள கோயில்களைச் சிறு தெய்வக் கோயில்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

34. சண்முக சுந்தரம், க; **நாட்டுப்புறவியல் ஓர் அறிமுகம்**, (சென்னை, இலக்கிய மாணவர் வெளியீடு, சனவரி 1975.) ப. 110.

35. தகவல்: ப. நாகரெத்தினம் பிள்ளை, தாண்டவன் குளம், சீர்காழி.

## இயல் பின்னிணைப்பு

### சீர்காழி வட்டக் கோயில்கள்

சிவபெருமான் குடி கொண்டிருக்கும் கோயில்களைச் சைவக் கோயில்கள் என்றும், திருமால் குடி கொண்டிருக்கும் கோயில்களை வைணவக் கோயில்கள் என்றும், பிற அனைத்துத் தெய்வங்கள் குடி கொண்டுள்ள கோயில்களைப் பிற தெய்வக் கோயில்கள் என்றும் பிரிக்கப்பட்டு அட்டவணைத் தரப்படுகிறது.

**புகழ்பெற்ற சைவக் கோயில்கள்:**

| | |
|---|---|
| தியாகராசர் கோயில் | ஆச்சாள்புரம் |
| கைலாசநாதர் கோயில் | ஆர்ப்பாக்கம் |
| கைலாசநாதர் கோயில் | கன்னியாக்குடி |
| சாயாவனேசுவரர் கோயில் | சாய்க்காடு |
| சட்டைநாதர் கோயில் | சீர்காழி |
| திருத்தாளமுடையார் கோயில் | சீர்காழி |
| நாகேசுவரமுடையார் கோயில் | சீர்காழி |
| வெள்ளடையீசுவரர் கோயில் | திருக்குருகாவூர் |
| சிவலோகநாதர் கோயில் | திருப்புன்கூர் |
| முல்லைவனநாதர் கோயில் | திருமுல்லைவாசல் |
| அகோரமூர்த்தி கோயில் | திருவெண்காடு |
| விசுவநாதர் கோயில் | நல்லவிநாயகபுரம் |
| அமிர்தபுரீசுவரர் கோயில் | நாங்கூர் |
| கைலாசநாதர் கோயில் | நாங்கூர் |
| சுந்தரேசர் கோயில் | நாங்கூர் |
| மதங்கீசுவரர் கோயில் | நாங்கூர் |
| நம்புவார்க் கன்பர் கோயில் | நாங்கூர் |
| நேர்த்தரார் அர்ப்பனேசுவரர் கோயில் | நாங்கூர் |
| கைலாசநாதர் கோயில் | பெருந்தோட்டம் |

| | |
|---|---|
| விசுவநாதர் கோயில் | வரவுக்குடி |
| வேதபுரீசுவரர் கோயில் | வானகிரி |
| வைத்தியநாதர் கோயில் | வைத்தீசுவரன் கோயில் |
| கைலாசநாதர் கோயில் | வைரவனிருப்பு |

**புகழ் பெற்ற வைணவக் கோயில்கள்:**

| | |
|---|---|
| சுத்தப்பெருமாள் கோயில் | அளக்குடி |
| இலட்சுமி நாராயணப்பெருமாள் கோயில் | ஆச்சாள்புரம் |
| வரதராசப்பெருமாள் கோயில் | கடவாசல் |
| பிரயாகை மாதவன் கோயில் | கீழைச்சாலை |
| இலட்சமி நாராயணப்பெருமாள் கோயில் | கீழையூர் |
| சிராம விண்ணகரம் (தாடாளன் கோயில்) | சீர்காழி |
| திருச்சங்கை நான்மதியப்பெருமாள் கோயில் | தலைச்சங்காடு |
| கல்யாண ரெங்கநாதர் கோயில் | திருநகரி |
| தென்திருப்பதி | திருமயிலாடி |
| வரதராசப்பெருமாள் கோயில் | திருமுல்லைவாசல் |
| இலட்சுமி நாராயணப்பெருமாள் கோயில் | திருவாலி |
| விசய கோதண்டராமசாமி கோயில் | தீவுக்கோட்டை |
| கோதண்ட ராமசாமி கோயில் | நல்லூர் |
| நவநீதக் கண்ணன் கோயில் | நவநீதக்கண்ணபுரம் |
| அரிமேய விண்ணகரம் | நாங்கூர் |
| செம்பொன்செய் கோயில் | நாங்கூர் |
| திருத்தெற்றி அம்பலம் | நாங்கூர் |
| திருமேனிக்கூடம் | நாங்கூர் |
| புருடோத்துமர் கோயில் | நாங்கூர் |

| | |
|---|---|
| மணிமாடக் கோயில் | நாங்கூர் |
| வைகுந்த விண்ணகரம் | நாங்கூர் |
| மதுரா கண்ணன் கோயில் | நாவளம்பாடி |
| திருமாலுடையார் கோயில் | பச்சைப்பெருமா நல்லூர் |
| கோலவல்லி ராமர் கோயில் | பார்த்தன்பள்ளி |
| பார்த்தசாரதி கோயில் | பார்த்தன்பள்ளி |
| வரதராசப்பெருமாள் கோயில் | புதுப்பட்டினம் |
| ஆதிகேசவபெருமாள் கோயில் | பெருந்தோட்டம் |
| கோதண்ட ராமசாமி கோயில் | மகேந்திரப்பள்ளி |
| வரதராசப்பெருமாள் கோயில் | மங்கைமடம் |
| இராமசாமி கோயில் | மணியிருப்பு |
| அண்ணன் பெருமாள் கோயில் | மேலைச்சாலை |
| இராச நாராயணப்பெருமாள் கோயில் | மேலையூர் |
| அரங்கநாதப்பெருமாள் கோயில் | மேலையூர் |
| அரங்கநாதப்பெருமாள் கோயில் | வடரங்கம் |

**புகழ் பெற்ற சிறுதெய்வக் கோயில்கள்:**

| | |
|---|---|
| மாரியம்மன் கோயில் | அல்லிவிளாகம் |
| வரதகணபதி கோயில் | அழகாபுரம் |
| திரெளபதியம்மன் கோயில் | அளக்குடி |
| காளியம்மன் கோயில் | அனுமந்தபுரம் |
| அங்காளம்மன் கோயில் | ஆச்சாள்புரம் |
| மாரியம்மன் கோயில் | ஆச்சாள்புரம் |
| சுந்தரவிநாயகர் கோயில் | ஆயங்குடி பள்ளம் |
| பராசக்தி விநாயகர் கோயில் | ஆலஞ்சேரி |
| ஐயனார் கோயில் | ஆலால சுந்தரம் |
| சுந்தரமூர்த்தி விநாயகர் கோயில் | ஆலால சுந்தரம் |
| பத்ரகாளியம்மன் கோயில் | உச்சிமேடு |
| திரெளபதியம்மன் கோயில் | ஏகோஜி மகாராஜபுரம் |

| | |
|---|---|
| துர்க்கையம்மன் கோயில் | ஏகோஜி மகாராஜபுரம் |
| சக்தி விநாயகர் கோயில் | ஓதவந்தான்குடி |
| ஐயனார் கோயில் | கண்ணுக்கினியனார் கோயில் |
| சக்தி விநாயகர் கோயில் | கண்ணுக்கினியனார் கோயில் |
| திரௌபதியம்மன் கோயில் | கடவாசல் |
| பிடாரியம்மன் கோயில் | காரைமேடு |
| தெரிகஞ்சாமனை விநாயகர் கோயில் | கார்த்திகேயனிருப்பு |
| மாரியம்மன் கோயில் | கார்த்திகேயனிருப்பு |
| அங்காளம்மன் கோயில் | காவேரியகரம் |
| தயாளபரமேஸ்வரியம்மன் கோயில் | கீழையூர் |
| விக்னேசுவரர் கோயில் | குருமூர்த்திபுரம் |
| ஐயனார் கோயில் | கைவிளாஞ்சேரி |
| அங்காளம்மன் கோயில் | சீர்காழி |
| இரட்டைக்காளியம்மன் கோயில் | சீர்காழி |
| காமன் கோயில் | சீர்காழி |
| குமரக்கோயில் | சீர்காழி |
| செல்வ விநாயகர் கோயில் | சீர்காழி |
| தோப்படி மாரியம்மன் கோயில் | சீர்காழி |
| புத்தடி மாரியம்மன் கோயில் | சீர்காழி |
| மாணிக்க விநாயகர் கோயில் | சீர்காழி |
| வடபாதி மாரியம்மன் கோயில் | சீர்காழி |
| ஐயனார் கோயில் | செம்புதளியிருப்பு |
| சித்தி விநாயகர் கோயில் | செம்புதளியிருப்பு |
| மாரியம்மன் கோயில் | செம்மங்குடி |
| காளியம்மன் கோயில் | திட்டுப்படுகை |
| மன்மதீசுவரர் கோயில் | திட்டுப்படுகை |
| மாரியம்மன் கோயில் | திட்டுப்படுகை |
| உத்திராபதியார் கோயில் | திட்டை |

| | |
|---|---|
| காமன் கோயில் | திட்டை |
| உத்திராபதியார் கோயில் | திருமுல்லைவாசல் |
| காளியம்மன் கோயில் | திருமுல்லைவாசல் |
| திரௌபதியம்மன் கோயில் | திருமுல்லைவாசல் |
| மாரியம்மன் கோயில் | திருமுல்லைவாசல் |
| பொய்யாத விநாயகர் கோயில் | திருவாலி |
| ஐயனார் கோயில் | தென்பாதி |
| செல்வ விநாயகர் கோயில் | தோத்தாக்குடி |
| பொய்யா விநாயகர் கோயில் | நரிமுடுக்கு |
| உத்திராபதியார் கோயில் | நல்ல விநாயகபுரம் |
| காமன் கோயில் | நல்ல விநாயகபுரம் |
| காமாட்சியம்மன் கோயில் | நல்ல விநாயகபுரம் |
| வீரனார் கோயில் | நல்ல விநாயகபுரம் |
| ஐயனார் கோயில் | நல்லூர் |
| ஐயனார் கோயில் | நந்திய நல்லூர் |
| சித்தி விநாயகர் கோயில் | நாங்கூர் |
| ஐயனார் கோயில் | நெம்மேலி |
| வீரனார் கோயில் | நெம்மேலி |
| பிடாரியம்மன் கோயில் | நெய்தவாசல் |
| முனிவாசகசாமி கோயில் | நெய்தவாசல் |
| ஐயனார் கோயில் | பச்சைபெருமா நல்லூர் |
| திரௌபதியம்மன் கோயில் | பச்சைபெருமா நல்லூர் |
| காமன் கோயில் | பவுசுபேட்டை |
| மாரியம்மன் கோயில் | பவுசுபேட்டை |
| செல்வ விநாயகர் கோயில் | பழைய பாளையம் |
| காளியம்மன் கோயில் | பில்படுகை |
| செல்வ விநாயகர் கோயில் | பில்படுகை |
| நந்தவனம் பிள்ளையார் கோயில் | புதுத்துறை |
| காளியம்மன் கோயில் | புதுப்பட்டினம் |

| | |
|---|---|
| குட்டியாண்டவர் கோயில் | புதுப்பட்டினம் |
| கெங்கையம்மன் கோயில் | புதுப்பட்டினம் |
| திரெளபதியம்மன் கோயில் | புதுப்பட்டினம் |
| பிள்ளையார் கோயில் | புதுப்பட்டினம் |
| திரெளபதியம்மன் கோயில் | புளியந்துறை |
| முருகன் கோயில் | புளியந்துறை |
| வல்லப விநாயகர் கோயில் | புளியந்துறை |
| செல்வக்கணபதி பிள்ளையார் கோயில் | பெரம்பூர் |
| ஐயனார் கோயில் | பெருந்தோட்டம் |
| கம்பநாதசாமி கோயில் | பெருமங்கலம் |
| கருங்குட்டம் தீர்த்த விநாயகர் கோயில் | பெருமங்கலம் |
| காளியம்மன் கோயில் | பெருமங்கலம் |
| சித்திவிநாயகர் கோயில் | பெருமங்கலம் |
| பச்சையம்மன் கோயில் | பெருமங்கலம் |
| மாரியம்மன் கோயில் | பெருமங்கலம் |
| வீர அங்காளம்மன் கோயில் | பெருமங்கலம் |
| வீரன் கோயில் | பெருமங்கலம் |
| மாரியம்மன் கோயில் | மணியிருப்பு |
| மாரியம்மன் கோயில் | மாதானம் |
| செல்வ விநாயகர் கோயில் | முல்லியாம் பட்டினம் |
| பிள்ளையார் கோயில் | மேலையூர் |
| மாரியம்மன் கோயில் | மேலையூர் |
| அங்காளம்மன் கோயில் | வருசபத்து |
| உருத்திராபதியார் கோயில் | வருசபத்து |
| ஐயனார் கோயில் | வருசபத்து |
| காமன் கோயில் | வருசபத்து |
| மாரியம்மன் கோயில் | வருசபத்து |
| முருகன் கோயில் | வருசபத்து |
| வீரனார் கோயில் | வருசபத்து |

| | |
|---|---|
| எல்லையம்மன் கோயில் | வானகிரி |
| மன்னார்சாமி கோயில் | வெட்டாத்தாங் கரை |
| காத்தாயியம்மன் கோயில் | வெட்டாத்தாங் கரை |
| காளியம்மன் கோயில் | வெட்டாத்தாங் கரை |
| பிடாரியம்மன் கோயில் | வெட்டாத்தாங் கரை |
| மாரியம்மன் கோயில் | வேட்டங்குடி |
| கடைகாமகாத்த ஐயனார் கோயில் | வேதராசபுரம் |
| ஐயனார் கோயில் | வைத்தீசுவரன் கோயில் |

## அ. கோயில் அமைவிடங்கள்

ஆய்வுக்குக் களமாக அமையும் ஊர்கள் வருமாறு: சீர்காழி, வைத்தீசுவரன் கோயில், திருப்புன்கூர், திருநகரி, திருநாங்கூர், திருவெண்காடு, திருமுல்லைவாசல், வருசபத்து, வேட்டங்குடி, மாதானம் ஆகிய ஊர்கள் முதன்மைக் களங்களாகும்.

இவ்வூர்களில் அமைந்துள்ள கோயில்களுக்குச் செல்லப் பேருந்து வாகன வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

### கோயில்களும் ஊர்களும்

சீர்காழி நகரின் மையத்தில் "சட்டைநாதர் கோயில்" எழுந்துள்ளது. இக் கோயிலைச் சுற்றிலும் நான்கு பெரும் வீதிகள் உள்ளன. இக்கோயிலின் மேற்குக் கோபுர வாசல் வழியாக, தெற்கு வடக்காக செல்லும் வீதியொன்று தேர் தெற்கு வீதியையும், தேர் வடக்கு வீதியையும் இணைக்கிறது. இவ்வீதியின் மையத்தில் "புத்தடி மாரியம்மன் கோயில்" அமைந்துள்ளது. இவ்வீதி வடக்கில் முடிவடையும் இடத்தில் பேருந்து நிலையம் உள்ளது. இதன் பின்புறம் "இரட்டைக் காளியம்மன்" கோயில் விளங்குகிறது. மேற்குக் கோபுர வாயிலின் நேரே உள்ள தெரு நீண்டு இரு கல் தொலைவில் முடிவடைகிறது. இங்குதான் திருக்கோலக்கா "திருத்தாளமுடையார் கோயில்" உள்ளது. சீர்காழியின் வடக்குப் பகுதி 'வடபாதி' என்றும், தெற்குப் பகுதி 'தென்பாதி' என்றும் அழைக்கப்படுகின்றன. வடபாதியில் "வடபாதி மாரியம்மன் கோயிலும்", தென்பாதியில் "அங்காளம்மன் கோயிலும்" அமைந்துள்ளன. நான்கு தேர்வீதிகளை அடுத்து நான்கு பெரிய வீதிகள் உள்ளன. இவற்றைப் 'பிடாரி வீதிகள்' என்றழைப்பர். பிடாரி

மேல வீதியும், பிடாரி வடக்கு வீதியும் இணையுமிடத்தி லிருந்து மேற்கு நோக்கிக் கொண்டலுக்குச் செல்லும் பாதை செல்கிறது. இப்பாதையை ஒட்டி, புகைவண்டி நிலையத்திற் கருகில் "தாடாளன் கோயில்" உள்ளது.

வைத்தீசுவரன் கோயில், "வைத்தியநாதர் கோயிலைச்" சுற்றிலும் நான்கு பெரும் வீதிகள் அமைந்துள்ளன. கீழ வீதியும், தெற்கு வீதியும் பேருந்து செல்லும் பாதைகளாகும். தெற்கு வீதியின் வழியாக நேரே மேற்கு நான்கு கல் தொலைவு சென்றால் திருப்புன்கூரை அடையலாம்.

திருநகரி கோயிலைச் சுற்றியும், திருவெண்காட்டு கோயிலைச் சுற்றியும் நான்கு பெரும் வீதிகள் அமைந் துள்ளன. திருமுல்லைவாயில் "முல்லைநாதர் கோயில்" கடற்கரையை நோக்கி அமைந்துள்ளது. இக்கோயிலின் பின்புறமாகத் தெற்கு வடக்காகச் செல்லும் வீதியில் "உருத்திராபதியார் கோயிலும்", "திரௌபதியம்மன் கோயிலும்" எழுந்துள்ளன. மேல வீதியும், தெற்கு வீதியும் இணையும் இடத்தில் "மாரியம்மன் கோயிலும்", கடற்கரைச் சாலையில் "காளியம்மன் கோயிலும்" உள்ளன.

சீர்காழி திருமுல்லைவாயில் சாலையிலிருந்து வேட்டங்குடி சாலை பிரியும் இடத்தில் வருசபத்து "உருத்திராபதியார் கோயிலும்", "காமன் கோயிலும்" உள்ளன. வேட்டங்குடி சாலையில் "அங்காளம்மன் கோயில்" உள்ளது. வேட்டங்குடி ஊரில் மேற்குப்பகுதியில் "மாரியம்மன் கோயில்" எழுந்துள்ளது.

மாதானம் "மாரியம்மன் கோயிலைச்" சுற்றிலும் நான்கு வீதிகள் உள்ளன. நாங்கூர் கிராமத்தில் ஏழு வைணவக் கோயில்களும், ஏழு சைவக் கோயில்களும் அமைந்துள்ளன.

பொதுவாக பெருந்தெய்வக் கோயில்கள் ஊரின் மையத்தில்தான் உள்ளன. கோயிலைச் சுற்றிலும் உள்ள நான்கு வீதிகளே ஒரு காலத்தில் ஊராக இருந்திருக்க வேண்டும். பிற்காலத்தில் புறநகர்ப் பகுதியில் பலர் குடியேற ஆரம்பித்தனர். சீர்காழியின் வடபாதி, தென்பாதி முதலியவற்றை இதற்குச் சான்றாகக் கூறலாம்.

சிறுதெய்வக் கோயிலைச் சுற்றித் தெருக்கள் அமையாது தெருவின் ஒரு பகுதியே கோயிலாக அமைகிறது. மாரியம்மன், காளியம்மன் கோயில்கள் ஊரின் எந்தப் பகுதியிலும் அமைந்திருப்பதைக் காணமுடிகிறது. காமன் கோயில்கள் ஒரு ஊரில் பல அமைந்துள்ளன. காவல் தெய்வங்களாகிய வீரன், முனீசுவரன், ஐயனார் கோயில்கள் ஊர் எல்லையில் எழுந்துள்ளன.

## ஆ. கோயில்களின் அமைப்பு

கருங்கற்களே இல்லாத தஞ்சைப் பகுதியில் கருங்கற் கோயில்கள் மிகுதியும் அமைந்திருப்பது சிறப்பிற்குரிய காட்சியாகும். பொதுவாகப் பாரத நாட்டுக் கோயிற் கட்டடங்களைச் சிற்ப சாத்திர நூல்கள் மூன்று பெரும் பிரிவுகளாகப் பகுத்துக் கூறுகின்றன. அவை "நாகரம்". "வேசரம்", "திராவிடம்" என்பவை. "நாகரம்" என்பது வட இந்தியக் கோயில்களின் கட்டட வகை. "வேசரம் என்பது பௌத்த சமயத்தார் வளர்த்த கலையாகும். "திராவிடம்" என்பது விந்திய மலைக்குத் தெற்கே உள்ள கோயில்களின் அமைப்பைக் கூறுவது.[1] தமிழர் தம் கோயிலின் அமைப்பு, வேசர பிரிவிலிருந்து யானைக் கோயில் என்னும் கஜபிருஷ்ட விமானக் கோயில்களையும், வட்டக் கோயில்களையும் இணைத்து அமைத்து உருவாக்கிய முறையாகும்.

## கோயில் கட்டட வளர்ச்சி

சங்க காலக் கோயில்களின் வாயில்களுக்குத் துருப் பிடியாமல் செந்நிறம் பூசப்பட்ட இரும்புக் கதவங்கள் கட்டப்பட்டிருந்தன. மேற்கூரை சாந்து வேயப்பட்டிருந்தது என்பர்.[2] ஆதிகாலத்தில் மரங்களால் அமைந்த கோயில்களே மிகுதி. சிதம்பரம் கோயிலின் பழைய கட்டடங்களும், அங்குள்ள ஊர்த்துவ தாண்டவமூர்த்தி கோயிலும் ஆதிகாலத்தில் மரக்கட்டடங்களாகவே இருந்தன.[3] செங்கட் சோழன், அடுத்த நிலையில் செங்கல் கோயில்களை அமைத்து வழிபட்டான். பாறைகளைக் குடைந்து குகைக் கோயில்களை முதன் முதலில் தமிழ் நாட்டில் அமைத்தவன், மகேந்திர பல்லவவர்மன் ஆவன்.

சோழர் காலத்தில் கோயில்கள், கருவறை, நடு மண்டபம் முதலியவற்றைப் பெற்றிருந்தது. முக மண்டபமும், கோயிலைச் சுற்றி மதிலும், திருச்சுற்றும் அமைந்தன. அத்திருச்சுற்றில் சண்டீசுவர்க்குத் தனிக் கோயில் இருந்தது. தென்கிழக்கில் சூரியனும், தென் மேற்கில் விநாயகரும், சப்தகன்னியரும், மேற்கில் முருகனும் இடம் பெற்றிருந்தனர். திருச்சுற்றுகள் ஒன்று முதல் ஐந்து வரை இருந்தன. முதலாம் இராசேந்திரன் காலம் வரை யிலும் கர்ப்பக்கிருக விமானமே உயரமாகக் கட்டப்பட்டது. பல்லவர் காலத்திலும் சோழர் காலத்திலும் சக்திக்குத் தனிக் கோயிலில்லை. கி. பி. 11–ஆம் நூற்றாண்டில் முதல் இராசேந்திரனின் "எண்ணாயிரம் கல்வெட்டு" முதன் முதலாக அம்பிகைக் கோயிலைப் பற்றிக் கூறுகிறது.[4] நாயக்கர் காலத்தில் முன் கோபுரங்கள் உயரமாக எழுப்பப் பட்டன.

## தமிழகக் கோயில்களின் வகைகள்

"பெருக்காறு சடைக்கணிந்த" – எனத் தொடங்கும் திருநாவுக்கரசர் பாடலிலிருந்து கோயிலின் வகைகள்

இவையென அறியலாம்.[5] அவை, "கரக்கோயில்", "ஞாழற் கோயில்", "கொகுடிக் கோயில்", "இளங்கோயில்", "மணிக் கோயில்" "ஆலக்கோயில்" "மாடக்கோயில்" என்னும் பெயரைப் பெற்றவை. சிற்ப சாத்திர நூலார் "ஸ்ரீவிசயம்", "ஸ்ரீபோகம்", "ஸ்ரீவிசாலம்", "ஸ்கந்த காந்தம்" "ஸ்ரீகரம்" என்னும் வகைகளைக் கூறுவர்.[6] இவையன்றி "திருக்கோயில்", "குடவரைக்கோயில்" "கற்றளி" "கல்லறைக்கோயில்" "பஞ்சாயதனக்கோயில்", "பரிவாரக் கோயில்", "மரக்கோயில்", "செங்கற்கோயில்" என்பனவும் உண்டென்பார்.[7]

## திருக்கோயில் அமைப்பும் தத்துவமும்

பொதுவாகக் கோயில் ஆறு உறுப்புகளைப் பெற்றது அவை "அதிஷ்டானம்", "சுவர்", பிரஸ்தரம்", "கிரீவம்", "சிகரம்", "ஸ்தூபி" என்பன.[8] இவை முறையே அடி உடல், தோள், கழுத்து, தலை, முடி என்னும் மனித உடலின் உறுப்புகளோடு உவமிப்பர். கோயில் விமானம் ஆறு உறுப்புக்களைக் கொண்டது. அவை, "அதிஷ்டானம்" "பாதம்", "மஞ்சம்", "கண்டம்", "பண்டிகை" "ஸ்தூபி" எனப் பெயர் பெறுவன. பண்டிகையின் அமைப்பு வெவ்வேறு விதமாக அமைக்கப்படும். அவை, நான்கு பட்டை, ஆறுபட்டை, ஏழு பட்டை, வட்டம் என்பவை.

இறைவன் எழுந்தருளி இருக்கும் திருக்கோயிலின் அமைப்பு "சரீரப் பிரஸ்தாரம்" என்றும் "இருதயப் பிரஸ்தாரம்" என்றும் இருவகைப்படும். "அர்த்தமண்டபம்" "தம்ப மண்டபம்", "கர்ப்பக்கிரகம்", "மகா மண்டபம்" "ஸ்நபன மண்டபம்", "நிருத்த மண்டபம்" என்ற ஆறு மண்டபங்கள் பெரும்பாலும் மனித உடலின் உறுப்பைப் பெரிதும் ஒத்திருக்கும். இவைகள் "மூலாதாரம்" "சுவாதிட்டானம்", "மணி பூரகம்", "அநாகதம்" "விசுந்தி", "ஆக்ஞை" என்னும் ஆறு ஆதாரங்களைக்

குறிப்பிடுகின்றன. கோயில்களில் உள்ள ஐந்துபிரகாரங்களும் முறையே "அன்மையகோசம்", "பிராணமய கோசம்", "மனோமய கோசம்", விஞ்ஞானமய கோசம்", "ஆனந்த மயகோசம்" என்னும் நமது ஐவகை உடல்களைக் குறிக்கும். மூன்று பிரகாரங்கள் மட்டும் இருப்பின் அப்பொழுது அவைகள் "ஸ்தூலசரீரம்", "சூக்கும சரீரம்" "குண சரீரம்" என்னும் நமது மூவகை உடல்களைச் சுட்டும்.[9]

சீர்காழி வட்டக் கோயில்களின் அமைப்பை நான்கு பெரும் பிரிவுகளுள் அடக்கலாம். அவை வருமாறு:

1. கோபுரங்கள், மற்றும் விமானம் அமையப் பெற்றவை. கருங்கற்கள், செங்கற்கள் கொண்டு கட்டப்பட்டவை. கட்டட சாத்திர முறைக்கு உட்பட்டவை.

2. ஓடு, மற்றும் கூரை வேயப்பட்ட சிறு தெய்வ, பெருந்தெய்வக் கோயில்கள்.

3. மேடைகளாகவும், சிறு மண்டபங்களாகவும் அமைந்த கோயில்கள்.

4 மரத்தடியில் அமையப் பெற்ற கோயில்கள் என்பன அவை ஆகும்.

**முதல்வகை:**

இந்நான்கு பிரிவுகளுள் முதலில் கூறப்பட்ட வகையைச் சார்ந்த கோயில்கள் தத்துவமுறைப்படி அமைந்தன. மன்னர்களாலும், சமயச் செல்வந்தர்களாலும் பல்வேறு காலத்தில் பல்வேறு நிலையில் கட்டி முழுமை பெற்ற கோயில்களாகும்.

சீர்காழி சட்டைநாதர் கோயில் ஏனைய கோயில் களினின்றும் மாறுபட்டது. பிரும்மபுரீசுவரர் கர்ப்ப

கிரகத்திற்குப் பின்புறமாக மலை ஒன்று கட்டப்பட்டுள்ளது. இது இருபது பறவைகள் ஏந்திய நிலையில் அமைந்தது. இம்மலை மூன்று பிரிவுகளை உடையது. அடிப்புறம்; நடுவில் தோணியப்பர் கர்ப்பக்கிரகம்; இதனின் தெற்கே சற்றுத்தள்ளி உச்சியில் சட்டையப்பர் சந்நிதி; என மூன்று நிலைகளை உடையது. வடக்குப்புறத்தில் மலை ஏற படிகள் அமைக்கப்பட்டுள்ளன. இதனைக் கடந்து உள்ளே சிறு சுற்றுப் பிரகாரமும், அதனுள் தோணியப்பர் உமையோடு பெரிய கோலத்தில் எழுந்தருளிய காட்சியையும் காணமுடியும். சிறு சுற்றின் தென்மேற்கு மூலையில் சட்டைநாதர் சந்நிதிக்குப் போக படிகள் அமைக்கப் பட்டுள்ளன. இப்படிகளின் நடுவே நின்று தரிசிக்கும் நிலையில் சிறு அறையொன்றில் சட்டைநாதர் எழுந்துள்ளார்.

இம்மலையினடியில் பிரும்மபுரீசுவரர் எழுந்துள்ளார். இவரின் தென் பாகத்தில் திருஞான சம்பந்தர் உற்சவ மூர்த்தியின் திருக்கோயிலமைந்துள்ளது. தென் பிரகாரத்தில் சட்டை நாதரின் பலிபீடம் அமைந்துள்ளது. வட பிரகாரத்தில் தல விருட்சம் உள்ளது.

இக்கோயிலை அடுத்துப் பெரிய பிரகாரமும், வட புறத்தில் பிரும்மத் தீர்த்தக்கரையின் மேல்புறம் திருநிலை நாயகிக்கும், முருகனுக்கும் கோயில்கள் கட்டப்பட்டுள்ளன. பிரும்மபுரீசுவரர், திருநிலை நாயகி கோயில்களுக்கு இடையே, திருஞான சம்பந்த மூர்த்தியின் மூலவர்கோயில் எழுப்பபப்பட்டுள்ளது. தெற்குப் பெரிய பிரகாரத்தில் நடுவே அட்ட பைரவர் மண்டபம் கட்டப்பட்டுள்ளது. நான்கு திசைகளிலும் இராசகோபுரங்கள் அமைக்கப் பட்டுள்ளன.

பெரும்பாலான சந்நிதிகள் கிழக்கு நோக்கியே உள்ளன. ஆனால் வைத்தீசுவரன் கோயில், வைத்தியநாதர்

கோயிலின் சக்தி சந்நிதி தெற்கு நோக்கி அமைந்துள்ளது. சுவாமி சந்நிதி மேற்கு நோக்கி அமைக்கப்பட்டுள்ளது. இக்கோயிலின் கிழக்கே இரு கோபுரங்களுக்கு இடையே ஆதி வைத்தியநாதர் எழுந்துள்ளார். செல்வ முத்துக்குமாரர் சந்தனாபிசேக மண்டபம் தெற்கு நோக்கி அமைக்கப்பட்டுள்ளது.[10] இக்கோயிலில் சடாயுகுண்டம் சிறப்பு வாய்ந்தது. இராமர், சடாயுவைத் தகனம் செய்த இடத்தை இது குறிக்கும். இக்கோயிலில் நவக்கிரகங்கள் அனைத்தும் மேற்கு நோக்கி ஒரே வரிசையில் அமைந்துள்ளது சிறப்புக்குரியதாகும்.

திருப்புன்கூர் கோயில் நந்தியின் அமைப்புப் புராணத் தன்மை வாய்ந்தது. 15 அடி நீளம், 7 அடி அகலம், 7 அடி உயரம் உடையதாக நந்தி பெரிய அளவில் அமைக்கப் பட்டுள்ளது. சந்நிதிக்கு நேரே இல்லாது 2 அடி வடபுறம் தள்ளிய நிலையில் இந்நந்தி கட்டப்பட்டுள்ளது.[11] சைவக் கோயில்களைப் போலவே வைணவக் கோயில்களும் கோபுரங்கள் மதிற்கற்றோடு அமைந்துள்ளன. வைணவக் கோயில்களில், தாயார் கோயில்கள் தனியே உள்ளன.

**இரண்டாம் வகை:**

கூரைகளாலும், ஓடுகளாலும் வேயப்பட்ட கோயில்களே இவ்வட்டத்தில் மிகுதி. இவ்வகையான கோயில்களில் சிறு தெய்வங்கள்தாம் அமைய வேண்டும் என்பதில்லை. சிறு தெய்வங்களுக்கு விமானம் எழுப்பப் பட்ட கோயில்களும் உண்டு. ஆனாலும் பெரும்பாலான சிறு தெய்வங்கள் இத்தகு கோயிலில்தான் குடிகொண்டுள்ளன.

கூரைவேயப்பட்ட "அங்காளம்மன் கோயிலில்" தெய்வங்கள் அமைவிடம் எவ்வாறு உள்ளன என்பது பற்றிப் பழைய சுவடி ஒன்று சான்று பகர்கிறது.[12] அது வருமாறு:

அங்களாம்மனுக்கு கெளக்கு முகம் - வலது பக்கம் கொஞ்சம் கெளக்கு வடக்கு முகம் அறகு பந்திராசா என்குற பாலகுரு நாத சாமிக்கு நெலெ. அங்காளம் மனுக்கு சரியான யெடது பக்கம் கெளக்கு முகம் மாரியம்மன் நெலெ... பெரியம்மனுக்கு எதுக்க வலது புறம் பேச்சியம்மனுக்கு நெ்லெ. இடதுபுறம் பத்திர காளியம்மனுக்கு நெலெ... பேச்சியம்மன் நிலையில் அடுத்த கிழக்கு நெலெ இருளப்பசாமிக்கு. இதுக்கு கிழக்கே பெரியம்மனுக்கு நேரே இருளப்பசாமிக்கு மசான குழி. நாலுபுறமும் மோடையிட்டு ஓமகுறி போலே செய்து பிள்ளையார் அஞ்சி பெரிதாக வைத்து நிலையாக்கவும்... மேற்படி அதுக்குக் கெளக்கே வலது புறம் மதுரை வீரனுக்கு நெலெ. இடதுபுறம் முத்தாரு ராவுத்தருக்கு நெலெ...

திருமுல்லை வாயிலில் அமைந்துள்ள "திரௌபதி யம்மன் கோயில்" ஓடுகளால் வேயப்பட்டது. கருவறையில் திரௌபதி உள்ளாள். இவள் எதிரே பலிபீடமும், கழுமரமும் உள்ளன. பலிபீடத்திற்கு நேரே தெற்கே வடக்கு முகமாக அரவான் தலை பெரிய வடிவில் கட்டப் பட்டுள்ளது. இதற்குத் தெற்கே வடக்கு முகமாக ஏழு கன்னிமார்கள் கல் உருவில் எழுந்துள்ளனர். இக்கோயிலில் கிருஷ்ணனும், லிங்க மூர்த்தியும் ஒரே பீடத்தில் இருப்பது சிறப்பிற்குரியது.

"உருத்திராபதியார் கோயில்கள்" பல கூரையால் வேயப்பட்டவையே. கோயிலைச் சுற்றி உட்பிரகாரம் உள்ளது. சந்நிதிக்கு நேரே ஐம்பது அடி தொலைவில் பெரிய அத்திமரம் உண்டு. இம்மரத்தைச் சுற்றி மேடை கட்டப்பட்டுள்ளது. மேடையின் மேல், மரத்தை ஒட்டி மேற்கு முகமாகச் சிறு பீடம் அமைந்துள்ளது. விழாக்காலங்

களில் இம்மேடை மீது அமர்ந்தே பைரவ மூர்த்தி உணவு உண்பதாகக் கூறுவர்.

**மூன்றாம் வகை:**

மேடையாகவும், சிறு மண்டபமாகவும் அமைந்த கோயில்கள் பல. ''காமன் கோயில்'' மேடையாக அமைந்ததே. ஐந்தடி சதுர மேடையின் மீது நான்கடி சதுர மேடையும், அதன்மீது மூன்றடியும், இரண்டடியும், ஓரடியுமான சதுர மேடைகள் எழுப்பப்பட்டிருக்கும். ஓரடி சதுர மேடையின் மீது காமக்கடவுளை நடுவதற்குச் சிறுபள்ளம் தோண்டப்பட்டிருக்கும். விழாக்காலங்களில் இம் மேடையின் மீது மாவிலை, தென்னை, பனைக் கூந்தல்களால் பந்தலிடப்பட்டிருக்கும். காமனை நடுவதான பள்ளத்தில் காமன் என்று மதிக்கப்படும் கம்பை நடுவர். கரும்பு, வாழைக்கன்று, நாணல், ஆமணுக்குச் செடி, மாவிலை, இராட்டி போன்றவற்றைச் சேர்த்துக்கட்டிய கம்பையே காமனாக மதிப்பர். இதன் அடிப்புறத்தில் மண்ணாலான லிங்க மூர்த்தியும் எதிரே நந்தியும் எழுந்திருப்பர்.

வீரனார், முனீசுவரன், அய்யனார் கோயில்களில் எழுப்பப்பட்டிருக்கும் சிறு மண்டபங்கள் பிற்காலத்தில் கட்டப்பட்டனவாகும்.

**நான்காம் வகை:**

மரத்தடியில் அமையப் பெற்ற கோயில்களும் உண்டு. வருசபத்து என்ற கிராமத்தில் இருக்கும் மூன்று இலிங்கங்கள் மரத்தடியில் உள்ளனவேயாகும். இம்மூர்த்தி களுக்கு இவ்விடத்தில் முன்பு கோயில் இருந்திருந்து பின்னர் அழிந்திருக்க வேண்டும். வீரனார், முனீசுவரன், ஐயனார், போன்ற தெய்வங்கள் மரத்தடியில் எழுந்து உள்ளனர். விநாயகர் ஒவ்வொரு அரசமரத்தடியிலும்

இருந்து அருள்புரிவார். இம்மரத்தடி கோயில்களே ஆதிக் கோயிலாக இருந்திருக்க வேண்டும். இவ்வாறாக நான்கு அமைப்புகளில் சீர்காழி வட்டக் கோயில்கள் அமைந் திருப்பதைக் காணமுடிகின்றது.

## இ. தலவிருட்சமும் தீர்த்தமும்

மூர்த்தி, விருட்சம், தீர்த்தம் மூன்றும் ஒவ்வொரு கோயிலிலும் முக்கிய பகுதியாகக் கருதப்படுவன. இன்றைய நிலையில் பல கோயில்களில் விருட்சம், தீர்த்தம் இரண்டும் இருப்பது இல்லை. சில கோயில்களில் இவ்விரண்டும் கீர்த்தியோடு வழிபடப்படுகின்றன.

**தல விருட்சம்:**

சமயந் தொடர்பான எந்த ஒன்றினுக்கும் தோற்றம் பற்றிய வரலாறு கிடைப்பது அரிது. அந்த வகையில் தல விருட்சமும் ஒன்று. இதன் தோற்றம் பற்றிய ஊகச் செய்திகளே இதுகாறும் நிலவி வருகின்றன. மரத்தரடியில் எழுப்பப்பட்ட கோயில்களைச் சங்க காலத்திலேயே காண முடிகிறது. முறையான கோயில் வழிபாடு தோன்றும் முன்னர்; மனிதன் இயற்கையைக் கடவுளாகக் கொண்டாடிய காலத்தில், மரத்தடியிலேதான் இறைவழிபாடு செய்திருக்கிறான்.

தல மரத்தின் தோற்றக் கொள்கையையும், கடவுள் தோற்றக் கொள்கையையும் இணைத்துக் காணும் பொழுதுதான் தலவிருட்சம் பற்றி ஒரு முடிவுக்கு வரமுடிகிறது. தலவிருட்சம் பற்றி கோ. தங்கவேலு அவர்கள் கூறுவது வருமாறு:[13]

> இடுகாடுகள் மரத்தடியிலே தோன்றின. அஃதாவது மரத்தடியில் பிணத்தைப் புதைத்தனர். தொல்காலத்து மக்களுக்கு வெட்டவெளி வாழ்க்கை இன்பமயமாக்கப்

> பட்டது. வெட்டவெளியிலுள்ள மரம் அவர்களின் இடுகாட்டின் இடமாயிற்று. எனவேதான் அதனடியில் புதைத்து அதனையும் தம் மூதாதையர் போலவே புனிதச் சின்னமாகக் கொண்டு வணங்கினார்கள். இன்றும் புதைகுழி மீது துளசிச் செடி அரசமரக்கிளை நடுவது திராவிடர்களின் பழக்கமாகும். ஆரியம் புகுந்தபின் இது ஒவ்வொரு கடவுளருக்கும் ஒவ்வொரு தனிமரமாகப் பிரிக்கப்பட்டுப் பின்னர் அக்கடவுளரின் சின்னமாகக் கொள்ளப்பட்டது.

இவ்வாறு தலமரம் பற்றிய தோற்றக் கொள்கை உண்டு. கடவுள் வழிபாடு இடுகாட்டில் தாம் தொடங்கப்பெற்றது எனின் இக்கொள்கை ஏற்றுக்கொள்ளக் கூடியதே.

மேலும் தெய்வக் கொள்கைகள் முழு உருவம் பெற்று ஒவ்வொரு மக்களுக்கும் ஒரு தெய்வம் என வரையறுக்கப் பட்ட பின்னர்க் கூட மரத்தடியில் வழிபடுதல் இயல்பாகக் கொள்ளப்பட்டது. சிலப்பதிகாரத்தில் குறவர்கள் மரத்தடியில் தெய்வ வணக்கம் செய்யும்முறை குறிப்பிடப் பட்டுள்ளது.

> சிறு குடி யீரே சிறுகுடி யீரே
> தெய்வங் கொளுமின் சிறுகுடி யீரே!
> ... ... ... ... ... ... ...
> நறுஞ்சினை வேங்கை நன்னிழற் கீழோர்
> தெய்வங் கொள்ளுமின் சிறுகுடி யீரே!

எனக் குறவர்கள் கண்ணகித் தெய்வத்தை வழிபட வேங்கை மரத்தடியைத் தேர்ந்தெடுத்ததை இளங்கோவடிகள் கூறுகிறார்.[14]

இவ்வாறாக முன்னர்த் தலமரத்தடியில் வழிபட்ட இறைவனையே கட்டடக்கலை வளர்ந்த பின்னர்க் கோயிலமைத்து வழிபட்டனர் என்று கருத வாய்ப்பு இருக்கிறது.

முன்பு இறைவன் குடிகொண்ட மரம் ஆதலின் அதற்குப் புனிதத்தன்மை ஏற்றி வணங்கினர். நாளாக நாளாக இம்மரம் கோயிலின் உறுப்புகளில் ஒன்றாக இணைக்கப் பட்டது. இதனை வலியுறுத்தச் சான்றும் உண்டு.

வைத்தீசுவரன் கோயில் வைத்தியநாத சுவாமியின் தலமரம் வேம்பாகும். இதனடியில் எழுந்துள்ள இலிங்க மூர்த்தியை "ஆதி வைத்தியநாதர்" என இன்றுங் கூட அழைக்கக் காணலாம். இதனை நோக்கும் போது வைத்திய நாதர் கோயில் வழிபாட்டிற்கு முன்னர் இவ்வேம்படியே வழிபாட்டுத் தலமாக அமைந்திருக்க வேண்டும் என எண்ணவேண்டி உள்ளது.

**சீர்காழி வட்டத் தலவிருட்சம்:**

சீர்காழி வட்டத் தல மரங்களில் புள்ளிருக்கு வேளூர் (வைத்தீசுவரன் கோயில்) வைத்தியநாதர் கோயில் தலமரம் புகழ்பெற்றது.

> இத்தலம் கிரேதா யுகத்தில் கதம்பவனம் என்றும், திரேதா யுகத்தில் வில்வவனம் என்றும், துவாபர யுகத்தில் வகுளவனம் என்றும், கலியுகத்தில் நிம்பவனம் என்றும் பெயர் பெற்று விளங்குவதாகும். முதல் யுகத்திலுள்ள கடம்ப விருட்சமே மற்றைய மூன்று யுகத்திலும் முறையே வில்வம் முதலிய விருட்சங்களாகத் திரிந்தன.

என்பர்.[15]

இத்தல மரம் கீழைக் கோபுர வாயிலின் உட்புறம் உள்ளது. இதனை வேம்படிமால் என்றழைப்பர்.[16]

தலவிருட்சத்தின் அடியில்தான் இறைவன்தோன்றினான் என்பதற்குத் திருமுல்லை வாயில் முல்லைநாதர் கோயில் தலமரம் சான்றாகும். தேர்க் காலில் சிக்குண்ட முல்லைக்

கொடியை வெட்டமுனையும்போது அம்முல்லைக் கொடிய
அடியில் இலிங்க மூர்த்தி இருப்பதைக்கண்டு அங்குக் கோயி
எழுப்பப்பட்டதாகச் செவிவழிச் செய்தியுண்டு. மர
போன்று வளர்ந்து நிற்கும் இம்முல்லைச் செடி இலிா
மூர்த்தியின் பின்புறமாக அமைந்துள்ளது.

திருப்புன்கூர் கோயிலின் தலவிருட்சம் புங்கு மரமாகு
இப்புங்க மரத்தடியில் சுவாமி பிரம்மாவுக்கு ஐ
முகமாகக் காட்சியளித்த பஞ்சலிங்க மேடை உள்ளது.

சீர்காழி சட்டைநாதர் கோயில் தலமரம் பாரிசா
ஆகும். இது கொன்றையைப் போலப் பூத்து, மாதுளை
போல் காய்த்து, மாவைப் போல் பழுத்து முறை
மந்திரம், மணி, மருந்தின் தன்மையைப் பெற்றது என்பா

திருவெண்காட்டு அகோர மூர்த்தி கோயில் மூன்று
மரங்களைப் பெற்றது. ஆலமரத்தை முதல் விருட்சமா
கொண்டது. இதனை வடவால விருட்சம் என்
இம்மரத்தடியில் உள்ள ருத்ரபாதத்தில் மக்கள் பிதிர்க்கட
செய்வர். இரண்டாவதாக வில்வமரமும், மூன்றாவதா
கொன்றை மரமும் ஆக மூன்று தல விருட்சங்
காணப்படுகின்றன.

**தீர்த்தங்கள்:**

சீர்காழி வட்டத்தில் எண்ணற்ற தீர்த்தங்கள் உள்ள
இத்தீர்த்தங்கள் மக்களின் மனநோயையும், உ
நோயையும் போக்குமென நம்பப்படுகிறது. ஒவ்வெ
தீர்த்தத்திற்கும் ஒரு புராண வரலாறு உண்டு. கோயில
உள்ளே இருப்பனவும், வெளியே இருப்பனவும் தீர்த்தமா
கொள்ளப்படுகின்றன. வாய்க்கால், குளம், கிணறு எ
வடிவங்களில் தீர்த்தங்கள் காணப்படுகின்றன. இத்
தீர்த்தங்களில் புகழ்வாய்ந்தன சில பின்வருமாறு:

சீர்காழி நகரில் இருபத்தியோரு தீர்த்தங்கள் உள்ளன.[18]

**பிரும்ம தீர்த்தம்:** இதுவே தீர்த்தங்களில் முதன்மை யானது. இத்தீர்த்தக்கரையிலேதான் ஞானசம்பந்தமூர்த்தி, சைவ உலகு உய்ய அம்மையார் அளித்த சிவஞானப் பாலை உண்டனர்.

காளிதேவி தன்பழி நீங்கும் பொருட்டுத் தோற்றுவித்த தீர்த்தம் **காளி தீர்த்தம்** ஆகும். இது மேலைக் கோபுர வாயிலுக்கு அருகே வெளியே அமைந்துள்ளது.[19]

பராசரரால் தோற்றுவிக்கப்பட்டது **பராசரத் தீர்த்தம்.** சுவாமி கோயிலின் உட்பிரகாரத்தில் கிணறு வடிவாய் அமைந்திருக்கிறது. இதிலிருந்தே எல்லா மூர்த்தங்கட்கும், அபிடேகத் திருமஞ்சனம் எடுத்துச் செல்லப்படுகிறது.

**புறவாநதி:** இது புறா வடிவுடன் வந்த அக்னி தேவனால் சிபியின் தாகத்தைப் போக்குவதற்குக் காவிரியிலிருந்து கொண்டு வரப்பெற்றது.

**கழுமல நதி:** இந்திரனால் ஏற்படுத்தப்பட்ட நந்த வனத்தைப் பாதுகாப்பதற்கு விநாயகர் காகம் வடிவம் கொண்டு அகத்தியரது கமண்டலத்தில் இருந்ததைக் கவிழ்த்துக்கொண்டு வந்த தீர்த்தம். இது சீர்காழி நகரின் நான்கு புறங்களையும் சூழ்ந்துள்ளது. சீர்காழி வட்டத் தீர்த்தங்களின் பெருமையைப் பேசுமிடத்துச் சித்தாமிர்தத் தீர்த்தத்தைக் குறிப்பிடவேண்டும். இது வைத்தீசுவரன் கோயில் வைத்திய நாதசுவாமி கோயிலில். உள்ளது.[20]

இத்தீர்த்தம் அம்மையாரின் சந்நிதிக்கு நேரே அமைக்கப் பட்டுள்ளது. கிருத யுகத்தில் காமதேனு இத்தலத்தில் வந்து தனது முலைக்குடப்பாலால் இறைவரது திருமுடியில் அபிடேகிக்க அது "கோக்ஷிர தீர்த்தம்" என்று பெயர் பெற்றது. திரேதா யுகத்தில் சிவனடியார் ஒருவருக்குக்

கருப்பஞ்சாறு போல இனித்ததால் ''இக்ஷுசார தீர்த்தம்'' என்றும், சடாயு பலகாலும் மூழ்கி வழிபட்டதால் ''சடாயு தீர்த்தம்'' என்றும் பெயர் பெற்றது. மேலும் கலியுகத்தில் சித்தர்களும் இறைவர் திருமுடியில் தேவாமிர்தத்தால் அபிடேகிக்க அது இத்தீர்த்தத்தில் கலந்தமையால் ''சித்தாமிர்தத் தீர்த்தம்'' என்று பெயர் வழங்கப்பட்டது. இத்தீர்த்தத்தால் சுந்தரன் என்னும் பிராமணனது வெண் குட்டமும், அங்காரகனது செங்குட்டமும் நீங்கியது. தக்கனுக்குத் தலையும் உடலும் சேர்ந்ததும் இத்தீர்த்தத் தாலேயாகும். சதானந்தர் என்னும் முனிவர் சாபத்தால் இதில் எக்காலத்தும் தவளைகளும், பாம்புகளும் இல்லாது போயின. திருவெண்காட்டு அகோர மூர்த்தி கோயில் மூன்று தீர்த்தங்களைப் பெற்றது. அகோர சிவனார் ஆயுத பாணியாய் நின்று விழித்து நோக்கும்போது அவர் விழியி னின்றும் சிந்திய மூன்று நீர்த்துளிகளும் மூன்று தீர்த்தங் களாயின என்று தலபுராணம் கூறுகிறது. இவைகளை அக்னி தீர்த்தம், சூரிய தீர்த்தம், சந்திர தீர்த்தம் என்றழைப்பர். ''வெண்காட்டு முக்குளநீர்'' - என்று ஞானசம்பந்தர் போற்றுவர்.

இவ்வாறாக சீர்காழி வட்டத்தில் எண்ணற்ற தல விருட்சங்களும், தீர்த்தங்களும் உள்ளன. இவற்றின் பெருமைகளை அவ்வத் தல புராணங்கள் விரிவாகக் கூறுகின்றன.

## ௬. தெய்வங்களின் உருவ அமைப்பும் கீர்த்தியும்

எங்கும் நிறைந்துள்ள இறைச் சக்திக்கு எஞ்ஞான்றும் உருவம் கற்பிக்கப் பண்டைத் தமிழர் முனைந்ததில்லை.

> கடவுள் வழிபாட்டிற் குரிய கோயில்களில் ஆதி காலத்தில் கடவுளின் உருவங்களை வைத்து வணங்க வில்லை.[21]

இயற்கையை நோக்கி, வழிபாடும், பலி முறைகளுமே மேற்கொள்ளப்பட்டன. நாட்கள் செல்லச் செல்ல இயற்கைக்கும், மனிதனுக்கும் இடைவெளிகள் அதிகமான போது, இயற்கையோடு நேரடித் தொடர்புகொள்ள இயலாத நிலையில் உருவ வழிபாட்டின் தோற்றம் கால் கொள்ளத் தொடங்கியது. எண்ணெய் இட்ட சிறு கற்கள் உருவ வழிபாடு இக்காலத்தில்தான் தொடங்கியிருக்க வேண்டும். புராணம் புகுந்த தொடக்கக் காலத்தில் ஒவ்வொரு தெய்வத்திற்கும் பல உருவங்கள் நிர்ணயிக்கப் பட்டன. அவ்வாறு தோன்றியவையே சக்கரமும், திரிசூலமும் ஆகும்.

> திருமாலுக்குச் சக்கரத்தையும், (திருவாழி) சிவனுக்குத் திரிசூலத்தையும், பின்னர் லிங்கத்தையும் வைத்து வழிபட்டனர்.

என்பர்.[22]

புராணக் காலத்தில், கண்ணுக்குத் தெரியாமல் உருவமும் இல்லாமல் அண்ட வெளியில் கலந்திருக்கிற பரம்பொருளின் திருமேனியே ஆகாயம் என்றும் திசைகள் அவருடைய திருக்கைகள் என்றும் உருவம் கற்பித்தனர். நான்கு திசைகளைக் குறிக்க நான்கு கைகளும், எண்டிசை களைக் குறிக்க எட்டுத் திருக்கரங்களும், எட்டோடு மேல், கீழ் ஆகியவற்றைச் சேர்த்துக் குறிக்கப் பத்துக் கைகள் எனவும் உருவங் கற்பித்தனர்.[23]

### சீர்காழி வட்டக் கோயில்களில் இறை உருவங்கள்

சைவக் கோயில்களில் சிவ உருவம் இலிங்க வடிவமே யாகும். இலிங்கம் மூன்று பகுதிகளை உடையது. இலிங்கம்,

பீடம், ஆவுடையார் இம்மூன்றும் மருந்தினால் கட்டப்பட்டு உருவமாக்கப்பட்டுள்ளது. இலிங்க மூர்த்தங்களைப் பற்றிக் கூறும்போது திருப்புங்கூர் சிவலோகநாதன் இலிங்க உருவம் குறிப்பிடத்தக்கது. இந்த இலிங்கம் மண்புற்றால் ஆன சுயம்பு இலிங்கமாகும். இதன் மேல் குவளை ஒன்று கவிழ்க்கப்பட்டுள்ளது. இந்தக் குவளை மீதே தினமும் அபிடேகம் செய்யப்படுகிறது. தானே தோன்றியவர் அதனால் "பிறவாதே தோன்றிய பெருமான்" – என்று அழைக்கப்படுகிறார்.

சிவபெருமான் குருமூர்த்தமாக மக்களுக்கு உபதேசம் செய்தும், இலிங்க மூர்த்தமாகப் பல தலங்களில் கோயில் கொண்டும், சங்கம மூர்த்தமாக அன்பர்களுக்கு வேண்டுவன அளித்தும் அருள் செய்வர். இந்த மூன்று மூர்த்தங்களும் ஒருங்கே விளங்கச் சீர்காழியில் எழுந்துள்ளார்.

**இலிங்க மூர்த்தம்:**

சீர்காழி சட்டைநாதர் கோயிலில் மூலவராக விளங்குபவர். பிருமபுரீசுவரர் என்ற நாமத்தினர். பிரமனால் உருவாக்கப்பட்டு வணங்கப்பட்டவர்.

**குரு மூர்த்தம்:**

சட்டைநாதர் கோயில் மலைமீது தோணியப்பராய் எழுந்தவர். ஞானசம்பந்தர்க்கு ஞான உபதேசம் செய்த குரு இவரே. இவர்தம் உரு சுதையால் ஆனது. பெரிய கோலத்தில், உயரமாக, தோணியின்மீது அமர்ந்து உள்ளார். இவர்தம் கையில் மானும், மழுவுமாகிய சின்னம் தரித்திலர். உடன் பெரியநாயகி அம்மையும் அமர்ந்துள்ளார்.

**சங்கம மூர்த்தம்:**

சட்டைநாதர் என்னும் பெயர் பூண்டு மலை உச்சியில் அமர்ந்து உள்ளார். மரக்கட்டையால் செய்யப்பட்ட உருவம் சுவற்றோடு பதியப்பட்டுள்ளது. சுதையும், தோலும் கொண்டு விளங்குகிறார். நவ பாடானக்கட்டு உடைய உருவம் என்று கூறுகின்றனர். ஞானசம்பந்த மூர்த்திக்கு இலிங்க வடிவம் கொடுக்கப்பட்டுள்ளது. வைத்தியநாதர் கோயில் முத்துக்குமாரசாமி சிலை நவ பாடானக்கட்டால் ஆனது என்பர். திருப்புன்கூர் கோயில் நடராசர் மூர்த்தியின் காலடியில் தேவர் ஒருவர் அமர்ந்து பஞ்சமுக வாத்தியம் ஒன்றை அடித்து இசை எழுப்பும் வடிவில் அமைக்கப்பட்டுள்ளது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

வைணவக் கோயில்களில் சுதையில் ஆன மூர்த்தங்களே அமைக்கப்பட்டுள்ளன. எனவே இம்மூர்த்திகளுக்கு அபிடேகம் செய்யப்படாமல் புனுகுச் சட்டம் மட்டும் பூசப்படும். பிற்பட்ட காலத்தில் தோன்றிய அனுமார் போன்ற உருவங்கள் கருங்கற் சிலை வடிவின. பெருமாள் கோயில்களில் கி. பி. 10–ஆம் நூற்றாண்டுக்கு முன்பு ‘தாயார் சந்நிதி’ இருந்தது இல்லை. சைவ சமயமும், வைணவ சமயமும் தனித்தனி மதமாகப் பிரிந்த பிறகு, சைவர்கள் சிவன் கோயிலில் அம்மனுக்குத் தனியாகச் சந்நிதிகள் அமைத்துக் கொண்டது போல, வைணவர்கள் திருமகளுக்கும், புவி மகளுக்கும் தனிச் சந்நிதிகளை அமைத்துக்கொண்டனர்.[24] இதனால்தான் சக்தி கோயில் சிலைகள் அனைத்தும் கலை நுட்பத்தோடு வடிக்கப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

**சிறு தெய்வ வடிவங்கள்:**

சைவ, வைணவ மூர்த்திகளைக் கண்ட பிறகே சிறு தெய்வங்களுக்கு உருவம் கற்பிக்க முற்பட்டனர். என்பர். சிறு தெய்வ வடிவங்களைப் பின்வருமாறு கூறலாம்.[25]

1. எண்ணெய் இட்ட சிறுகற்கள்.
2. சிறு சதுரமான மண்பீடங்கள்.
3. சில பீடங்களில் முகம் மட்டும் அமைந்திருக்கும்
4. சில பீடங்களில் முழு உருவமும் செய்யப் பட்டிருக்கும் இவ்வுருவம் கல்லாலோ அல்லது மண்ணாலோ ஆக்கப்பட்டிருக்கும்.
5. சில ஓட்டுச் சிலைகளையும் விழாக்காலங்களில் கொணர்வர். இச்சிலைகள் இசக்கியம்மன், பேச்சியம்மன் போன்ற பெண் தேவதைகளுக்கு உரியது.

எனச் சிறு தெய்வ வடிவங்கள் வரையறுக்கப்பட்டுள்ளன. சூலம், வைத்து வணங்கப்படும் கடவுளே மிகுதி. சூலம் மூன்று வடிவின. அவை கீழ்க்காட்டியவாறு உள்ளன. சூல உருவம், காளியம்மன், மாரியம்மன், முனீசுவரன், மதுரை வீரன், கன்னி, ஐயனார், வீரனார், பிடாரி, பேச்சியம்மன் முதலான கடவுளர்களின் உருவமாக மதிக்கப்படுகிறது. சூலம் போன்றே எண்ணெயிட்ட சிறு கற்கள் உருவமும் பல தெய்வங்களுக்குரிய வடிவமாகக் கொள்ளப்பட்டுள்ளது. கன்னிக் கோயில்களில் ஏழு கன்னிகளைக் குறிக்க ஏழு கற்கள் நடப்பட்டுள்ளன. சூல வடிவக் கடவுளில் அனைத்திற்கும் சூலத்தின் கீழ்க் கற்கள் புதைக்கப் பட்டுள்ளன. காளியம்மன், மாரியம்மன், அங்காளம்மன் முதலான தெய்வங்களுக்கு முழு உருவக் கருங்கற் சிற்பங் களும் உண்டு. இது வேதமுறைப்படி அமைந்த கோயில் களில் காணப்படுகின்றன. கிராமபுரங்களில் காணப்படும் பேச்சியம்மன் உருவம் அஞ்சத்தக்கதாய் உள்ளது. இது கோரமான உருவத்துடனும் அரக்கனின் மார்பைப் பிளந்து, குடலை வாயில் கவ்விக் குருதி படிந்த உருவத்தையும் உடையது. புத்தடி மாரியம்மன் கோயில் களில் மண்புற்றே மாரியம்மனாக எண்ணப்படுகிறது.

மதுரை வீரனுக்குச் சுக்குமாத்தடியும், பதினெட்டாம் படியார்க்கு முள் புதைத்த பாத அடியும் உருவமாகக் கருதப்படுகிறது.

உருத்திராபதியார் கோயில்களில் பட வடிவமும், ஓவிய வடிவமுமான உருத்திராபதியார் உருவம் வரையப் பட்டுள்ளது. திரௌபதியம்மன் கோயில்களில் அரவான் தலை குறிப்பிடத்தக்கது.

கோயில் உருவச் சிலைகள், பொதுவாகக் கற்கள், மண், மரம், சுதை, உலோகம் என்ற பொருள்களால் ஆக்கப் பட்டவை எனலாம்.

## சீர்காழி வட்டத் தெய்வங்களின் சிறப்புகள்

### சைவமூர்த்திகள்

பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம்மான் இவனன்றே எனச் சம்பந்த மூர்த்திகள் தோணியப்பரைப் போற்றிப் பரவியுள்ளார்.[26]

பார்கொண்டு முடிக்கடல் கொண்ட ஞான்று
நின்பாதமெலாம்
நாலஞ்சு புள்ளினம் ஏந்தின என்பர் நளிர்மதியம்
கால் கொண்ட வளர்கைச் சடைவிரித்தாடும்
கழுமலவர்க்
காளன்றி மற்றுமுண்டோ அந்தணாழி அகலிடமே

என்று இம்மலை வந்த வரலாற்றையும், கழுமல நாதனையும் நாவுக்கரசர் பாடிப் பரவியுள்ளது சிறப்பிற் குரியது.[27] ஞானசம்பந்தர் அவதரித்த தலம் இது எனச் சீர்காழியை மிதிக்க அஞ்சிய சுந்தரர் ஊர் எல்லையில் நின்று இப்பெருமானைப் பாடியுள்ளார்.

இவர் பாடலின் ஈற்றடி
கழுமல வளநகர் கண்டு கொண்டேனே

என அமைந்துள்ளது.[28]

சட்டை நாதரின் பெருமையைத் தல புராணம் கூறும். இப்பாடல் இரணியனைக் கொன்ற நரசிம்மத்தின் வலியழித்த செய்தியைக் கூறுகிறது. அது வருமாறு.[29]

துங்கமா மணித் தூணில்வந் திரண்யன்
　　தோள்வலி தனை வாங்கும்
சிங்க வேற்றுரி அரைக்கசைத் துலகெலாம்
　　தேர்ந்தளந் தவன் மேனி
அங்கம் யாவும்ஓர் கதையதாய்க் கொண்டதன்
　　அங்கியாப் புனைகாழிச்
சங்க வார்குழைச் சட்டைநா யகன்துணைத்
　　தாமரைச் சரண்போற்றி

என இப்பாடல் அமைந்துள்ளது.

வைத்தீசுவரன் கோயிலில் வைத்தியநாதர், ஆன்மாக் களின் உடற்பிணியையும், உயிர்ப்பிணியையும் போக்கத் திருவுளங்கொண்டு இத்தலத்தில் எழுந்துள்ளார். இதனை நாவுக்கரசர்,

மந்திரமும் தந்திரமும் மருந்து மாகி
தீராத நோய் தீர்த்தருள வல்லான்...

எனப் பாடுவர்.[30] இங்கு வரும் பிணியுடையோர்க்கு இறைவன் மருந்தளிப்பதை,

தக்க மருந்து தருவா யென்
றனை யாண் டருள் வைத் தீச் சுவரனே

என வைத்தியநாதர் பதிகம் கூறும்.[31] இங்குள்ள முருகப் பெருமான் கீர்த்தி பெற்றவர். இப்பெருமானே, "எவ்வாறு துதிப்பேன்" என்று மயங்கிய குமரகுருபர அடிகளுக்குப் "பொன் பூத்தகுடுமி" என அடியெடுத்துக் கொடுத்துப் பாடும்படி அருள் செய்தவர். இவரைச் செல்வ முத்துக்குமரசுவாமி என்றழைப்பர்.

நந்தனார்க்காக நந்தி விலகச் செய்தவர் திருப்புன்கூர் சிவலோகநாதர் ஆவார்.

சற்றே விலகியிரும் பிள்ளயாய்
சந்நிதானம் மறைக்குதாம் நீ
நற்றவம் புரியு நம்மிடதிரு
நாளைப் போவார்வந் திருக்கின்றார்

என்று இறைவன் நந்திக்கு ஆணையிடுவதாக நந்தனார் சரித்திரக் கீர்த்தனைப் பாடல் ஒன்று உண்டு.[32]

"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ள நிறை" என்று ஞானசம்பந்தர் திருவெண்காட்டு அகோர மூர்த்தியைப் போற்றி, அத்தலத் தீர்த்தத்தில் மூழ்குவோர் பேயும் பிணியும் அடையாது வாழ்வார் என்று கூறியுள்ளார்.[33]

**வைணவ மூர்த்திகள்:**

சீர்காழி வட்டத்தில், திருநாங்கூர் தேசத்துப் பதினோரு வைணவ மூர்த்திகள் கீர்த்திப் பெற்றவர்கள். நாங்கூர் காளி கோயில் குளக்கரையில் மதங்கீசுவர முனிவர் பத்திரி நாராயணனைக் குறித்துத் தவம் செய்தனர். அவருடைய பக்தியின் பொருட்டுத் திருமன் பத்திரி நாராயணன் தம் திருக்காட்சியருளி அங்குள்ள மணிமாடக் கோயிலில் அமைந்தார். மதங்கீசுவரர்க்குப் பெருமாள் பதினோரு வடிவங்கள் எடுத்துத் தரிசனம் தந்தார். அப்பதினோரு பெருமாள்களும் பதினோரு கோயில்களில் எழுந்தருளப் பெற்றனர். மதுரா, பிரயாகை, திருப்பதி, திருவரங்கன் முதலிய பதினோரு வைணவத் தலங்களில் கோயில் கொண்டிருக்கும் பதினோரு பெருமாள்களும் அன்னார்க்குத் திருக்காட்சி நல்கி நாங்கூர் மற்றும் அதைச் சுற்றியுள்ள ஊர்களில் அமைந்தனர்.

**நாராயணப் பெருமாள்:**

திருநாங்கூர் திருத்தலத்தில் இவரே தலையானவர். இமாலயத்தில் பத்திரியில் எழுந்துள்ள நாராயணமூர்த்தியே இங்கு எழுந்துள்ளார். இவரைத் தரிசித்தால் பத்திரிநாதனை வணங்கிய நன்மை கிட்டும் என்ற நம்பிக்கை உண்டு.

**குடமாடு கூத்தர்:**

இந்தப் பெருமாளை கண்ணன் அவதாரமாக திருமங்கை யாழ்வார் பாடுவர். கண்ணனின் பெருமைகள் பாடப் பட்டுள்ளன.

**பள்ளிகொண்ட பெருமாள்:**

இந்தப் பெருமாளைத் திருவரங்கத்துக் கடவுளாக ஆழ்வார் பாடியுள்ளார்.

**செம்பொன்னரங்கர்:**

திருநாங்கூரிலேயே வெகு அழகாகக் காட்சி தருபவர். திருமங்கை ஆழ்வார், இவரிடத்து நாட்டங் கொள்வார்க்குத் தீமை விலகி நன்மை மிகும் என்று கூறுவர்.

**அண்ணன் பெருமாள்:**

நாங்கூர்க்குத் தெற்கே ஒரு கல் தொலைவில் கோயில் கொண்டுள்ளார். இவரைத் திருவேங்கட முடையானாக ஆழ்வார் பாடுவர். திருமலை ஆண்டவனுக்கு நேர்த்திக் கொண்டு காணிக்கையை அங்குச் சென்று செலுத்த முடியாதவர்கள். அந்த நேர்த்திக் கடனை இவரிடத்தே செலுத்துவது மரபாகும். குடும்பத் துன்பத்தில் உள்ளவன் படும் துயரைத் தீர்க்கவல்ல அருமருந்தாவன் இவன் என்பார் ஆழ்வார். மற்றும் புருசோத்தும பெருமாள், வரதராசப் பெருமாள், வைகுந்தபெருமாள், மாதவப்பெருமாள், பார்த்தசாரதிப் பெருமாள் ஆகியோரும் கீர்த்தி பெற்றவர்கள் ஆவார்கள்.

## சிறு தெய்வ மூர்த்திகள்

### மாரியம்மன்

உமாதேவியின் ஒரு அவதாரமாக மாரியம்மன் கருதப் படுபவள். புற்றில் எழுந்துள்ள மாரியம்மனைப் புத்தடி மாரியம்மன் என்றழைப்பர். இதனைப்,

புத்தாய் வளர்ந்தாய் பூநாக கண்ணானா
கடித்தாய் திரும்பாத கருநாக கண்ணானா
தீண்டினா மூளாத செந்நாக குட்டியானா

என்ற உடுக்கைப் பாடலின் வரிகள் தெளிவுறுத்தும்.[34] மாரியை மழைக்குரியவள், ஆயிரங்கண்ணுடையவள், ஆதிசக்தி, பொன்மாரி, உலகம் படைத்தவள் என வழி பாட்டுப் பாடல்கள் போற்றும். மாரியம்மனின் ஏவல் தெய்வங்கள், காத்தவராயன், பஞ்சவர்ணசுவாமி, தொட்டி யத்துச் சின்னான், துறையூர் காளிப்பிள்ளை, மதுரை வீரன், ஆகியோர் என உடுக்கைப் பாடல்கள் கூறுகின்றன.

### காளியம்மன்

காளியும் உமாதேவியின் அவதாரத்தில் ஒருவரே. பார்வதியின் சாமத்திலிருந்து பிறந்தவள் என்று சைவ சித்தாந்தம் கூறும்.[35] காளியின் வரலாறு வருமாறு:

சுண்டன், முண்டன் என்னும் வீரர்கள் அநேகங் கோடி சேனைகளுடன் அம்மையாரை வந்தணுகத் தாட்சாயனி சிலந்து தன் தேகத்தைப் போர்த்தியிருந்த கருமையான சாமத்தைக் கழற்றி எறிய அதுவே காளியாய் அவ்விரண்டு அசுரர்களையும் சிரசேதம் செய்து அச்சிரசுகளை ஸ்ரீபார்வதியாருக்குப் பாதகாணிக்கை யாய் வைத்தது.

என்று கூறப்பட்டுள்ளது. தில்லையில் நடராசரோடு நடவாதம் புரிந்தது இவளே. இப்பழி நீங்கச் சீர்காழியில் தவம் புரிந்தனள். நடவாதம் புரிந்ததை,

தில்லையம்மா காளியென்று
செகமெல்லாம் பேரெடுத்தாய்
நடராசன்கூட நடம்புரிந்து
நின்ன சத்தி

என்ற உடுக்கைப் பாடலின் வரிகள் தெளிவுறுத்தும்.[36]

**அங்காளம்மன்**

அங்காளம்மன் சக்தியின் அவதாரமாகக் கருதப்படுகிறாள். 'தட்சன் யாகத்தை அழித்தவள் இவளே' யென மக்களால் கருதப்பட்டு இவளுக்கு வீர வழிபாடு நடத்தப் படுகிறது. மணப்பாறை மாமுண்டி, மாசான பொன்னீறு, பெரிய கருப்பையா, பேர்போன பொன்னாளு, மருதையா, முத்தாளு என இருபத்தியோரு துணைத் தெய்வங்களைப் பெற்றவள்.

வக்காமணி கொக்காமணி வகைவகையாத்
தாண்பூண்டா
கொக்கறவம் தான்பூண்ட வால குருநாதன் தேவியரே

என்று இவளின் உடுக்கைப் பாடல் தொடங்குகிறது.[37]

**திரௌபதியம்மன்**

மகா பாரதத்தில் பஞ்சபாண்டவர் ஐவருக்கும் மனைவியாக வரும் பாஞ்சாலியே திரௌபதியம்மனாக வணங்கப்படுகிறாள். திரௌபதிக்கு ஏற்பட்ட இன்னல்களும், அவளது சபதமும் மக்களிடையே ஏற்படுத்திய உணர்ச்சி விளைவே இவ்வழிபாடு தோன்றக் காரணம் எனலாம்.

**காமன்**

காதலர்களின் காமத் தெய்வமாவான். சிவபெருமானின் தவத்தைக் கலைப்பதற்கு இந்திரனால் ஏவப்பட்டவன்.

தன் மலர்க் கணைகளால், சிவத் தவத்தைக் கலைக்க முற்படும்போது நெற்றிக் கண்ணின் தாக்கத்தால் எரிந்து போனவன். தற்காலத்தில் மழைவளம் வேண்டிக் காம வழிபாடு நடைபெறுகிறது.

### உருத்திராபதியார்

சிறுத் தொண்டநாயனாரைச் சோதிக்க நினைத்துச் சிவபெருமான், பைரவர் வேடம் பூண்டு பிள்ளைக் கறி கேட்டனர். நாயனாரும் மனந்தளராது தன் மகவை அரிந்து சமைத்தூட்டினர். இறைவன் மகிழ்ந்து மகவை உயிர்ப்பித்து, அடியார்க்குப் பரமபதம் நல்கினார் என்ற பெரிய புராணக் கதையின் அடிப்படையில் எழுந்ததே உருத்திராபதியார் வழிபாடாகும்.[18]

இத்தெய்வங்கள் தவிர கன்னியம்மன், வீரனார், முனீசுவரன், அய்யனார், பிடாரி முதலிய கிராமத் தெய்வங்களும் கீர்த்தி பெற்றுத் திகழ்கின்றனர்.

## பண்பாட்டுக் கொடையும், இலக்கியக் கொடையும்

கோயில்கள் மூலம் பெறப்படும் பண்பாட்டுக் கொடை பற்றியும், இலக்கியக் கொடை பற்றியும், இவ்வியல் கூறுவதாவது வருமாறு:

### பண்பாட்டுக் கொடை

மனதை ஒன்றுபடுத்தி, சிந்தனைகளைச் சிதறவிடாது, ஒரு ஏகாந்தமும், அமைதியும் கிட்டுமாறு இருந்தால்தான் இறைவனை அடைய முடியும் என்பது தமிழரின் நம்பிக்கை யாகும். இந்த ஏகாந்தமும், அமைதியும் ஏற்படும் வகையில் தான் தமிழர்களின் கோயில்கள் அமைக்கப்பட்டுள்ளன. இறைவனை அடைவதற்குப் பாசங்கள் தடையாக

இருப்பனவாகும். பாசங்கள் அறுபடின் இறைபதம் எளிதில் கிட்டும். எனவேதான் தமிழர்கள் கோயில்கள் அனைத்திலும் ஆசைகளைப் பலியிடப் பலிபீடங்களை அமைத்தனர். இவ்வாறாக இறைபதம் அடையும் வழி முறைகள் ஒவ்வொன்றையும் விளக்கும் வண்ணம், கோயில்கள் அமைந்திருப்பதைச் சீர்காழி வட்டக்கோயில்கள் நிருபித்துள்ளன.

எங்கெல்லாம் அழகுணர்ச்சி இருக்கிறதோ அங்கெல்லாம் இறைமை இருக்கும் என்பது தமிழரின் நம்பிக்கையாகும். எனவேதான் தமிழர்களின் கோயில்கள், கலை வளம் மிக்கனவாக அமைக்கப்பட்டன. சீர்காழி சட்டைநாதர் கோயில் மலையை இருபது பறவைகள் ஏந்திய வண்ணம் அமைக்கப்பட்டதும், திருப்புன்கூர் நந்தி கலைத்தன்மை மிக்கதாக அமைக்கப்பட்டதும், வைத்தியநாதர் கோயிலில் உள்ள இராசகோபுர சிற்பங்களும், தமிழர்களின் கலைப் பண்பாட்டை வெளிப்படுத்துகின்றன.

பண்டைக்காலத்தில் மரத்தடியில்தான் இறைவழிபாடு நடைபெற்றிருக்க வேண்டும் என்பது மேற்கூறிய ஆய்வுக் கட்டுரையின் மூலம் பெறப்படும் கருத்தாகும். பண்டைத் தமிழர்களின் பண்பாட்டுச் சின்னமாக இருந்து வரும் மரத்தடிக் கோயில்களையே இன்றைய வீரன், ஐயன், முனியன் போன்ற தெய்வங்களின் கோயில்கள் பிரதிபலிக்கின்றன எனலாம். மேலும் இவ்வட்டத்திலுள்ள தலவிருட்சங்களும் இக்கருத்திற்கு அரணாக அமைந்துள்ளன.

புண்ணியத்துறைகளாடுதல், புனித நீராடுதல் போன்றவற்றினால் பிணிகள், தீய ஆவிகள் முதலியன அணுகாது என்பது தமிழர்களின் சமய நம்பிக்கை ஆகும். இந்நம்பிக்கையைத் திருவெண்காட்டு முக்குளம் போலும் தீர்த்தங்கள் வெளிப்படுத்துகின்றன.

எங்கும் நிறைந்துள்ள சக்திக்கு உருவம் கற்பிக்கப் பண்டைத் தமிழர் முனைந்ததில்லை. எனவேதான் பண்டைக் காலத்தில் இலிங்கம், சூலம் போன்ற இறை உருவங்கள் போற்றப் பெற்றன. இறைவனுக்கு உருவம் கற்பிக்க வேண்டும் என்று விழைந்தபோது உலகில் எவரிடமும் இல்லாத சக்தியை உடைய இறைவனுக்கு, உலகில் இல்லாத உருவத்தைக் கற்பிக்க முனைந்தனர். தன் கற்பனைக்கும் அப்பாற்பட்ட உருவத்தை இறைவனுக்குக் கொடுத்தனர். சட்டைநாதர் கோயிலில் உள்ள தோணியப்பர் உருவமும், அகோரமூர்த்திக் கோயிலில் உள்ள அகோரர் உற்சவ மூர்த்தியும், நாங்கூர் வைணவக் கோயில்களில் உள்ள திருமால் மூர்த்திகளும், மேற்கூறிய தமிழர் சமயப் பண்பாட்டைத் தெளிவுறுத்துவனவாகும்.

## இலக்கியக் கொடை

கோயில்களில் அமைந்துள்ள கடவுளர்களின் புகழையும், உருவத்தையும் வருணிக்கும் பாடல்கள் பல. நாயன்மார் களும், இத்தகு பாடல்களைப் பாடியுள்ளனர். சீர்காழி சட்டைநாதர் கோயில், திருநகரி மணவாள ரெங்கநாதர் கோயில் போன்ற சைவ, வைணவக் கோயில்களில் உள்ள மூர்த்திகளின் சிறப்பையும், உருவ அமைப்பையும் இவர்கள் பாடியுள்ளனர். காளியம்மன் கோயில், வருசபத்து அங்காளம்மன் கோயில்கள் மூலம் வெளிவந்துள்ள உடுக்கைப் பாடல்கள் போன்றவற்றால் இத் தெய்வங்களின் அஞ்சத் தக்க உருவ அமைப்பும், வியப்பூட்டும் செயல்களும் தெரிய வருகின்றன். இவ்வாறாக இக்கோயில்கள் மூலம் சில பாடல்கள் இலக்கியத்திற்குக் கொடையாக்கப்பட்டுள்ளன.

கோயில்கள் மூலம் பெறப்படும் தமிழர்களின் சில பண்பாட்டுக் கொடைகளையும், இலக்கியக் கொடைகளை யும் இவ்வியல் வெளிப்படுத்தியுள்ளது.

## குறிப்புகள்

1. வேங்கடசாமி, மயிலை. சீனி: **நுண்கலைகள்**, (சிதம்பரம், மணிவாசகர் நூலகம், இரண்டாம் பதிப்பு 1972.) ப. 19.
2. செல்வகணபதி, இரா; **சைவம்**, (சென்னை, இராஜம் அன்கோ.) ப. 12.
3. வேங்கடசாமி, மயிலை. சீனி; **நுண்கலைகள்**, ப. 12.
4. செல்வகணபதி, இரா; **சைவம்**, ப. 24.
5. திருநாவுக்கரசர்; **தேவாரம்**, (தலமுறை, 1976.) ப. 18.
6. வேங்கடசாமி, மயிலை. சீனி; **நுண்கலைகள்**, ப. 18.

7–8. தங்கவேலு, கோ; **இந்தியக்கலை வரலாறு**, (தமிழ் நாட்டுப்பாடநூல் நிறுவன வெளியீடு, 1976.) ப. 317–319.

9. **திருக்கோயில்**, (மாத இதழ்) முருகவேள், நா. இரா; "கொடிக்கம்பம் நாட்டுவிழாச் சிறப்புரை", ஏப்ரல் 1977, ப. 17.
10. இம்மண்டபம் ஒரு காலத்தில் இராமர் எழுந்திருந்த மண்டபமாக இருந்திருக்க வேண்டும். தகவல்: திரு. கல்யாணசுந்தர தேசிகர், **வைத்தீசுவரன் கோயில்.**
11. நந்தனாருக்கு நந்தி விலகியதைத் தெரிவிக்கும் பொருட்டு இவ்வாறு அமைக்கப்பட்டுள்ளது.
12. **வனபூசை போடும் விபர முறை**; (பதிவு செய்யப் பெறாத சுவடியிலிருந்து பெறப்பட்டது.)
13. தங்கவேலு, கோ; **இந்தியக்கலை வரலாறு**, ப. 337.
14. **சிலப்பதிகாரம்**; குன்றக்குரவை, வரிகள். 11–15.

15. **புள்ளிருக்கு வேளூர்த் தலவரலாறு**; ப. 10.
16. வைத்தீசுவரன் கோயில் தீர்த்தங்கள் ஒவ்வொன்றிற்கும் ஒரு தலமரம் உண்டு என்று, தலபுராணம் கூறுகிறது. ப. 7.
17. **சீர்காழித் தலவரலாறு**; ப. 7.
18. சீர்காழித் தல வரலாற்றில் இருபத்தியோர் தீர்த்தங்கள் கூறப்பட்டுள்ளன.
19. இத்தீர்த்தம் இன்று கரிக்குளம் என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. ஹரிக்குளம் என்பாரும் உண்டு.
20. **புள்ளிருக்கு வேளூர்த் தலபுராணம்**; ப. 7–10.
21–22. வேங்கடசாமி, மயிலை. சீனி; **நுண்கலைகள்** ப. 21.
23. மேற்படி; ப. 23.
24. வேங்கடசாமி, மயிலை. சீனி; **தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்**, ப. 35.
25. சண்முகசுந்தரம், சு; **நாட்டுப்புறவியல் ஓர் அறிமுகம்**, (சென்னை, இலக்கிய மாணவர் வெளியீடு, முதற் பதிப்பு. 1975.) ப. 108.
26. திருஞானசம்பந்தர்; **தேவாரம்**, (தலமுறை) ப. 35.
27. திருநாவுக்கரசர்; **தேவாரம்**, (தலமுறை) ப. 41.
28. சுந்தரர்; **தேவாரம்**, (தலமுறை, திருப்பனந்தாள் காசிமட வெளியீடு, 1978.) ப. 12.
29. **சீர்காழித் தலவரலாறு**: ப. 53.
30. திருநாவுக்கரசர்; **தேவாரம்**, (தலமுறை) ப. 47.
31. முருகையா தேசிகர்; **வைத்தியநாதர் பதிகம்** (ப. இ.) ப. 15.
32. **திருப்புன்கூர் தலவரலாறு**; ப. 15.

33. திருஞானசம்பந்தர்; **தேவாரம்**, (தலமுறை) ப. 26.

34. **உடுக்கைப் பாடல்கள்**; (மாரியம்மன் பாடல், பதிவு செய்யப் பெறாத சுவடியிலிருந்து பெறப்பட்டது.)

35. **சைவசித்தாந்தம்**; (தேர்வு வினாவிடை) (தருமபுர ஆதின வெளியீடு, 1972.) ப. 41-42.

36. **உடுக்கைப் பாடல்கள்**; (காளியம்மன் பாடல், பதிவு செய்யப் பெறாத சுவடியிலிருந்து பெறப்பட்டது.)

37. **உடுக்கைப் பாடல்கள்**; (அங்காளம்மன் பாடல், பதிவு செய்யப் பெறாத சுவடியிலிருந்து பெறப்பட்டது.)

38. பெரியபுராணத்தில் இடம் பெற்ற சிறுத்தொண்ட நாயனார் புராணக் கதையை அடியொற்றி விழா நடைபெறுகிறது.

## அ. கோயிலும் வழிபாடும்

அச்சங்காரணமாக வரும் இடையூற்றை நீக்குதற் பொருட்டுத் தெய்வத்தின் துணையை நாடுதல் இயல்பு. அங்ஙனம் நாடுவோர் தாங்கள் வழிபடும் தெய்வத்தை மகிழ்விப்பதற்காகத் தங்களுக்குள் பெரியோர்க்கும், அரசர்க்கும், விருந்தினர்க்கும் செய்யும் மதிப்புச் செயல்களைத் தெய்வத்திற்குச் செய்வர். அது பூசனை எனப்படும்.[1] இத்தெய்வங்கள் கெடுதி செய்யாதிருக்க பலி முதலியன நேர்ந்து பிரீதி செய்தால் துன்புறுத்தா என்று கருதினர். இவை நாளடைவில் சமூகத்தினரின் பழக்க வழக்கமாகவும் ஆசாரமாகவும், சடங்குகளாகவும் பரிணமித்து விட்டன.[2] பிற்காலத்தில் சமயச் சடங்குகள் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு காரணங் கற்பிக்கப்பட்டன. நாளா வட்டத்தில் சடங்குகளின் பொருள் நமக்குப் புலப்படாமல் போய்விட்டது. சடங்குகள் அமையவேண்டிய முறைகளைப் பின் வருமாறு கூறுவர்.[3]

1. சடங்குகள் பொருள் பொதிந்தனவாக இருத்தல் வேண்டும்.
2. கேட்பவர்களுக்குப் புரியக்கூடிய மொழியில் சடங்கு மந்திரங்கள் அமையவேண்டும்.
3. மேற்சொன்னவாறு சடங்குகள் அமைந்து விட்டால் சமுதாயத்தில் ஆனந்தவளம் பெருகும், விஞ்ஞானம், தத்துவம், கலை, கல்வி எல்லாம் மேலோங்கி வளரும் என்று கூறுவர்.

பண்டைக்கால வழிபாட்டு முறையைச் சிலப்பதிகாரம் கொண்டு அறியலாம்.[4]

தொண்டகம் தொடுமின் சிறுபறை தொடுமின்
கோடுவாய் வைம்மின் கொடுமணி இயக்குமின்
குறிஞ்சி பாடுமின் நறும்புகை எடுமின்
பூப்பலி செய்ம்மின் காப்புக்கடை நிறுவுமின்
பரவலும் பரவுமின் விரவிமலர் தூவுமின்

என்ற முறையில் வழிபாடு அமைந்தது தெரியவருகிறது.

**பூசை முறைகள்:**

ஆறு கால பூசை செய்யவேண்டும் என ஆகமம் கூறுகிறது. கால சந்தி, உச்சிக்காலம், சாயரட்சை, இரண்டாம் காலம், அர்த்த சாமம். விசுவரூபம், நித்யானந்த சந்தானம் எனக் காலங்களுக்குப் பெயரிடப்பட்டுள்ளன. வழிபாட்டில் திருநீராட்டல் சிறப்பிடம் பெறுகிறது. அபிடேகம் அல்லது திருமஞ்சனம் எனத் திருநீராட்டலை அழைப்பர். இத்திருநீராட்டல் ஒவ்வொன்றிலும் ஒரு பயன் அடங்கியுள்ளது. இதனைப் பின்வருமாறு அறியலாம்.[5]

> சந்தனாதித் தைலம் சுகத்தையும், மாக்காப்பு மலநிவாரணத்தையும், ஆமலகம் ரோக சாந்தியையும், மஞ்சள் மா இராச வசியத்தையும், பஞ்ச கவ்வியம் ஆன்ம சுத்தியையும், இரச பஞ்சாமிருதம் வெற்றியையும், செல்வத்தையும் பஞ்சபலோதகம் மந்திர சித்தியையும், பால் ஆயுள் விருத்தியையும், தயிர் பிரஜா விருத்தியையும், தேன் சங்கீத வன்மையையும், கரும்பஞ்சாறு நித்திய சுகத்தையும், சர்க்கரை சத்துரு நாசத்தையும்... கொடுக்குமெனச் சிவாகமங்கள் செப்புகின்றன.

என்று அபிடேகம் செய்வதின் பயன் விளக்கப்பட்டுள்ளது. இன்னின்ன காலங்களில் இன்னின்ன மலர்களால் அருச்சிக்க வேண்டும் என்ற மரபு உண்டு. வெண்ணிறப் பூக்கள் உசத், சாயரட்சை, அர்த்தயாமம் ஆகிய காலங்களுக்கும்,

செந்நிறப் பூக்கள் மத்தியான காலத்திற்கும், கொன்றை முதலிய சாத்வீக குணமுடைய பூக்கள் பிராதக் காலத்திற்கும் ஏற்றவையாகும்.

## சீர்காழி வட்டக் கோயில்களின் பூசை முறைகள்

### சைவ வைணவக் கோயில்களில்

விழாக் காலங்களில் மட்டுமே சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது. எண்ணெய், பஞ்ச கவ்வியம், பஞ்சாமிர்தம், பசுநெய், பசும்பால், பசுந்தயிர், தேன், கருப்பஞ்சாறு, பழச்சாறு, இளநீர், சந்தனம் முதலிய பொருள்கள் அபிடேகத்திற்குப் பயன்படுத்தப்படுகின்றன. கற்சிலைகளுக்கும், விழாக்காலங்களில் உற்சவ மூர்த்திகளுக்கும், அபிடேகம் செய்யப்படுகிறது. சுதை, மரம், மற்றும் புற்றாலான மூர்த்திகளுக்கு அபிடேகம் செய்யப்படுவது இல்லை. சிறு தெய்வ மூர்த்திகளுக்கு, எண்ணெய், திரவியப்பொடி, தேன் சர்க்கரை, எலுமிச்சம்பழம், இளநீர், பால், சந்தனம் ஆகிய பொருள்களே அபிடேகப் பொருள்களாகும். அபிடேகத்தில் அவ்வக் காலங்களில் கிடைக்கும் பொருளைச் சேர்ப்பதும், கிடைக்காத பொருளை நீக்கி விடுவதும் உண்டு. சீர்காழி சட்டைநாதர் சிலைக்கு அபிடேகம் செய்யப்படுவதில்லை. மாறாக வெள்ளிக்கிழமை தோறும் புனுகுச் சட்டம் சாற்றப்படுகிறது.[8] திருப்புங்கூர் சிவலோகநாதர் புற்றால் ஆனவர். புற்றின்மீது குவளை ஒன்று கவிழ்க்கப்பட்டுள்ளது. இக்குவளை மீதுதான் அபிடேகம் செய்யப்படுகிறது. திங்கள் கிழமை தோறும் குவளையை நீக்கிப் புற்றுக்குப் புனுகுச் சட்டம் சாற்றப்படுகிறது. வைணவ சுதை மூர்த்திகளுக்குப் பவித்திர உற்சவம் போன்ற காலங்களில் தைலக் காப்பு சாற்றப்படும். வைணவ அபிடேகப் பொருளில் பன்னீர் சேர்வதில்லை.

வைத்தியநாதருக்கு "அன்னாபிடேகம்" செய்வது குறிப்பிடத்தக்கது. ஐப்பசித் திங்கள் பௌர்ணமியன்று அன்னாபிடேகம் நடைபெறும். நான்கு கலம் அரிசியை வடித்து, இறைவனை முழுவதுமாகச் சோற்றால் மூடி ஆராதனை செய்வர். முத்துக்குமாரசுவாமிக்குப் "புனுகுக் காப்புத் தரிசனம்" நடைபெறுவது வழக்கம். மணப்பொருள் சாற்றி, மூன்று வெள்ளிக்கிண்ணம் புனுகு, பச்சைக் கற்பூரம், சந்தனம் வைத்து, நான்கு எலும்மிச்சைப்பழமும், ஒரு சேர் பன்னீர் அரும்பும் வெற்றிலை, பாக்கு, காளஞ்சி இவற்றினைக் கொண்டு வழிபாடு செய்வர். இம்முருகனுக்கு அர்த்தசாமப் பூசையில் சாற்றப்படும் சந்தனத்தை "நேத்திரப்பிடி சந்தனம்" என்பர்.

**நைவேத்தியம்:**

"நைவேத்தியம்" என்றால் அறிவித்தல் எனப்படும். கோயிலில் செய்யப்படும் நைவேத்தியத்தைப் பிறர்க்கு அறிவித்து அளித்தல் என்று பொருள்படும்.[7] அரிசி உணவாகிய அன்னம் ஆலயங்களில் மகாநைவேத்தியம் எனப்படும். பலவகைச் சித்தரான்னங்களே தென்னாட்டுச் சைவ, வைணவக் கோயில்களில் சிறந்த திருவமுதமாகப் பாராட்டப்படுகின்றன.[8] இவைகளில் சர்க்கரைப் பொங்கல், புளியஞ்சோறு, தயிர் சோறு, வெண் பொங்கல் முதலியன குறிப்பிடத்தக்கன. வடை, முறுக்கு, எள்ளடை, இலட்டு, தினை மாவு முதலிய இருபத்தியோரு பலகார வகைகள் வழிபாட்டில் இடம் பெறுவனவாகும் "பாவாடை" என்றழைக்கப்படும் நைவேத்தியப் படையல் முறை யொன்றுண்டு. இறைவன் முன்னர்த் தனிப்பலகையில் பச்சைக் கீற்றை விரித்து அதன்மீது வெண்ணிறத் துணியைப் போட்டு அதில் நைவேத்திய உணவை மலைபோல் அமைத்து வழிபடுவர். திருஞான சம்பந்தருக்கு, ஞானப் பால், படையல் பொருளாகும். சட்டைநாதர்க்கு வடை மாலையும், பாயசமும் நைவேத்திய பொருள்களாகும்.

**சிறுதெய்வ வழிபாட்டு முறைகள்:**

சிறு தெய்வ வழிபாட்டில் மாமிசப் படையலும், பலியிடுதலும் மிகுதியாக இடம் பெறுகின்றன. படையல்கள் சில வரையறைக்குட்பட்டனவாகும். ஒவ்வொரு பொருளும் எண்ணிக்கை யடிப்படையில் அமையும். சான்றாக அங்காளம்மன் பூசைப் பொருள்களைக் கூறலாம்.[9]

> அங்காளம்மனுக்கு ஏழு பாக்கு, ஏழு வெத்திலை, ஏழு பழம், ஏழு தேங்கா, ஏழு மாவளக்கு, ஏழு வத்தி வயித்து யெதுக்க அடுப்பு வெட்டி ஏழு பானையில் யேழுபடி அறிசி பொங்கி, தளுவை வயித்து அதில் வெங்காயம், பழம், தேங்கா, நல்ல வெல்லம், தயிர் போடுகிறது... மாரியம்மனுக்கு ௩ பாக்கு, ௩ வெத்தில, ௩ பழம், ௩ தேங்கா, ௩ மாவளக்கு ௩ வத்தி வயித்து யேதிர அடுப்பு வெட்டி ௩ பானையில் ௩ படி அரிசி பொங்கி தளுவை வயித்து அதில் வெங்காயம், வெல்லம், பழம், தேங்கா, தயிர் போடுகிறது ..

என்ற சுவடிப் பகுதியிலிருந்து தெரிய வருவதாவது வருமாறு: அங்காளம்மனுக்கு, வெற்றிலை, பாக்கு, பழம், தேங்காய், வத்தி முதலிய அனைத்துப் பொருள்களும் ஏழு என்ற எண்ணிக்கையை உடையன. மாரியம்மனுக்கு இவை மூன்று என்ற எண்ணிக்கையை உடையன. சந்நிதிக்கு நேரே அடுப்பு வெட்டி அதில் பானை வைத்துப் பொங்கி நைவேத்திய உணவு தயாரிக்கப்படும். வெங்காயம், பழம், தேங்காய், தயிர், வெல்லம் முதலியவற்றை நைவேத்திய உணவின் மீது வைக்கப்படுவது மரபாகும். வீரபத்ர காளியம்மன், பேச்சியம்மன், மதுரை வீரன், இருளப்பன், முத்தாளுஐயா முதலிய சிறு தெய்வங்களுக்கு மாமிசப் படையல் படைக்கப்படும்.

> பத்திற காளியம்மனுக்கு யெதிரே அடுப்பு வெட்டி ௩ கல அறிசி பொங்கறது ௩ பொட்டையும் முட்டையும்,

> காயியும் கருவாடும், புண்ணாக்கும் கீரையும், கொழுக்கட்டையில வெளக்கு போலச் செய்து சுட்டு, இதுபோலப் பேச்சியம்மனுக்கும் கலக்காமல் சமயல் செய்யவேணும்.

என்ற சுவடிப் பகுதியிலிருந்து தெரியவருவது வருமாறு:[10] பத்ர காளியம்மன் நைவேத்திய பொருளாக மூன்று கலம் அரிசி சமையல் செய்யவேண்டும். அதோடு பெட்டைக் கோழி, முட்டை, கருவாடு, காய்கறி, கீரையோடு சேர்ந்த புண்ணாக்கு முதலிய பொருள்களையும் சமைத்துப் படையலிட வேண்டும். சோற்றை மலை போலக் குவித்து நடுவே கோழிக்கறியையும், நான்கு மூலையில் முட்டையை யும், சுற்றிலும் கொழுக்கட்டையாலான விளக்குகளை வைத்தும் படைப்பது வழக்கமாகும். இரண்டாவது படையலின் போது பலியிடப்பட்ட கிடா, சேவல் கறிகளைச் சமைத்துப் படைப்பதுண்டு. இருளப்பனுக்குப் புழுங்கலரிசி, உணவாகும். ரொட்டி, சுருட்டு, சாராயம் வைத்துக் ''கும்பபூசை'' செய்வர்.

காளியம்மன், மாரியம்மன் படையலில், கரகம் முதலிடம் பெறுகிறது. வேப்பிலை, தென்னம்பாளை சாற்றிய கரகம் எடுத்து வந்த பின்னரே வழிபாடு தொடங்கு கிறது. இசைப்பாடல் இல்லாத வழிபாடு இல்லை. உடுக்கை பம்பை முழங்கப் பாடல்களைப் பாடி ஆவேசம் வரவழைப்பர். ஆவேசம் வந்தவர் முள் பதித்த பாத அடியின் மீது நின்று சாட்டையைக் கையில் ஏந்தி வருவர். தீய ஆவிகளால் பீடிக்கப்பட்டவர்கள் அங்கு இருப்பின், சாட்டை அடிகளுக்கு அஞ்சிய ஆவிகள் அகன்று விடும் என்று நம்பப்படுகிறது.

மேற்கூறிய வழிபாட்டு முறைகள் பூசாரிகள் பூசை செய்யும் கோயில்களில் மட்டுமே இடம் பெறுவன. ஆகம முறைப்படி நடக்கும் காளியம்மன், மாரியம்மன் கோயில் களில் இவைகள் இடம் பெறுவதில்லை.

**வழிபாட்டில் பலியிடுதல்**

பலி என்ற சொல்லுக்கு 'இறை, உடற்றிரை, ஒரு சக்கிரவர்த்தி, காகம், காணிக்கை, காய்த்திருந்த மரம், சாம்பல், சேடம், சோறு, நீறு, பலிபதார்த்தம், பிச்சை, பூசை, விண்ணோர் உணவு' எனப் பல பொருள்கள் உண்டு.[11] சிறு தேவதைகளுக்குப் பலியிடுதல் பெருமளவில் நடைபெறுகிறது. தெய்வக் குற்றம் ஏதேனும் ஏற்படின் அதனை நீக்க முயற்சி செய்தனர். அந்தத் தவறால் தம் உயிருக்கு இடையூறு ஏற்படாமல் இருக்க வேறு உயிரை இறைவர்க்கு அளித்தனர். இந்த உயிரைப் பெற்ற இறைவன் சாந்தியடைந்து தன்னை மன்னித்து விடுவான் என்ற நம்பிக்கையே பலியிடுவதற்குக் காரணமாக அமைந்தது. சிறு தேவதைகளுக்குப் பலியிடுவதை 'அறிவுரைக்கொத்து, என்ற நூலில் மறைமலை அடிகள் கடிந்துள்ளார். கொலை முதலிய செயல்களால் குற்றம் புரிந்து மன்னரால் தண்டிக்கப்பட்டவர்கள் ஆவிகளாய்த் திரிந்து வருபவர் ஆவார்கள். இறைவனால் சபிக்கப்பட்ட தமக்கு மேலும் இடர் வருமென அஞ்சிப் பலியை ஏற்காது அகலுவர். எனவே பலியிடுவது கூடாது என்பார் மறைமலை அடிகளார். இன்றைய காலத்தில் பலியிடுவது சட்டத்தின் மூலம் தடுக்கப்பட்டுள்ளது என்றாலும் கிராம புரங்களில் சிறு தேவதைகளுக்குப் பலியிடுவதை முழுமை யாகத் தடுக்க முடியவில்லை. பலியிடுவதில் சில முறைகள் உள்ளன அவை வருமாறு.[12]

> கெடா வெட்டும் கணக்கு – முதல் இருளப்பன் கெடா, ரெண்டாவது மருதை கெடா, ந வது முத்தாளு றாவுத்தர் கெடா, நாலாவது இருளப்பன் பன்னி. அஞ்சாவது சாவல முன் போல ந அருத்து பொலி சட்டியில் இருளப்பன் சாதத்தில் கொஞ்சம் எடுத்து

> பன்னிக்கு முன் வைத்து பொலிவிழும் போது யிருளப்பன் பன்னி வெட்டறது. பன்னி, கெடா, சாவ இரத்தம் பிடித்து மசானத்தில் நாலு திக்கும் சாதமெறிந்து பொலி சட்டியைப் போட்டுவிட்டுக் கைகால் சுத்தி பண்ணி வரவும் ... ...

"வனப்பூசையின்" போது பலியிடப்படும் முறையே மேல்காட்டப்பட்டுள்ளது. பலியிடுதலில் முதற்கண் சேவல் பலியிடப்படும். சேவலை அறுக்கும் போது வேதம் கூறி அறுக்க வேண்டும் என்ற குறிப்பு காணப்படுகிறது. அடுத்து இருளப்பன், மதுரைவீரன், முத்தாளய்யா மூவருக்கும் முறையே ஆட்டுக் கடா பலியிடப்படும். இருளப்பன் பன்றி வெட்டுவது விழாவின் சிறப்புக் கூறாகும். பன்றி பிறந்த மூன்றாம் நாள் முதல் அதனை வாங்கி வளர்த்து வரவேண்டும். மாதவிடாய் முதலியவை இல்லாத முதியவள் சைவ உணவு அளித்து, ஐந்து அல்லது ஆறாண்டு வளர்த்து வருவாள். பன்றி பலியிடுவதற்கு முன்னர் மூன்று சேவலை அறுத்து அதன் இரத்தத்தைப் பலிசட்டியில் பிடித்து இரத்தம் கலந்த உணவைப் பன்றிக்கு முன்னர் வைப்பர். அப்பொலியானது கீழே விழும் போது பன்றி பலியிடப்படும். பன்றி, ஆட்டுக்கெடா, சேவல் மூன்றினது இரத்தத்தையும் மண் சட்டியில் பிடித்துச் சோற்றோடு கலந்து வைத்திருக்கும் உணவைப் "பொலி சட்டி உணவு" என்றழைப்பர். இதன் பின்னர் மஞ்சளாடைத்தரித்தும், மாலைபூண்டும், உடுக்கை, பம்பை முழங்க "பொலிசட்டியை" மயானத்திற்கு எடுத்துச் செல்வர். அங்கு நான்கு திசைகளிலும் பலி சோற்றை எறிந்து மீள்வர்.

பிடாரி அம்மனுக்கும், மாதானம் மாரியம்மனுக்கும் முற்காலத்தில் எருமைக்கடா பலியிடப்பட்டது. மாரியம்மன் எருமையை நிறுத்தி, கழுத்தில் சூலத்தால் குத்தி அதன் இரத்தத்தைக் குடித்துப் பலியை நிறைவேற்றுவர். இதனைக்

குறவர் இனம் செய்து வந்தது. இன்று எருமை பலியிடப் படுவதில்லை. பிடாரி அம்மனுக்குச் "சூலாடு குத்துதல்" என்ற முறையொன்றுண்டு. நள்ளிரவில் பலிசட்டி வரும்போது நான்கு வீதியின் மூலையிலும் கருவுற்ற ஆட்டைச் சூலத்தால் வயிற்றில் குத்திப் பலியிடுவர். இன்று இப்பலியிடப்படுவதில்லை. தோப்படி மாரியம்மன் கோயிலில் சூலாட்டின் மேல் தோலில் துவாரம் இட்டு மேலே தூக்கி சுற்றிய பின்னர் ஆடு கொல்லப்படும். வேட்டங்குடி மாரியம்மன் கோயில் தீமிதி விழா நடக்கும்பொழுது தீக்குழியின் முன் ஆட்டுக்கடா பலியிடப்படும்.

**பலியிடுதலில் சில மரபுகள்**

1. சேவல், ஆட்டுக்கடா, சூலாடு, பன்றி, எருமை, பூசணிக்காய், எலுமிச்சம்பழம் முதலியன பலியிடப் படுகின்றன.
2. மஞ்சள் கலந்த நீரில் நீராட்டி, திலகம் இட்டு, மாலை சூட்டிய பின்னரே பலியிடப்படும்.
3. சில கோயில்களில் தெய்வத்திற்கு முன்னர்த் திரை யிட்ட பின்பு பலியை நிறைவேற்றுவர்.
4. ஆட்டுக்கடா, பன்றி, எருமை இவை தலை யசைத்துச் சம்மதம் தெரிவித்த பின்னரே வெட்ட வேண்டும் என்ற நம்பிக்கை நிலவுகிறது.
5. ஒரே வெட்டில் தலை வேறு உடல் வேறாக வெட்ட வேண்டும்.
6. முன்னங் கால்கள் வெட்டுப்படக்கூடாது.
7. தற்காலத்தில் பூசணிக்காய், எலுமிச்சைப்பழம் போன்றன பலியிடப்படுகின்றன.
8. பலி அரிவாள் பெரியது. அது எப்பொழுதும் ஏதேனும் ஒன்றை வெட்டிக்கொண்டேயிருக்க

> வேண்டும். எனவே எலுமிச்சம்பழம் ஒன்றை எப்பொழுதும் வெட்டிய நிலையிலேயே நிறுத்தப் பட்டிருக்கும். இவ்வாறு இல்லையாயின் வேறு எவற்றையேனும் பலி கொள்ளும் என நம்பப் படுகிறது.

இவ்வாறு பலியிடுவதற்குப் பல்வேறு விதிமுறைகள் உள்ளன.

**வழிபாட்டில் மந்திரம்:**

இறை வழிபாட்டில் மந்திரம் சிறப்பிடம் பெறுகிறது. அனைத்துக் கடவுளர்களும் மந்திர ஒலிகளுக்குக் கட்டுப் பட்டவர்கள். மந்திரம் குறித்து இரா. கணபதி அவர்கள் கருதுவது வருமாறு:[13] மனனம் செய்பவனைக் காப்பது எதுவோ அதுவே மந்திரம் எனப்படும். அசைவு ஏற்படும் இடங்களில் எல்லாம் ஒலி உண்டாகும் என்பது அறிவியல். அசைவற்ற பிரும்மம், ஆகாயமாகவும், காற்றாகவும், தீயாகவும், நீராகவும், மண்ணாகவும் இன்னும் எண்ணிறந்த பொருட்களாகவும், சக்திகளாகவும், எண்ணங்களாகவும், தோன்றிய போதெல்லாம் வெவ்வேறு அசைவுகள் உண்டாகித்தானே இருக்கவேண்டும். இந்த அசைவுகளின் போது ஏற்பட்ட ஒலிகளை ஒத்த மானுட ஒலிகளை யோகிகள் கண்டுகொண்டார்கள். இந்த ஒலிக்கோவைகளே மந்திரங்கள். இந்த ஒலிகளைக் கூறுவதின் மூலம் மூல அசைவிலிருந்து பிறந்த சக்திகளைப் படிப்படியாகப் பெற்றுக் கடைசியில் அந்தச் சக்திகளுக்கெல்லாம் மூலமான அசை வற்ற ஏகத்தையும் பிடித்து விடலாம் என்பர்.

சீர்காழி சட்டைநாதர் குறித்து ஓதப்படும் மந்திரங்களில் சில வரிகள் வருமாறு:[14]

ஓம் ஆனந்த பைரவாய நம
ஓம் அளிதாங்க பைரவாய நம
ஓம் குரு பைரவாய நம

ஓம் சண்ட பைரவாய நம
ஓம் க்ரோத பைரவாய நம
ஓம் உன்மத்த பைரவாய நம
ஓம் கபால பைரவாய நம

சிறு தெய்வங்கள் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே மந்திரங்கள் உள்ளன.

ஓம் ஸ்ரீயும் கிலியும் ஓம் ஓம் படுபடு
சிவா நந்தி மகமாயி கெவுரி திரி சூலி
ஆனந்த மாரி ரூபி லோக நாயகி
ஓம் ஓம் ஓம் அகோரமாரி அம் அம்

எனத் தொடங்கும் மந்திரம் மாரியம்மனைக் குறித்ததாகும்.[15]

## ஆ. வழிபாட்டுப் பாடல்கள்

இறைவன் இசைமயமானவன் என்பது தமிழர் கொள்கை. இன்னிசையால் இராவணன் உய்ந்தார். ஏழிசையால் ஞானசம்பந்தன் தமிழ்பரப்பினார். 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்' – என்பது சுந்தரரின் புகழாரம். இறைவழிபாட்டில் இசைப்பாடல்கள் முக்கியத்துவம் பெற்றன.

### தோற்றம்

பண்டைக்காலத்தில் இறைவனைப் பாடி வழிபடுவது மரபாகப் போற்றப்பட்டது.[16]

கடம்புகொடி யாத்துக் கண்ணி சூட்டி
வேறுபல்குரல ஒருதூக்கு இன்னியம்
காடுகெழு நெடுவேட் பாடுகொளைக்கு ஏற்ப

என்ற அகநானூற்றுப்பாடல் வழிபாட்டில் இசைப்பாடல் இடம் பெற்றது என்பதை எடுத்துக்கூறுகிறது.[17] இதன் பொருளாவது. கடப்ப மரத்திடத்தே கொடியைக்கட்டி,

கண்ணியும் சூட்டிப் பல்வேறு குரலை உடைய ஒரு தூக்கின் தாளத்தில் இனிய இசையை முழக்குவோராக முருகப் பெருமானுக்குப் பாடு கொள்ளுதற்குச் (வெறியாட்டைச்) செய்தனர். (பாடுகொளை = பாடுகொள்ளல் - வேண்டி வழிபடல்). என்பதால் சங்க காலத்திலேயே வழிபாட்டுப் பாடல்கள் சிறந்திருந்தன என்பது தெளிவாகிறது. நடுகல் வழிபாட்டில் வழிபாட்டுப்பாடல்கள் இடம் பெற்றன.

காட்சி கால்கோள் நீர்ப்படை நடுதல்
சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்தல்...[18]

என்ற அறுவகை நடுகல் வழிபாட்டு முறையில் வாழ்த்தல் என்பது, பாடலைக் குறிக்கும். வாழ்த்தல் என்பதற்குப் பழிச்சுதல் என்று பொருள் கொள்வர் இளம்பூரணர். நடுகல் வீரனின் பெயரும் பீடும் கூறி அவனை வாழ்த்துவது மரபாகும்.[91] இக்காலத்துக்குப் பிந்திய சிலப்பதிகாரத்தில் குன்றக்குரவை போன்ற பகுதிகளில் சிறந்த இன்னிசைப் பாக்கள் இடம் பெற்றன. ஆழ்வார்கள், நாயன்மார்கள் இசைத்துவம் பெற்ற வழிபாட்டுப் பாடல்களைப் பரப்பினர்.

## சீர்காழி வட்ட வழிபாட்டுப் பாடல்கள்

### சைவ, வைணவப் பாடல்கள்:

சிறு தெய்வ வழிபாட்டுப் பாடல்கள் பரவிய அளவுக்குச் சைவ வைணவப் பாடல்கள் புகழ்பெறவில்லை என்று கூறலாம்.

நாயன்மார்களின் பதிகங்களும், ஆழ்வார்களின் பாசுரங்களும் சிறந்த இலக்கியமாக மதிக்கப்படும் அளவிற்குச் சிறந்த இசைப்பாடல்களாக மதிக்கப்படுவதில்லை. பாடல்களைப் பாடுவோர் கோயிலுக்கு வெளியேயும், பாடல்களுக்கு முக்கியத்துவம் கொடுக்காதோர்

> கோயிலுக்கு உள்ளேயும் இருந்ததே இதற்குக் காரணம் என்று கூறலாம்.

என்று கா. சிவதம்பி அவர்கள் கருதுவர்.[20] எனவேதான் இச்சமயங்களின் பாடல்கள் முக்கியத்துவம் இழந்து, பாடுவாரின்மையையும் போற்றுவாரின்மையையும் பெற்று உள்ளன. ஆனால் சிறு தெய்வ வழிபாட்டுப்பாடல்கள் அவ்வாறல்ல. அவை கோயில் பூசாரியாலேயே பாடப் பெறுகின்றன. பாடத் தெரியாத பூசாரி மதிக்கப்படுவது இல்லை. கோயிலின் ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் இப்பாடல்கள் தேவையாகின்றன. எனவேதான் சிறு தெய்வ வழிபாடும் வழிபாட்டுப் பாடலும் பிரித்துக்காண முடியாத அளவுக்குப் பிணைப்பு நிலையைப் பெற்றுள்ளன. சைவக் கோயில்களில் பாடல் களைப் பாடுவதற்கு என்று ஓதுவார்கள் நியமிக்கப் பட்டுள்ளனர்.[21] வைணவக் கோயில்களில் பூசை செய்வோரே சில நேரங்களில் பாசுரங்களைப் பாடு கின்றனர். நாங்கூர் திவ்ய தேச பதினொரு பெருமாள் களின் மங்களா சாசன விழாவில் திருமங்கையாழ்வாரின் பாசுரங்கள் முக்கிய இடத்தைப் பெறுகின்றன. இதே போல் சைவக் கோயில்களில் வழிபாட்டுக் காலங்களிலும் விழாக்காலங்களிலும் பதிகங்கள் பாடப்படுகின்றன.

**சிறு தெய்வப் பாடல்கள்:[22]**

சிறு தெய்வம் குறித்து ஏராளமான பாடல்கள் உள்ளன. சான்றாகக் காமன் வழிபாட்டுப்பாடல்கள் ஊருக்கு ஊர் வேறாகவும் மாறாகவும் அமைந்து காணப் படுகின்றன. இப்பாடல்கள் முழுவதையும் தொகுப்பதும், பகுப்பதும் அரிய செயலாகும். சிறு தெய்வ வழிபாட்டுப் பாடல்களை நான்கு பெரும் பிரிவிற்குள் அடக்கலாம்.

அவை வருமாறு:

1. விழாக்காலப் பாடல்கள்.
2. உடுக்கைப் பாடல்கள்.

3. தாலாட்டுப்பாடல்கள்.

4. இரதியின் ஒப்பாரி பாடல்கள்.




**விழாக்காலப் பாடல்கள்:**

பாடல்களைப்பாடி நடத்தப்படும் விழாக்களில், இடம் பெறுவனவற்றை விழாக்காலப்பாடல்கள் என்றழைக்கலாம். காமன் விழா, அமுது படையல் விழா, படுகள விழா, மயானகூறை விழா, முளைப்பாளி விழா போன்ற விழாக்களில் பாடப்படும் பாடல்களை "விழாக்காலப் பாடல்கள்" அல்லது "விழாப் பாடல்கள்" என்று கூறலாம். இப்பாடல்களைப் பாடியே விழாவின் ஒவ்வொரு நிகழ்ச்சியும் நடைபெறுகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

காமன் விழாவில், காம தகத்தினன்றும், மூன்றாங் குழினன்றும் பாடல்கள் பாடப்படுகின்றன. இரதி மன்மதன் தர்க்கம். இரதி சிவன் தர்க்கம். மன்மதன் கொளுவிருத்தங்கள். மன்மதன் சிவத் தவத்தைக் கலைக்கும் பாடல்கள். மன்மதனை உயிர்ப்பிக்கும் பாடல்கள் என ஏராளமான பகுதிகள் அடங்கியுள்ளன. சிவனின் தவத்தைக் கலைக்க,

காமன் முயலும்போது இரதி தடுக்கவும் காமன் சினந்து பாடும் தர்க்கப்பாடல் ஒன்று வருமாறு:[23]

யேதடி ரதியே என்னுடன் பேசினாய்
யேதடி ஈஸ்பரன் என்னை எரிப்பாரென்று
வாதாடி பேசுறாய் வம்புதனமாய் நின்று
மன்னும் மலர்க்கணையை எய்குவேன் பாரடி
தன்னும் தவமதைத் தாக்குவேன் கேளடி
பன்னும் பரமனார்க்குப் பாவமேன் கூறடி

இது போன்ற சிறப்பான பல பாடல்களால் விழா நடத்தப்படுகிறது.

அமுது படையல் விழாவில், பைரவர் பிள்ளைக்கறி வேண்டுவது. சிறுத்தொண்டர் சீராளனை வெட்டுவது. பைரவரை அழைத்து வருவது. பைரவர் உணவுண்ண மறுப்பது. பைரவர் சிறுத் தொண்டர் தர்க்கம். சீராளனை உயிர்ப்பித்தல். அடியார்க்குப் பரமபதம் தருவது ஆகிய நிகழ்ச்சிகள் பாடல்களைப் பாடியே நடத்தப்படுகின்றன. சீராளனை வெட்டும்போது பாடப்படும் பாடல் வருமாறு:[24]

பிடியடி காலைப் பிள்ளைத் துள்ளாமலே
போக்கிட உயிர் தாக்கிட அறுக்கிறேன்
பிள்ளை என்று மனம்பேதையை நினையாமல்
அறுக்கிறேன் உடலை அணியணி யாகவே

விழாக்காலப் பாடல்களை விரிப்பின் அது பெருகும்.

**உடுக்கைப் பாடல்கள்:**

உடுக்கை அடித்துக்கொண்டு பாடப்படும் பாடல்கள் அனைத்தும் உடுக்கைப் பாடல்கள் எனப்படும். காத்தவராயன், மதுரைவீரன் ஆகியோர் வரலாற்றை உடுக்கை அடுத்துப்பாடுவது உண்டு. குறிகேட்கும் போதும் உடுக்கையடித்துப் பாடுவர். எந்த நோக்கமும் இல்லாமல் தெய்வத்தைப் போற்றிப்பாடுவதும் ஒரு

முறையாகும். தீமிதித் திருவிழாவிலும், ஏனைய சக்தி வழிபாட்டுக் காலங்களிலும், மாரியம்மனையோ அல்லது காளியம்மனையோ வருந்தி அழைத்துப்பாடும் பாடல்கள் ஈண்டு ஆராயப்படுகின்றன. கரகம் எடுக்கும்போது இத்தகு பாடல்களைப் பாடியே ஆவேசத்தை வரவழைப்பர். இப் பாடல்கள் நான்கு பகுதிகளை உடையன.

1. அடியார் வழிபட முயலும் செயல்கள்.
2. தேவியை வாழ்த்திப் பரவுவது.
3. தேவியின் உருவ வருணனைகளும், செயல்களும்.
4. அடியாரைக் காக்க வேண்டுவது.

சான்றாக ஒரு பாடல் ஈண்டு ஆராயப்படும்.[25]

**முதற்பகுதி:**

அடியார் காலையில் எழுந்து நீராடியதும், மலர்க் கொய்ததும், மாலை கட்டியதும் ஆகிய செய்திகள் இப்பகுதியில் கூறப்படும்.

காலமே எழுந்திருந்து காலுமுகம் சுத்திசெய்து
விடியுமுன்னே எழுந்திருந்து விரலுநகம் சுத்திசெய்து

எனவும்,

வெள்ளி கொறடு கொண்டு விதவிதமா
பூவெடுத்தேன்
தங்க கொறடு கொண்டு தாழ்ந்தமலர்
தாவெடுத்தேன்

எனவும் வரும் வரிகள் இதற்குச் சான்றுகளாகும்.

**இரண்டாம்பகுதி:**

சரணம் சரணம் சாஷ்டாங்க தெண்டனிட்டேன்
முக்காலும் சுத்தி வந்து முடிவணங்கி நமஸ்கரித்தேன்

என்று இறைவியை வணங்கிப் பரவுவது இரண்டாம் பகுதியாகும். இறைவியைப் பாடுவதோடு அவளின் பந்தி

ராசாக்களுக்கு (துணைத் தெய்வங்கள்) வணக்கம் கூறுவதும் இப்பகுதியில் அடங்கும்.

**மூன்றாம் பகுதி:**

இப்பகுதியில் இறைவியின் உருவ வருணனையும், அவளின் புராணச் செயல்களும் கூறப்படும்.

எக்கிய வயிறும் திரேகமெல்லாம் வெண்ணீறும்
ஒட்டி வயிறும் ஓதட்டிலே சிங்கப்பல்லும்,
சிங்கப் பல்லும் செஞ்சடையும் சிவனுடைய
ரூபங்களும்
கோழிமுட்டைக் கண்ணழகும் கோடாலி பல்லழகும்

இப்பாடல் வரிகள் காளிதேவியின் உருவத்தை விவரிப்பதாக அமைந்துள்ளன.

**நான்காம் பகுதி:**

இப்பகுதியில் அடியார் தன்னைக் காக்க வேண்டுவர். தன்மை அடிமை கொண்டும், நேரில் வந்தும் அருளப் பாடுவர்.

ஆணடுமை பெண்ணடுமை அத்தனையும் உன்னடிமை
பெத்தபெத்த பிள்ளையெல்லாம் பேரடிமை
தப்பாது
ஆடடிமை குடியடிமை ஆதினத்துப் பாலனம்மா
கொத்தடிமை கொடியடிமை கோத்திரமும்
உன்னடிமை

என்றமையும் இப்பகுதி.

**இரதியின் ஒப்பாரிப் பாடல்கள்:**

காம தகனத்தின் பின்னர்ப் பாடப்படுவது. காமன் சிவனால் எரிந்துவிடவே இரதி புலம்புவதாக இப்பாடல்கள் அமைந்துள்ளன. இப்பாடல்கள் மூன்று பகுதிகளைக் கொண்டவை.

1. காமன் எரிந்த நிகழ்ச்சியைக் கூறுவது.
2. இரதி கண்ட தீய சகுனங்களை விளக்குவது.
3. இரதியின் புலம்பலைக் கூறுவது.

சான்றாக ஒரு பாடல் வருமாறு:[26]

கனகிரிமேல் வில்லெடுத்துக் கயிலாசம் போவயிலே
கண்ட சகுனமெலாம் கட்டழகி சொல்லறன்கேள்
காகம் கரைகிறதும் கழுகு பறந்ததுவும்
கருநாய்கள் எல்லாம் கரைந்து விளையாடினதும்
கன்னி யொருத்தியவள் கண்ணைப்
பிசைந்துகொண்டு
கணவன் பின்னேநின்று கதறி அழுததுவும்
காளை பறிபோக கருநாய் குலைத்திடவும்
காணாத சொப்பனமும் கண்டனடி தாதிகளா!

இப்பகுதி தீயச் சகுனங்களைக் கூறும் பகுதியாகும்.

**தாலாட்டுப் பாடல்கள்:**

மாரியம்மன் தாலாட்டுப் பாடல்கள் பல அச்சு, வடிவில் வெளிவந்துள்ளன. இவற்றை அம்மை நோய் வரும் போது பாடுவர். சில மாரியம்மன் கோயில்களில் வழிபாட்டு நேரங்களிலும் இவை பாடப்படும்.

சத்தி ஒமையவளே சாம்பிராணி வாசகியே
அன்னமே தேனேயம்மா அமுத பசுங்கிளியே[27]

எனவும்,

பூமாது நாமாது போதசக மாமாது[28]

எனவும் இப்பாடல்கள் அமைந்துள்ளன. இவ்வாறாக இவ்வட்டத்தில் பாடப்படும் சிறு தெய்வ வழிபாட்டுப் பாடல்கள் பல அமைப்புகளைப் பெற்றுக் காணப்படுகின்றன.

## இ. நம்பிக்கைகள்

மனித வாழ்வின் மைய அச்சு நம்பிக்கை. நம்பிக்கையே ஒருவனுக்குப் பாதி வெற்றியை அளிக்கிறது. காரணம் தெரியாத முடிவுகள், புராணக்கதைகள், பரம்பரையாக வந்த கொள்கைகள் இவற்றை விலக்கிவிட்டால் சமயம் என்பதே இல்லாமல் போய்விடும்.[29] இத்தகு கொள்கைகளில்தான் நம்பிக்கைகள் அடங்கியுள்ளன. நம்பிக்கை வாழ்வின் அடிப்படை, உயிரினம், சிறப்பாக மக்களினம் நம்பிக்கையின் அடிப்படையில்தான் வாழ்கின்றது. ஒருவரையொருவர் நம்புவதாலேயே உலக வாழ்வு – நாட்டு வாழ்வும், வீட்டு வாழ்வும் சிறக்கின்றன. நம்பிக்கை யில்லை யெனில் நாடும் வீடும் நலமுற வழியில்லை.[30] நம்பிக்கை மனிதனின் மூன்றாவது கை. நம்பிக்கை என்ற தண்டவாளங்கள் இல்லாவிட்டால் மனிதகுல இரயில்கள் பயணம் செய்யமுடியாது.[31] மக்கள் அறிந்தோ அறியாமலோ சமய நம்பிக்கைக்குத் தம்மை உட்படுத்திக் கொண்டு விட்டனர். இன்று நேற்றல்ல, மனித வர்க்கம் தோன்றியது முதல், இயற்கை யச்சம் தோன்றியது முதல், அவ்வியற்கை தம்மைக் காக்கும் என்ற எண்ணம் எழுந்தது முதல், சமய நம்பிக்கைகள் மனித வாழ்வில் பெரிதும் ஊடுருவிப் பரந்து நிலைத்தன.

நம்பிக்கைக்கு முக்கியத்துவம் உள்ள காலம் நம்மை விட்டுப் போய் விடவில்லை. ஆனால் நம்பிக்கையின் இலட்சியந்தான் மாறிக்கொண்டே வருகிறது.[32] எனவே தான் இவற்றை மூட நம்பிக்கைகள் என்று கூறுகின்றனர். இத்தகு நம்பிக்கைகள் பொய்யானது என்று கூறுவது எந்த அளவு பொருந்துமோ, அந்த அளவுக்கு மெய்யானது என்பதும் பொருந்தும். பாட்டன்வழி அப்பனுக்கும், அப்பன்வழி பிள்ளைக்கும், பிள்ளைவழி பேரனுக்கும் என்று ஆற்றொழுக்காக சந்ததிக்கரைத் தொட்டுத் தடவி

பாய்கின்றன நம்பிக்கைகள். எனவேதான் இவை மரபுகளின் முத்திரை கொண்டு விளங்குகின்றன.[33] மனிதனின் அன்றாட வாழ்க்கையில் செயல்களிலிருந்து, அனைத்துக் கூறுகளிலும் இந்நம்பிக்கைகள் இடம் பெற்றுள்ளன. அவ்வப் பகுதிகளில் உள்ள திருக்கோயில்கள் இத்தகு நம்பிக்கைகளை வளர்ப்பனவாக உள்ளன.

## சீர்காழி வட்டத்தில் நம்பிக்கைகள்

### தெய்வீக மருந்து

பலவகையான நோய்களுக்கும் பிணி தீர்க்கும் தலம் வைத்தீசுவரன் கோயிலாகும். உடற்பிணியையும், உள்ளப் பிணியையும் தீர்க்கும் ஆண்டவனாக வைத்தியநாத சுவாமி திகழ்கிறார். பிணியைத் தீர்க்க இறைவன், கயிலையிலிருந்து புறப்பட்டு, சஞ்சீவியும், வில்வத்தடிமண்ணும், தைல பாத்திரமும் உடன் கொண்டு தென்திசைக்கண் வெள்ளெருக்க வனமாகிய வைத்தியநாத தலத்தில் எழுந்தருளினார் என்பர்.[34]

வயிற்றுவலி, சயரோகம், உடலில் ஊனம், வேனிற் கட்டி முதலிய நோல் வியாதிகள், தீய ஆவிகளினால் ஏற்படும் உள்ளப்பிணிகள் முதலிய அனைத்து நோய் களுக்கும் அருமருந்தாக விளங்குவது இத்தலமாகும். நோய்கள் நீங்கப்பெற, 'திருச்சாந்துருண்டை' மருந்து ஈண்டுத் தரப்படுகிறது. அங்கசந்தான தீர்த்தத்தில் மண் எடுத்து, விபூதி குண்டத்தில் விபூதியையும், சித்தாமிர்த நீரையும், தலவிருட்ச இலையையும், அபிடேக சந்தனத்தையும் சேர்த்து, முத்துக்குமரர் முன்புள்ள குழியம்மியிலிட்டு அரைத்துக் கடுகளவாக உருண்டைகள் செய்து உண்டுவர நோய்கள் நீங்கும் என்ற நம்பிக்கை உண்டு. இதனை

வந்த வந்த பேர்களுக்கு மண்மருந் தளிக்கிறீர்
வாயிலே மண்போட்டு வாங்குவார்காண் அம்மானை

என்ற பாடல் வரிகள் தெளிவுறுத்தும்.[35]

**ஓசை நாயகி:**

நாளும் இன்னிசை யால்தமிழ் பரப்பும்
ஞான சம்பந்த னுக்குல கவர்முன்
தாளம் ஈந்தவன் பாடலுக் கிரங்கும்
தன்மை யாளனை...[36]

எனச் சுந்தரர், ஞானசம்பந்தர் பொற்றாளம் பெற்ற நிகழ்ச்சியைப் பாடுவர். தாளம், பொற்றாளம் ஆதலின் அதற்கு ஓசை குறைவு. இதற்கு இன்னோசையை அளித்தவள் திருக்கோலக்காவில் குடி கொண்டிருக்கும் ஓசை கொடுத்த நாயகியம்மையாவார். பொற்றாளத்திற்கு ஓசை கொடுத்த அம்மை, பேசாத பிள்ளைகளுக்கும் ஒலி கொடுப்பாள் என்ற நம்பிக்கை வழங்கி வருகிறது. இசைத் துறையில் ஈடுபடுவோரும் தம்மிசை சிறக்க வைப்பவள் இத்தேவியே என நம்பி வழிபடுகின்றனர்.

**தீர்த்தங்களும் நம்பிக்கைகளும்:**

தீர்த்தங்கள் தெய்வீகத் தன்மை வாய்ந்தவை. ஒவ்வொரு தீர்த்தமும் ஒரு தெய்வத்தாலோ அல்லது முனிவராலோ உண்டாக்கப்பட்டது. இது புராணக் குறிப்பால் தெளிவாகும். சீர்காழி வட்டத்தில் ஏராளமான தீர்த்தங்கள் உள்ளன. இத் தீர்த்தங்களில் மூழ்கி எழுவதால் பாவங்கள் அகலும் நன்மை மிகும் என்ற நம்பிக்கை நிலவி வருகிறது.

**மழை பெய்யும்:**

மழை பெய்தும் அழிக்கும், பெய்யாது அழிக்கும். மழை பொய்த்துப் போயின் கொடும்பாவி எரிக்கும் பழக்கம் உண்டு. இதனைக்,

கெட்ட கொடும்பாவி கேடுகெட்ட மாபாவி
கொடும்பாவி சாகாளோ கோடிமழை பெய்யாவோ

என்ற நாட்டுப்பாடல் தெளிவுறுத்தும்.[37] மழைவளம் வேண்டிக் காமன் விழா கொண்டாடப்படுகிறது.

நாடு செழிக்க வேணும்
நல்ல மழை பேயவேணும்
ஊரு செழிக்க வேணும்
உத்த மழை பேயவேணும்

என்ற காமன்விழாப் பாடல், மழை பெய்ய வேண்டும் என வேண்டுவதாக அமைந்துள்ளது.[38] தீ மிதித்தல் மழை வேண்டி நடைபெறுகிறது. இவ்விழாக்கள் கொண்டாடினால் மழை பெய்யும் என்று நம்பப்படுகிறது.

**மக்கட்பேறு:**

மக்கட்பேற்றை நிர்ணயிக்கும் பொறுப்பு இறைவனைச் சாரும் என்ற நம்பிக்கையுண்டு. பிள்ளை இல்லாதவர்கள் அரச மரத்தைச் சுற்றுவதும், புண்ணியத் தலங்களுக்குச் செல்வதும் மரபாகும். தையல்நாயகி அம்மைக்கு, குழந்தை வரம் வேண்டித் தொட்டில் கட்டுவது வழக்கம்.

"ஆசைக்குப் பிள்ளைதரின் ஓசைக்கு மணிதருவேன்"

என்று ஓசைமணி வாங்கியிடுவது பழக்கமாகும். அன்னப் படையல் விழாவில் அரியப்படும் பாவையைச் "சீராளப் பாவை" என்பர். பிள்ளை இல்லாதவர்கள் சீராளப் பாவையைச் செய்துதரின் குழந்தை பிறக்கும் என்ற நம்பிக்கை உண்டு. இது மரபுவழி நம்பிக்கையாகப் போற்றப்படுகிறது.

**குறிகேட்டல்:**

"குறி கேட்டல்"என்பதும் ஒரு நம்பிக்கையே ஆகும். நற்சொல் கேட்டலுக்கும், குறிகேட்டலுக்கும் வேறுபாடு

உண்டு. வினையைத் தொடங்க இருப்போர், நற்சொல் கேட்க நிற்பர். அதுபோது பக்கத்தில் கேட்கும் சொல்லை நற்சொல்லாகக் கொள்வர். ஆனால் குறிகேட்பது அவ்வாறன்று. உடுக்கை முதலிய இசைக்கருவிகளைக் கொண்டு இசைத்தும், பாடியும், பரவசமெய்தி, தெய்வம் ஏறியதாகக் கருதப்பட்ட நிலையில் பூசாரி கூறும் சொற்களைக் "குறி கூறல்" அல்லது "குறி கேட்டல்" என்பர்.

கிராம புரங்களில் மிகுதியும் காணப்படும் நம்பிக்கை இதுவாகும். உடுக்கை வாசிக்கும் குறிக்காரர்கள் மரபுவழி இறைவுணர்வால் மந்திரச்சொல் ஆக்கம் பெற்றவர்கள். உடுக்கை ஒளி எழுப்பிய அளவிலேயே தீமை அகலும் நன்மைமிகும் என்ற நம்பிக்கை உடையவர்கள் தமிழர்.

மாரியம்மன், காளியம்மன், ஐயனார் கோயில் பூசாரிகள் குறிகூறலை மேற்கொள்கின்றனர். பிணியால் பீடிக்கப்பட்டவர்கள், பொருளைக் களவால் இழந்தவர்கள், மனநோய் உள்ளவர்கள், பேய் முதலிய தீய ஆவிகளின் ஆளுகைக்குட்பட்டவர்கள்; சூனியம் முதலிய செய்வினைகளால் குடும்பத்தில் இழப்புகளுக்கும், குழப்பங்களுக்கும் உட்பட்டவர்கள், தம் துன்பம் தீரவும், வழிமுறைகளை அறியவும் குறிகேட்க விரும்புவர். பூசாரி வடக்கு முகமாக அமர்ந்து இருக்க வினை சூழ்ந்தவர்கள் மேற்கு முகமாக அமர வைத்து, தெய்வத்திற்கு வழிபாடு செய்யப்படும். உடுக்கை ஒளி எழுப்பிக் குறி சொல்லும் தேவதையை வருந்தி அழைப்பர்.

சொல்லோ தவறாது சோதனையே மங்காது
சோதனைக் காரி சுகந்தாரும் மாமுண்டி
வாரும் வலதுபுறம் தாரும் திருவாக்கை
ஆசனம் போட்டுவைத்தேன் அமரும் வலதுபுறம்[89]

என்று பாடி முடிக்கும்போது ஆவேசம் அதிகமுற்று வினை ஏற்பட்ட காரணத்தையும், அதனை முடிக்கும் வழிமுறை களையும் கூறுவர்.

### திருநீறு போடுதல்

முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வதுநீறு

என்று திருநீற்றின் புகழை ஞானசம்பந்தர் கூறுவர்.[40] சிறப் வாய்ந்த திருநீற்றை அணிவது மூலம் தீவினைகள் சூழா என்ற நம்பிக்கை தமிழ் மக்களிடையே காணப்படுகிறது சேட்டைக்குணங்கள், மன நோய்கள் முதலியன திருநீறு போடுவதால் மறைகின்றன.

திருநீற்றைப் போடும் முன்னர் அதற்கு மந்திரத் தன்மை ஏற்றப்படுகிறது. திருநீற்றைத் தட்டில் பரப்பி மந்திரச் சக்கரங்களை அமைத்து, அதில் மந்திரச் சொற்களை எழுதுவர். மந்திரங்களை உச்சரித்தும், தீப ஆராதனை செய்தும் உருவேற்றிய பின்னர், அத்திருநீற்றை, வினை குறித்தவர்களிடம் அளிக்கப்படும். அதனை நெற்றியில் பூசிக்கொள்வதின் மூலமும், நீரில் கலந்து அருந்துவது மூலமும் நன்மை பெருகும் என்று நம்பப் படுகிறது.

### வேப்பிலை அடித்தல்

பூசாரிகள் வேப்பிலை அடித்தலில் கைத்தேர்ந்தவர்கள். தேள், பாம்பு, போன்ற விட உயிரினங்கள் தீண்டியபோது, வேப்பிலை அடித்தால் நஞ்சு நீங்கும் என்று நம்பப் படுகிறது. தீய ஆவிகளை ஓட்டவும் வேப்பிலை அடித்தல் உண்டு. நச்சுத்தன்மை, வேம்பின் காற்றோடு மந்திரச் சொற்களும் இணையும் போது வீரியம் இழந்து விடுகிறது.

இவ்வாறாகச் சீர்காழி வட்டத்தில் பல நம்பிக்கைகள் நிலவுகின்றன.

## ஈ. நேர்த்திக் கடன்கள்

நம்பிக்கைக்கும், நேர்த்திக் கடனுக்கும் நெருங்கிய தொடர்புண்டு. நன்மையின் மீதுள்ள விருப்பையும், தீமையின் பாலுள்ள வெறுப்பையும் இவை காட்டவல்லன.[41] நம்பிக்கை வெற்றி பெறுமானால் அது நேர்த்திக் கடனாகிறது. இறைவனுக்கும் மக்களுக்கும் நடக்கும் ஒரு பண்டமாற்று முறை. நீ இது செய்வாயானால் நான் இது செய்வேன் என நேர்த்திக்கொண்டு செய்வது. இறைவன் உயிர்களிடமிருந்து ஏதும் எதிர்பாரான், ஆயினும் மக்கள் தம் மன அமைதிக்காக இறைவனிடம் செய்து கொள்ளும் ஓர் ஒப்பந்தமே நேர்த்திக் கடன்.

பொதுத் தொண்டில் ஈடுபட்டால் புண்ணியம் சேரும் என்ற நம்பிக்கையுண்டு.

மைந்தன் பெறவேண்டு மென்று
வருந்திய பாண்டியர்கள்
சாலைகள் போட்டு வைப்பார்
சத்திரங்கள் கட்டிவைப்பார்

என்ற நாட்டுப்பாடல் ஒன்று உண்டு.[42] சாலைகள் போடுவதாலும் சத்திரங்கள் கட்டுவதாலும் ஏற்படும் நற்பலனால் குழந்தைப்பேறு உண்டாகும் என நம்பினர் இத்தகு பொதுத் தொண்டு அனைவரையும் சென்றடையும் என்று கூற முடியாது. ஆயிரமாயிரம் செலவு செய்து அன்னதானம் செய்தாலும் அது அனைவருக்கும் சென்று சேராது. ஒருவர்க்குத் தனிப்பட்ட முறையில் உறவாலும், பகையாலும் இனத்தாலும், நிறத்தாலும் சமுதாய ஏற்றத்தாழ்வுகள் உண்டு. இவரே அன்னதானத்தை வீட்டிலிருந்து செய்யாது, கோயில் மூலம், பிரசாதம் என்ற பெயரால் அளிக்கும்போது அவ்வேறுபாடுகள் மறைகின்றன. நல்லோர்க்கும், கீழோர்க்கும், மேலோர்க்கும் அவ்வுணவு சென்றடைகிறது.

எனவேதான் நேர்த்திக்கடன்கள் பல கோயில்கள் மூலட செய்யப்படுகின்றன. இருப்பவனிடமிருந்து பெற்று இல்லாத வனிடம் நல்கும் இறைவன் ஒரு பொதுவுடைமைவாதி நேர்த்திக் கடனாகப் பெற்ற பொருள்கள் இல்லாதவர்களிடப் சென்றடைவதே நேர்த்திக் கடனின் குறிக்கோளாகும் கோயிலில் செய்யப்படும் நைவேத்திய உணவுகள், அபிடேச பால், சந்தனம் போன்ற பொருள்கள் பொது மக்களுக்கு அளிக்கப்பட வேண்டும் என்பதற்காகவே செய்யப்படுகிறது சான்றாகத் திருப்பதி, பழனி போன்ற இறைத் தலங்களில் நேர்த்திக் கடனாகப் பெற்ற பொருள்கள் அறக்கட்டளை களாக நிறுவப்பட்டு அறவழியில் செலவிடப்படுவதை உணரலாம். இறைவழி உணர்வுடைய மாந்தர்கள், கடுஞ் சோதனைகளிலிருந்து மீண்டு, இறைவர்க்குத் தம் மனம் மகிழ்ந்து அமைதியடைய அளிக்கப்படும் பொருள்களே நேர்த்திக்கடப் பொருள்களாகும். இதனால் மன அமைதி கிட்டும் என்பதை,

ஆருகடன் நின்றாலும் மாரிகடன் ஆகாது
மாரிகடன் தீர்த்தவர்க்கு மனக்கவலை தீருமம்மா

என்ற நாட்டுப்பாடல் தெளிவுறுத்தும்[43]

**பிரார்த்தனைத் தலங்கள்:**

சீர்காழி வட்டத்தில் புகழ் பெற்ற பிரார்த்தனை தலங்கள் மூன்று. அவை வைத்தீசுவரன் கோயில் வைத்திய நாதர் கோயில், அண்ணன் கோயில், அண்ணன் பெருமாள் கோயில், மாதானம் மாரியம்மன் கோயில். இம்மூன்று கோயில்களும் குறிப்பிடத்தக்கன.

**நேர்த்திக்கடனும் அளிக்கும் முறையும்:**

நோய்களுக்குத் தக்க முறையில் நேர்த்திக் கடன் அளிக்கப்படுகிறது. உடல் உறுப்புகளில் ஏதேனும் ஊறு ஏற்படின் அதனை நீக்குவதற்காக அவ்வுறுப்பினைப்

போன்ற மாதிரிகளை அளிப்பது உண்டு. தலை, கண், கால், கை, வயிறு முதலிய உறுப்புகள் அளிக்கப்படுகின்றன. இவை மண்ணாலோ அல்லது உலோகத்தாலோ செய்யப்பட்டிருக்கும். கண்ணில் ஊறு ஏற்பட்டவர்கள் வெள்ளியாலான கண்மலரை இறைவன் கண்ணில் சாற்றித் தன் கடனை நிறைவேற்றுவர். சயரோகம் முதலிய சளி வியாதிகளுக்கு வேண்டிக்கொண்டவர்கள், வைத்தியநாதர் கோயிலிள்ள கிணற்றுக்குக் கயிறு போடுவதாக நேர்த்திக் கொள்வர். உப்பு, மிளகு, கடுகு, குங்குமம், வெல்லம் முதலிய பொருட்கள், வைத்தியநாதர் கோயிலில் இடப் படுகின்றன. தோலில் ஏற்படும் வேனிற்கட்டி, பரு, மேகம் போன்ற நோய்கள் நீங்க உப்பு, மிளகு, கடுகு, குங்குமம் முதலியன கொட்டப்படுகின்றன. முகத்தில் ஏற்படும் கரும் புள்ளிகள் மறையக் குங்குமம் இடுவர். கட்டி வெல்லத்தை வாங்கிச் சித்தாமிர்தத் தீர்த்தத்தில் கரைத்து, இதுபோல உடற்கட்டிகள் கரையவேண்டும் என்று வணங்குவதும் உண்டு.

**தொட்டிலும் பாவையும்:**

பிள்ளையில்லாதவர்கள் வேண்டிக்கொண்டு தொட்டில் கட்டுவது மரபாகும். இதனை அம்மன் சந்நிதியிலோ அல்லது தல மரத்திலோ கட்டித் தொங்கவிடுவர். 'ஆசைக்குப் பிள்ளைதரின் ஓசைக்கு மணி வாங்கித்தருவேன்' என்று மணி வாங்கிக் கட்டுவர். உருத்திராபதியார்க்கு வேண்டிக்கொண்டு சீராளப்பாவை செய்து கொடுப்பர்.

**ஒலியும் ஒளியும்:**

பேச்சு வராத குழந்தைகளுக்குப் பேச்சு வருதல் வேண்டி, சீர்காழி ஓசை கொடுத்த நாயகி அம்மைக்குப் பொற்றாளம் செய்து தருவது வழக்கம். தன் குலம் விளக்கம் பெறவும், ஒளி பெறவும் கோயில்களுக்கு விளக்கு ஏற்றும்

முறையும் உண்டு. சிலர் மாவிளக்கு இட்டுக் கடவுள
வழிபடுவர்.

**உயிருக்கு உயிர்:**

உயிருக்கு ஊறு நேருங்காலை வேண்டிக்கொண் உயிருக்கு உயிர் அளித்தல் உண்டு. முற்காலத்தில் ஆட்டு கிடா, சேவல் முதலியவற்றை உயிர்ப்பலியாக இடுவ வழக்கம். தற்காலத்தில் சேவல், ஆட்டுக்கிடா, ப முதலியவை உயிரோடு கோயிலுக்கு விடப்படுகின்றன உயிர்ச்சேவல் விடப்படுவதை ஒரு நாட்டுப்பாடல் விவரிக்கு அது வருமாறு.[44]

காளியிட கோயிலுக்குக்
கனமாய் விட்டசேவல்
அங்காளம்மன் கோயிலுக்கு
அடுமைவிட்ட சேவல்
சாத்தான் கறுப்பனுக்குக்
காட்டி விட்டசேவல்

சேவலை எடுத்துச் சென்று மஞ்சள் நீர்த்தெளித்துக் கோயிலில் பறக்க விடுவர். "பாடை கட்டி" இழுக்கும் முறையும் உண்டு. இறந்தவர்களுக்குக் கட்டப்படும் பாடை போன்ற அமைப்பில், வேண்டிக்கொண்டவர்களைப் படுக்க வைத்து, கோயிலைச் சுற்றி இழுத்து வருவது வழக்கமாகும். மாங்கல்ய பிச்சை வேண்டுவோர், அவ்வரம் கிட்டியவுடன் தன் மாங்கல்யத்தை உண்டியலில் போட்டுவிடுவர். அல்லது புதிதாக மாங்கல்யம் செய்து அம்மன் கழுத்தில் அணிவதும் உண்டு.

**தீ மிதித்தலும் காவடி எடுத்தலும்:**

எண்ணற்ற மக்கள் இந்நேர்த்திக் கடனில் ஈடுபடுகின்றனர். இது மாரியம்மன் அல்லது காளியம்மனுக்குச் செய்யும் பக்திக் கடனாகும். விரதம் இருந்தும், காப்புக்

கட்டியும் இச்செயலில் ஈடுபடுகின்றனர். மஞ்சள் ஆடை தரித்து, கரகம் எடுத்து வருவோரின் பின் வந்து தீக்குழியில் இறங்குவர். காவடி எடுப்பது முருகனுக்கே உரியது என்றாலும் மாரியம்மனுக்கும், காளியம்மனுக்கும் நேர்த்திக் கடனாகக் காவடி எடுக்கப்படுகிறது. பால் காவடி எடுத்து வந்து அபிடேகம் செய்யப்படும். அலகுக் காவடி என்ற ஒருவகையுண்டு. கம்பிகளால் உடல் முழுவதும் குத்திக் கொண்டு காவடியைச் சுமந்து வருவர். சிலர் நாக்கிலும், கன்னத்திலும் வேலைக் குத்திக் கொண்டு வருவதும் வழக்கமாகும்.

**சேவல் அளித்தல்:**

நேர்த்திக் கடனாகச் சேவல் பலியிடப்படுகிறது. தீமதி விழாவில் இடம் பெறும் வீரக்காளி ஆட்டத்தின் போதும், "மயான சூறை" அங்காளம்மன் ஆட்டத்தின் போதும் சேவல் பலியிடப்படுகிறது. இறை உணர்வு பெற்ற வேடதாரிகளிடம் சேவலின் கழுத்தை முறித்துக்கொடுக்க அவர்கள் வாயில் கவ்விச் செல்வர். மயான சூறை விழாவில் குடல் வாங்கியிடுவது வழக்கம். குடல்நோய் உடையவர்கள் அது நீங்கப்பெறின் ஆட்டுக்கிடாக் குடல் வாங்கி அளிப்பர். இக்குடலையே அங்காளம்மன், வாயில் ஏந்தியபடி இடு காட்டிற்குச் செல்லும். குடல் நோய் உடையவர்களைக் கோயிலின்முன் படுக்க வைத்து வயிற்றில் மாவிளக்கு இடுவதுண்டு. முடியிறக்குதல், அங்க பிரதட்சணம் போன்ற நேர்த்திக் கடன்கள் பெருமளவில் நடைபெறுகின்றன.

இவ்வாறாகப் பல நேர்த்திக் கடன்களை மக்கள் இறைவனுக்குச் செய்து வழிபட்டு வருகின்றனர்.

## உ. திருவிழாக்கள்

தமிழர்களின் நாகரிகத்தையும், பண்பாட்டையும் விளக்குவனவற்றுள் திருவிழாக்களும் பண்டிகைகளும் சிறந்த இடத்தைப் பெறுகின்றன. பண்டைக் காலந் தொட்டே விழாக்கள் தமிழகத்தில் நடந்து வருகின்றன. 'மடியா விழவின் யாணர் நன்னாடு' என்று வரும் புறநானூற்றுத் தொடரில் 'மடியா' என்ற சொல் ஆண்டு முழுவதும் என்ற பொருளைத் தந்துநிற்கிறது. சிலப்பதிகாரம். மணிமேகலை இரண்டிலும் இந்திரவிழா விளக்கப்பட்டுள்ளது. திருஞான சம்பந்தர் திருமயிலாப்பூர் திருப்பதிகத்தில் பல திருவிழாக்களைக் குறிப்பிடுகிறார்[45] அவை வருமாறு:

**"ஐப்பசி ஓண விழாவும்.........**
......காணாதே போதியோ பூம்பாவாய்".

"**விளக்கீடு** காணாதே போதியோ பூம்பாவாய்"

"**ஆதிரைநாள்** காணாதே போதியோ பூம்பாவாய்"

"**தைப்பூசங்** காணாதே போதியோ பூம்பாவாய்"

"**ஓணவிழாக்** காணாதே போதியோ பூம்பாவாய்"

"........**அட்டமிநாள்**
.........காணாதே போதியோ பூம்பாவாய்......"

"**பொற்றாப்புக்** காணாதே போதியோ பூம்பாவாய்"

"**பெருஞ்சாந்தி** காணாதே போதியோ பூம்பாவாய்"

என்றவாறு விழாக்கள் கூறப்பட்டுள்ளன. இவற்றை யெல்லாம் நோக்குமிடத்து முற்காலத்தில் திருவிழா நடைபெற்ற பாங்கினை உய்த்துணர முடிகிறது.

**விழா:**

"விழா" என்பதற்கு விழைவு என்று பொருள் கொண்டால், அது இறைவனை நோக்கி மனிதன் விழையும்

செயலைக் குறித்து நிற்கும். வடமொழியில் 'உத்ஸ் சவம்' என்ற சொல்லைக் கையாளுவர். இன்பமான காலம். இறைவன் அடியார்களுக்கு வேண்டும் வரங்களை அள்ளித்தரும் காலம். விழாக்கள் சமயத்தோடு எந்த அளவுக்கு நெருக்கமான தொடர்பு கொண்டிருக்கிறதோ அதே அளவுக்குச் சமுதாயத்துடனும் தொடர்பு கொண்டிருக்கிறது. இதுபற்றி அ. மு. பரமசிவானந்தம் அவர்கள் கூறுவது வருமாறு:[46]

> விழா என்பது நாட்டை வாழ்விக்க வந்த ஒரு நல்ல நாளே. நாட்டில் எத்துணை வேறுபாடுகள் இருந்தாலும் அவை விழா நாட்களில் இல்லையாக நீங்கப்பெற வேண்டும்...... சாதியாலும், சமயத்தாலும், நிதியாலும் நிறத்தாலும் வேறு எந்த வகையாலும் மக்கள் வேறுபாட்டினைக் காட்டலாகாது.

என்று விழாவின் மூலம் சமுதாய ஒருமைப்பாட்டுணர்வை வலியுறுத்துவர். மக்களின் வாழ்வில் சலிப்பினைப் போக்கி இன்பமும், மலர்ச்சியும், புத்துணர்ச்சியும் ஊட்டுவது விழாவாகும்.[47] முன்பு சமய நோக்கில் விழா என்பதற்கு விழைவு என்று பொருள் கொள்ளப்பட்டது. சமுதாய நோக்கில் விழா என்பதற்கு விரும்பு என்று பொருள் கொள்வர் (வீழ்–விரும்பு)[48] மக்கள் விரும்பியேற்றுக் கூடிக் களிக்கும் நிகழ்ச்சியாதலின் விழா எனப்பட்டது.

**விழா – வகைகள்:**

திருவிழாக்களை இரு பெரும் பிரிவிற்குள் அடக்கலாம். அவை 1. ஆகம முறைப்படி அமைந்த விழாக்கள். 2 ஆகம முறைப்படி அமையாத விழாக்கள் எனப்படுவன. சிறுதெய்வ விழாக்களில் பல இரண்டாம் வகையைச் சாரும். சைவ வைணவ விழாக்கள் ஆகம முறைப்படி நடத்தப்படுகின்றன. சைவ உற்சவங்கள் ஆறு வகைப்படும். அவை

பைத்ருகம், சௌக்கியம், ஸ்ரீகரம், பார்த்திவம், சாத்வீகம், சைவம் எனப்படுவன.[49] பிரம்மோ உற்சவம், மகோஉற்சவம் என விழாக்கள் சிறப்பாக இருவகைப்படும். பிரம்மோ உற்சவம் பிரம்மனால் உண்டாக்கப்பட்டது. மகோ உற்சவம் இந்திரனால் உண்டாக்கப்பட்டது. இவ்விழாக்கள் அனைத்தையும் மேலும் ஆகம உற்சவம், அபிமான உற்சவம் என இருவகையாகப் பிரிக்கலாம். அபிமான உற்சவம் என்பது ஆகம உற்சவத்தின் ஒரு பகுதியான அடியார்கள் வேறு விழாக்களையும் சேர்த்து நடத்துவது.[50] பதினொன்று முதல் இருபத்தொன்றுக்கும் மேற்பட்ட நாட்களில் நடக்கும் விழாக்களைப் புத்தி, கௌமாரம், சாயுத்ரம், சாந்தரம், சௌரம், சாவரம் என்று கூறுவர்.[51]

**விழாக்களின் நோக்கம்:**

> இராசவிர்த்தி, போகம், சிவப்பிரியம், சாந்திகம்,
> புஷ்டி, முத்தி, சர்வசித்தி, ஜனங்களுக்குச் சுகம்,
> புண்ணியப்பிரதம், லோகவிரக்ஷை

ஆகிய நலன்களை நோக்கமாகக் கொண்டு விழாக்கள் நடத்தப்படுகின்றன என்று சைவ சித்தாந்தம் கூறும்.[52]

வாழ்வில் சில நாட்களையாவது அனைவரும் இன்ப நாளாகக் காண விழைகின்றனர். நல்லவர்கள் எத்துனைத் துன்பத்தில் பட்டுழன்றாலும், வாழ்வில் சில நாளாவது அனைவரும் ஒருசேர இன்பத்தில் திளைக்க வேண்டாவா? என்று எண்ணிற்று அவர்தம் உள்ளம். அந்த உள்ளத்தின் உணர்வே உலகில் விழாக்கள் தோன்ற வழிகாட்டியாய் அமைந்தது.[53] நாடெங்கும் வாழக்கேடு இல்லை என்பதே விழாக்களின் அடிப்படையாக உள்ளது[54]. இவ்வாறாக விழாக்களின் நோக்கம் பொதுவாக வரையறை செய்யப் படுகிறது. சைவ வைணவ விழாக்களின் நோக்கமும் அடிப்படையும் இதுவென எளிதில் உணரவல்லன. ஆனால்

சிறுதெய்வ விழாக்களின் நோக்கத்தை நிர்மாணிப்பது எளிதான செயலன்று.

**சீர்காழி வட்டத் திருவிழாக்களின் நோக்கங்கள்:**

சைவ, வைணவ விழாக்களின் அடிப்படை புராணம் மற்றும் வரலாறு ஆகும். திருமுலைப்பால் விழா ஞான சம்பந்தர் வரலாற்றோடு தொடர்புடையது. நந்தனார் உற்சவம் பெரியபுராண நந்தனார் வரலாற்றோடு பிணைப்புடையது. திருநாங்கூர் மங்களாசாசன விழா திருமங்கை மன்னன், ஒவ்வொரு பெருமாள் கோயிலுக்கும் சென்று வழிபட்ட நிகழ்ச்சியின் அடிப்படையைக் கொண்டது. வேடுபறி, உறியடி, திருக்கல்யாணம் போன்ற உற்சவங்கள் புராணம் மற்றும் இதிகாசத்தை அடியொற்றிக் கொண்டாடப்படுபவை.

**சிறு தெய்வ விழாக்களின் நோக்கங்கள்:**

சைவ, வைணவ விழாக்களின் நோக்கத் தெளிவு, சிறு தெய்வ விழாக்களில் இல்லை. இவைகளின் அடிப்படையை ஊகக் கொள்கையால் மட்டுமே நிர்ணயம் செய்யமுடியும். ஊர்தோறும், தெருக்கள்தோறும் கொண்டாடப்படும் காமவிழா எக்காரணம் கொண்டு தோற்றுவிக்கப்பட்டது என்பது தெளிவற்றது.

**காமவிழாவின் நோக்கம்:**

சங்க காலத்தில் காமவிழா காதலர்கள் கொண்டாடும் விழாவாகக் கருதப்பட்டது. சங்க இலக்கியத்தில் இதற்குச் சான்று பல உள்ளன.[55] சான்றாக,

காமவேள் விழவாயின் கலங்குவள் பெரிதெனா
ஏமுறு கடுந்திண்தேர் தடவி
நாம்அமர் காதலர் துணை தந்தார் விரைந்தே

என்ற கலித்தொகை[58] அடியில், "காமவேள் விழாவரின் தலைவி கலங்குவாள்" எனக் கருதித் தலைவன் விரைந்து வினை முடித்து வருவதாகக் கூறப்பட்டுள்ளது. இடைக் காலத்தில் சிவன் காமனை எரித்த நிகழ்ச்சி, புராணங்கள் மூலம் வெளிப்பட்டது. தற்காலத்தில் இந்நிகழ்ச்சியே விழாவின் அடிப்படையாகிறது. காமவிழாவிற்குச் சில அடிக்காரணிகள் உள்ளன. அவை வருமாறு:

1. மழை வேண்டி நடத்தப்படுவது.
2. இளவேனிலில் பிரிவு நோய் செய்யாதிருக்க வேண்டி நிகழ்த்தப்படுவது.
3. பண்டைய தொடர்பு கருதி நடத்தப்படுவது.

மழை வளம் குன்றின் காமவிழா நடத்தும் மரபு தென் தஞ்சைப் பகுதிகளில் உண்டு. இது வடதஞ்சையில் நம்பிக்கையாகப் போற்றப்படுகிறது. ஆனால் வடதஞ்சையில் மழைக்காக வேண்டிக் 'கொடும்பாவி' எனும் பாவையை எரியூட்டுவதே மிகுதியாகும். இளவேனிற் காலத்தில் காதல் நோய் செய்திருக்கக் காமனை எரித்து விடுவது. பின்னர் உயிர்ப்பிப்பது காதலர்க்காகக் கொண்டாடும் விழாவாக இருந்து வந்தது.

இவ்விரு காரணங்களும் இணைந்து, பண்டைத் தொடர்பான புராணக் கலப்பும் சேர்ந்த நிலையில் இன்றைய விழாக் கொண்டாடப்படுகிறது.

**அன்னப்படையல் விழாவின் நோக்கம்**

"அன்னப்படையல் விழாவின்" அடிப்படை சிறுத் தொண்ட நாயனாரின் வரலாறு. நோக்கம் எதுவெனத் தெளிவாகவில்லை. பெரியபுராணத்தில் எண்ணற்ற அடியார் களின் வரலாறுகள் கூறப்பட்டுள்ளன. ஆனால் சிறுத் தொண்ட நாயனாரின் விழாவினைப் போன்று மற்ற அடியார்களின் விழாக்கள் நாடு தழுவிய அளவில் ஒரே

நாளில் நடப்பது இல்லை. வடதஞ்சையில் ஊர்தோறும் இவ்விழா கொண்டாடப்படுகிறது. தன் மகனையே அரிந்து சிவனுக்கு ஊட்டிய பெருமை, தன் மகன் கறியையே உண்ணத் தலைப்பட்ட சிவபக்தி, இதன் காரணமாக மக்களிடையே ஏற்பட்ட பெரும் மனநெகிழ்ச்சி இவ்விழாவின் தோற்றத்திற்குக் கால் கோளாகிறது.

மேலும் அன்னப்படையல் என்ற பெயரால் தம்மிடம் தேங்கியிருக்கும் பொருள்களைச் செலவிட, வழிவகுத்துக் கொண்ட, செல்வந்தர்களின் தொண்டு நெறி இவ் விழாவிற்குத் துணை போகிறது. இன்றளவும் இவ்விழாவில் எண்ணற்ற மக்களுக்கு உணவிடும் மரபு இதற்குச் சான்றாகும்.

### தீமிதி விழாவின் நோக்கம்

மழைவளம் வேண்டி இவ்விழா நடைபெறுகிறது. இன்றளவும் தீமிதி விழா நடைபெறும் முன்னரோ அல்லது பின்னரோ சிலதுளி மழைத்தூறலாவது விழுவது நம்பிக்கையாக உணரக்கூடியது.[57]

### சீர்காழி வட்டத்திருவிழாக்கள்

சீர்காழி வட்டத்தில் புகழ்பெற்ற விழாக்கள் சிலவே. அவை வருமாறு: திருமுலைப்பால் விழா. நாங்கூர் கருடசேவை. வேடுபறி உற்சவம், நந்தனார் விழா, தீமிதி விழா, மாசித்திருவிழா, காமன்விழா, அன்னப்படையல், மயானசூறை, படுகள உற்சவம் முதலிய விழாக்கள் குறிப்பிடத்தக்கன. இவற்றில் மாசித்திருவிழா, காமதகன விழா, அன்னப்படையல்விழா மூன்றும் வட்டந்தழுவிய அளவில் நடைபெறுகின்றன.

இவ்விழாக்கள் மட்டுமின்றி ஆடிப்பூரத்தில் சக்தி விழா சைவக் கோயில்களில் கொண்டாடப்படுகிறது. நவராத்திரி உற்சவம் சைவ, வைணவக் கோயில்களின் உற்சவமாகும்.

ஐப்பசித் திங்களில் கந்தர்சஷ்டி விழா முருகன் ஆலயங்களில், சிறப்பாக வைத்தீசுவரன் கோயிலில் நடைபெறுகிறது. கார்த்திகைத் தீப உற்சவம் அனைத்துக் கோயில்களிலும் கொண்டாடப்படும் உற்சவம் ஆகும். ஒவ்வொரு மாதக் கிருத்திகையும் வைத்தீசுவரன் கோயில் முத்துக்குமரசுவாமி தினமாக விழா எடுக்கப்படுகிறது. வைகாசியில் மண்டலாபி ஷேக விழா நடைபெறும். மார்கழி திருவாதிரையும், ஆனித் திருமஞ்சனமும் நடராசர் உற்சவம் ஆகும். மார்கழி மாதம் முழுவதும் மங்கள மாதமாகக் கொண்டாடப் படுகிறது. தைப்பூசம், மாசி மகம், பங்குனி உத்திரம், சித்திரா பௌர்ணமி, வைகாசி விசாகம் முதலிய தினங்கள் விழாத் தினங்களாகும். சிவராத்திரி சிவனுக்குரிய நாளாகும்.

### திருமுலைப்பால் உற்சவம்

திருமுலைப்பால் விழா சட்டைநாதர் கோயில் பிரும்மோ உற்சவத்தின் மூன்றாம் நாள் விழாவாகும். சித்திரைத் திருவாதிரையில் நடைபெறுகிறது. காலையில் ஞானசம்பந்தர்க்குச் சிறப்பு வழிபாடு நடைபெறும். கோயிலிலிருந்து இன்னிசை முழங்கவும், ஓதுவார்கள் இசைப் பாடல்களைப் பாடவும் ஞானசம்பந்தர் பிரும்ம தீர்த்தக் கரையை அடைவர். அன்னை உமையவள் மலைமீதிருந்து இறங்கி வந்து ஞானசம்பந்தர்க்கு ஞானப்பால் குடத்தைத் தருவள். தருமை ஆதீனத் தலைவர் பாலைப்பெற்று ஞான சம்பந்தர்க்கு ஊட்டுவர். பின்னர் உமையவள் அம்மை அப்பராய்ச் சிவனோடு எழுந்து ஞானசம்பந்தர்க்குக் காட்சி யளிப்பர். இரவு பூப்பல்லக்கில் சிறப்பான ஊர்வலம் நடை பெறும். மாலையில் திருக்கோலக்கா சென்று பொற்றாளம் பெறுவது சிறப்பான நிகழ்ச்சியாகும்.

### மங்களாசாசன உற்சவமும் கருடசேவையும்

திருமங்கையாழ்வார் மறைந்த பின்னர், அவர் விக்ர வடிவில் தோன்றி, திருநாங்கூரைச் சேர்ந்த பதினொரு

பெருமாள்களையும் மங்களாசாசனம் செய்வதே இவ் விழாவின் அடிப்படையாகும். தை அமாவாசைக்கு முதல் நாள் இரவு ஆழ்வார் திருநகரியிலிருந்து எழுந்தருளுவார். குறையலூர், பார்த்தன்பள்ளி, மங்கைமடம், நாவளம்பாடி, திருமேனிக்கூடம் முதலிய தலங்களுக்குச் சென்று பெருமாள் களை வணங்கிடுவர். அப்பொழுது அடியார்கள், ஆழ்வார் பாடிய பாசுரங்களைப் பாடுவர். நாங்கூர் காவிரிக்கரையில் மஞ்சள் குளி மண்டபத்தருகில் இறங்கித் தென்திசை நோக்கி நின்று திருவரங்க நாதனை மங்களாசாசனம் செய்து, மாலை திருநாங்கூர் ஏழு நாராயண மூர்த்திகளையும் வணங்கி, இரவு மணிமண்டபத்தில் எழுந்தருளுவர்.

மறுநாள் காலையிலிருந்து பத்து பெருமாள்களும் நாராயணப் பெருமாள் கோயிலுக்கு எழுந்தருளச் செய்வர். ஆழ்வார் ஒவ்வொரு மூர்த்தியையும் வணங்கி மங்களா சாசனம் செய்வர். இரவு பதினோரு மணியளவில் கருட சேவை நடைபெறும். ஆழ்வார் அன்னவாகனத்தில் காட்சிதர, பெருமாள்கள் கருடவாகனத்தில் எழுவர். மணி மாடக் கோயிலிலிருந்து இவர்கள் ஒரே நேரத்தில் காட்சி தருவது சிறப்பானதாகும். 24 மேளங்கள், 24 நாதசுவரங்கள், சங்குகள், கொம்புகள் முதலியன பேரொலி செய்யும், எண்ணற்ற பன்முகத் தீவட்டிகளும், வானவேடிக்கைகளும் விழாவிற்குச் சிறப்புச் செய்யும். மறுநாள் காலை ஆழ்வார் அண்ணன் கோயில், கீழ்ச்சாலை, திருவாலி மூர்த்திகளை வணங்கி மாலை திருநகரியை அடைவர். இதோடு விழா முடிவுறும்.

### வேடுபறி உற்சவம்

திருநகரியில், ஆழ்வார் திருமங்கை மன்னன் களவாடிப் பெறும் பொருளைத் திருமாலடியார்க்குச் செலவிட்டான். இதனடிப்படையில் இவ்விழா நடைபெறுகிறது. பங்குனித் திங்களில் நடைபெறும். பெருமாள் திருமணக் கோலத்தில்

எழுந்தருளுவதும், ஆழ்வார் நூற்றுக்கணக்கான தீவட்டி களுடன் கொள்ளையடிக்கச் செல்வதும் சிறப்பான காட்சி யாகும்.

**நந்தனார் உற்சவம்**

திருப்புன்கூர் சிவலோகநாத சுவாமி பிரும்மோ உற்சவத்தில் மூன்றாம் நாள் விழா இதுவாகும். நந்தனார் முன்னதாக வீதியுலாச் செல்வர். அது முடிந்து கோயிலின் தேரடியருகே நந்தனாரை எழுந்தருளச் செய்வர். நந்தனார் சரித்திரக் கீர்த்தனைகள் பாடப்படும். நந்தி விலகுவதாகப் பாடி முடிந்தவுடன் கோயிலின் அனைத்துக் கதவுகளும் திறக்கும். ஒவ்வொரு வாயிற் படியிலும் தீபாராதனை ஒரே நேரத்தில் செய்வர். இதன் பின்னர் இறைவன் உமை யோடு அடியார்களுக்குக் காட்சியளிப்பார்.

**தீமிதித் திருவிழா:**

மாரியம்மன், காளியம்மன், திரௌபதியம்மன் கோயில் களில் தீமிதி விழா நடைபெறுகிறது. பத்துநாட்கள் இவ்விழா நடைபெறும். பத்தாம் நாள் காலை முதல் சிறப்பு வழிபாடு நடைபெறும். காவடி எடுத்து வந்து மகா அபிடேகம் செய்வர். மதியம் சக்தி கரகம் எடுத்து வந்து தீமூட்டுவர்.[58] கோயில் சந்நிதிக்கு நேரே தீக்குழி அமைத்து, காவல் தெய்வங்களுக்குநிலைஎடுத்துத் தீ உண்டாக்கப்படும். மாலை நான்கு மணி அளவில் நீர்த் துறையிலிருந்து பூசாரி கரகம் எடுத்து வருவார். நேர்த்திக்கடன் பூண்டோர் மஞ்சளாடை உடுத்தி, காப்புக் கட்டிக்கொண்டு உடன் வருவர். பம்பை, உடுக்கை, மேளம் முதலியன முழங்கும். தீக்குழி நெருப்பைச் சமமாக்கி நடந்து செல்லும் வகையில் அமைத்திடுவர். தீக்குழியின் அருகே பால்குழி இருக்கும். இதில் நீர் நிறைக்கப்படுவது வழக்கம். கரகம் வருவதற்கு முன்னர்ப் பலி கொடுக்கப்படும். பின்னர்க் கரகம் தீக்குழியில்

இறங்க, காப்புக்கட்டியோர் அதனைத் தொடர்ந்து இறங்குவர். பால்குழியில் காலை நனைத்த பின்னர்க் கோயிலை அடைவர். உற்சவ சக்தி எழுந்து அடியார்க்குக் காட்சித் தருவாள்.

**மாசித் திருவிழா:**

இது கன்னியம்மன் அல்லது கன்னியாயி என்ற அம்மனுக்கு எடுக்கப்படும் விழாவாகும். மாசி மகம் நாளன்று நடைபெறும். தீச்சட்டியைக் கோயிலில் படைத்து அதனை எடுத்துச்சென்று கடலில் விடுவது இவ்விழாவின் சிறப்புக் கூறாகும்.

**காமன் விழா:**

"காமண்டி" என்ற பெயரால் இவ்விழா நடைபெறுகிறது.[59] "காமதகன விழா", "மூணாங்குழி விழா"[60] இரண்டும் சிறப்பிற்குரிய விழாவாகும். மாசித்திங்கள் பௌர்ணமியன்று காமதகன விழா நடைபெறும். ஊர் மண்டகப்படி முடிந்ததும் காப்புக்கட்டிய சிறுவர்களுக்கு வேடம் இடப்படும். சிவன் வேடமிட்ட சிறுவனைக் கோயிலின் எதிரே தவத்தில் ஈடுபடுத்துவர். பின்னர்ப் பல புராணப்பாடல்களைப் பாடி, இரதி, மன்மதன் வேடமிட்ட சிறுவர்களின் கையில் வில்லைக்[61] கொடுத்துத் தர்க்கப் பாடல்களைப் பாடுவர். தர்க்கம் முடிந்ததும் காமன் வானங்களை விட்டப்படியே கோயிலை அடைவான்.

> இந்த சிவனார் மேல் எப்படி பாணம் எய்குவேன்
> முன்னாலே போனாலும் முக்கண்ணும் தகிக்குதே
> பின்னாலே போனாலும் பிலிதோலு வீசுதே[62]

என்ற பாடல் பாடி முடிந்ததும் காமன் வில்லைக் கோயில் மீது வீசி யெறிவான்.[63] கோயில் எரியூட்டப்படும். இந்நிகழ்ச்சிகள் இரவு முழுவதும் நடக்கும். மறுநாள் காலை, இரதி மன்மதன் படத்தைப் பல்லக்கில் எடுத்துச் சென்று

ஆற்றில் மூழ்கடித்து, நீராடி மீள்வர். எரிந்த கோயிலை மும்முறை வலம் வந்தவுடன் விழா நிறைவுறும். இதை மூன்றாம் நாள் காமனை உயிர்ப்பிக்கும் நிகழ்ச்சியா "மூணாங்குழி" விழா நடைபெறுகிறது.

**அன்னப்படையல் விழா:**

இவ்விழா சித்திரைத் திங்களில் மூன்று நாட்கள் நடைபெறுகிறது. மூன்றாம் நாள் அன்னப்படையல் விழாவாகும் காலையில் சீராளப் பாவையை[64] எடுத்து வந்து கோயிலிச் வைத்து அரிவர். மதியம் நீர்த்துறையிலிருந்து பைரவர் வேடமிட்டவரை அழைத்து வருவர். ஊரை வலம் வந்து மாலையில், கோயில் அத்தி மரத்தடியில் பைரவரை அமர்த்தி, பிள்ளைக்கறி படைக்கப்படும். பைரவர்க்கும் சிறுத்தொண்டர்க்கும் பல தர்க்கப்பாடல்கள் உண்டு உணவில் தலைக்கறி இல்லாதது கண்டு;

இந்தகறி எந்தனுக்கு ஏனோ?
விந்தையாக கூற வந்தாய்
வேணுமென்று கொள்வதில்லை (இந்த)

என, பைரவர் சினந்து பாடுவது போன்று பல பாடல்கள் உள்ளன.[65] நிகழ்ச்சி முடிவில் சீராளனை உயிர்ப்பித்தும், முக்தி அளித்தும் அருளுவதுமான நிகழ்ச்சிகள் இடம்பெறும். எண்ணற்ற அடியார்களுக்கு உணவு அளிக்கப்படும் விழா முழுமையும் பாடல்களைப் பாடியே நடத்தப்படுகிறது.

**மயான சூறை:**

இவ்விழா; சிவராத்திரியன்று அங்காளம்மன் கோயில்களில் நடத்தப்படுகிறது. பகலில் சிறப்பான வழிபாடு நடைபெறும். இரவு அங்காளம்மன் வேடம் பூண்டவர் மயானத்திற்குச் செல்வர். பம்பை முதலான பல இசைக் கருவிகள் முழங்கும். மயானத்தில் சாம்பல், எலும்பு முதலியவற்றில் விழுந்து புரண்டும், பல வழிபாடுகளை

நடத்தியும் அதிகாலை கோயிலுக்கு மீள்வர். சுமார் 120 ஆண்டுகளுக்கு முன்னர் 'வனபூசை' எனப்படும் விழா நடை பெற்றதற்குச் சான்று உண்டு. இன்று வனபூசை விழா நடைபெறுவதில்லை.

**படுகள விழா**

இவ்விழா திரௌபதியம்மன் கோயில்களில் பதினெட்டு நாட்கள் நடைபெறுகிறது. பதினெட்டாம் நாள் படுகள விழா. இரவு திரௌபதி வேடம் பூண்டவர் காளி வடிவில் எழுந்து துரியோதனனின் மார்பை பிளந்தும், குடலை உருவியும் அவனை அழிப்பதான நிகழ்ச்சி, நடைபெறும். மறுநாள் தீமிதி விழா நடைபெறும். (இது பற்றி விரிவான விளக்கம் 'விழாக்காலக் கூத்து' பகுதியில் காண்க).

## ஊ. விழாக்காலக் கூத்துகள்

சமுதாயத்தின் ஒருமைப்பாட்டுணர்வைத் தோற்று விப்பது விழாவாகும். பல்வேறு மொழி, இனம், பகுதியைச் சேர்ந்த மக்களை ஓரிடத்தில் கூட்டுவதற்கு விழா ஒரு காரணியாக விளங்குகிறது. இவ்வாறு கூடும் மக்களுக்கு நல்ல பல அறக்கருத்துக்களைக் கூறவேண்டும் என்ற நோக்கத்தோடு கேளிக்கைகள் தோற்றுவிக்கப்பட்டன. எந்த ஒரு கருத்தும் கேளிக்கை மூலம் மக்களை அடையும் போது அதற்கொரு நிலைத்த தன்மை தோன்றுகிறது.

**பாகுபாடு:**

மேடையில் நடைபெறும் நிகழ்ச்சிகளை மட்டும் கூத்து என்று கூற முடியாது. கூத்துக்கள் ஒரு தன்மைத்தல்ல. அவை நாடகங்களாகவும், விளையாட்டுகளாகவும், வேடதாரிகளின் பாடல்களாகவும் பல்வேறு வடிவின. பொதுவாக இவற்றை: மேடையில் நடைபெறுவன, மேடையின் புறத்தே நடைபெறுவன என்று பிரிக்கலாம்.

இப்பகுதிகளில் நடைபெறும் கூத்துக்களை இருபெரும் பிரிவுகளில் அடக்கலாம். அவை,

1. விழாவோடு நேரடித் தொடர்புடையன.
2. விழாவைச் சார்ந்து நிகழ்வன.

என்பன. விழாவோடு நேரடித்தொடர்புடைய கேளிக்கைகள் பல. அவற்றில் சில பின்வருமாறு:

1. "காமன் விழாவில்" நடைபெறும் நிகழ்ச்சிகள்
2. திரெளபதியம்மன் விழாவில் நடைபெறும் "படுகள" நிகழ்ச்சிகள்
3. "அன்னப்படையல்" விழாவில் நடைபெறுவன
4. "மயான சூறை" விழா நிகழ்ச்சிகள்
5. "காளியாட்டங்கள்"

என்று பலவகையாக விரியும். இனி விழாவைச் சார்ந்து நிகழும் கூத்துக்களும் பல வகைப்படும். என்றாலும் இவைகளை நான்கு பெரும் பிரிவிற்குள் அடக்கலாம்.

1. விழாக்காலக் கூத்துக்கள். இது புராணக் கூத்துக்கள், சமுதாயக் கூத்துக்கள் என இரு வகைப்படும்.

2. கரகம்,காவடியாட்டம், மயிலாட்டம், பொய்க்கால் குதிரையாட்டம், குறவன் குறத்தி ஆட்டம் போன்ற ஆட்ட நிகழ்ச்சிகள்.

3. சமயப்பற்று மிக்கவர்கள், சமயத்தைப் பரப்பும் நோக்கோடு நடத்தும் நிகழ்ச்சிகள்.

4. சோப்பு, வெண்சுருட்டு போன்ற உற்பத்தி நிலையத்தினர் விளம்பரம் காரணமாக நடத்தும் கேளிக்கைகள்.

## விழாவோடு நேரடித் தொடர்புடையன

**காமன் விழாவில்:**

காமக்கடவுள், சிவனின் தவத்தைக் கலைத்தலும், சிவன் காமனை எரித்தலும், பின்னர் உயிர்ப்பித்தலுமாகிய புராண நிகழ்ச்சிகள் இவ்விழாவில் நடத்தப்படுகின்றன. சில கோயில்களில் சிவனின் தவம், இந்திரன் நாரதர் ஆலோசனை, இந்திரன், மன்மதனை அழைத்து வரக்கூறல், இரதி, மன்மதனிடம் "சிவத்தவத்தைக் கலைத்தல் ஆகாது" எனக் கூறல் ஆகிய நிகழ்ச்சிகள் மேடையில் நாடகமாக நடத்தப்படுகின்றன.[66] இதன் பின்னர் நடக்கும் இரதி மன்மதன் தர்க்கம், காமன் சிவன் மேல் பானம் போடுதல், காமன் மண்டபம் எரியூட்டப் படுதல் ஆகிய நிகழ்ச்சிகள் மேடையின் புறத்தே நடைபெறும்.

தேச தேசனாரே தேசாதி தேசராஜன்
ராஜ ராஜனாரே ராஜாதி மன்மத ராசன்

என்ற பாடல் மன்மதன் தர்பார் மண்டபத்தை அடையும் போது பாடப்படும் "கொலு விருத்தமாகும்".[67]

இதன் பின்னர் (காமத்தகனத்தின் பின்னர்) நடக்கும் நிகழ்ச்சி சிறப்பு வாய்ந்தது. உருமி மேளம் (நையாண்டி மேளம்) தப்பு போன்ற இசைக்கருவிகள் முழங்கும், சாவுப்பறை ஒலிக்கும். பலர் வண்ண வண்ணப் பொடி களைப் பூசிக்கொண்டும், மாரடித்துக்கொண்டும், காமன் மண்டபத்தைச் சுற்றிச் சுற்றி வருவர். இரதியின் ஒப்பாரி பாடல்கள் பாடப்படும். தற்காலத்தில் இரதி மன்மதன் வேடமிட்ட சிறுவர்களைக் கொண்டு இவ்விழா நடத்தப் படுகிறது.

**படுகள விழாவில்:**

திரௌபதியம்மன் கோயில் விழாவில் பதினெட்டு நாட்கள் நடைபெறும் விழா 'படுகள விழாவாகும்.' பாரதக் கதை பாடலாகவும், உரைநடையாகவும் நடத்தப்படும். இதனை நடத்துவோரைப் 'பாரதப் பூசாரி' என்றழைப்பர். பதினெட்டாம் நாள் 'படுகள' நிகழ்ச்சி நாடகப் பாங்கில் நடத்தப்படும். இந்நிகழ்ச்சியின் போது பேடிகள் 'அரவானை' மணம் செய்து கொள்வது.[68] மாலையில் காளி வேடம் பூண்ட ஒருவர், அரவானை இடுகாட்டிற்கு அழைத்துச் சென்று களபலி இடுவது. பேடிகள் அனைவரும் ஒப்பாரி வைப்பது போன்றன பகலில் இடம் பெறும்.[69]

இரவில் திரௌபதி காளி வேடம் பூண்டு துரியோதனின் குடலை உருவியும், குருதியைப் பூசியும், தொடை எலும்பால் கூந்தலைச் சீவியும், தன் சபதத்தை நிறைவேற்றுவாள். திரௌபதி, வீமன், அருச்சுனன், துரியோதனன் போன்ற வேடங்களைப் பூண்டவர்களால் இவ்விழா நடைபெறுகிறது. படுகளத்தின் போது துரியோதனன் வேடம் பூண்டவர், வைக்கோல், களிமண் போன்றவற்றால் செய்த மனித உருவத்தின் உள்ளே படுத்திருப்பர்.[70] இந்த உருவத்தின் வயிற்றுப் பகுதியில் ஆட்டுக்குடலையும், செந்நீரையும் வைத்திருப்பர். திரௌபதி ஆவேசத்தோடு கிளம்பி, ஆட்டுக்குடலை உருவியும், செந்நீரைப் பூசுவதுமாக இந்நிகழ்ச்சிகள் அமையும். இவ்வாறு இவ்விழா நாடகப் பொலிவோடு நடத்தப் படுகிறது.

**உத்திராபதீஸ்வரர் விழாவில்:**

சிவ சக்தி, 'நகர் சோதனை', சிவன் பிள்ளைக் கறி வேண்டுவது சிறுத்தொண்டர் சீராளனை வெட்டிக் கறி சமைத்துப் படைப்பது. சீராளன் உயிர் பெறுவது முதலிய

நிகழ்ச்சிகள் வேடமிட்டுக் கொண்டவர்களால் நாடகத் தன்மை மிளிர நடத்தப்படுகின்றன.

### காளியாட்டம்

தீமிதி விழாவின்போது கரகத்தின் முன்னர்ப் பச்சைக் காளி, பவளக்காளி வேடம் பூண்டவர்கள் ஆடி வருவர்.

### விழாவைச் சார்ந்து நிகழ்வன

விழாக்காலத்தில் நடத்தப்பெறும் கூத்துக்கள் விழா நிகழ்ச்சிகளோடு தொடர்பில்லன என்றாலும் மக்களை மகிழ்விப்பதற்காக நடத்தப்படுகின்றன.

"மன்மதன் நாடகம்", "தமயந்தி நாடகம்", "அரிச்சந்திர நாடகம்", "இராம நாடகம்", "பவளக் கொடி", "வள்ளித்திருமணம்", "சிறுத்தொண்டர் நாடகம்" போன்ற நாடகங்கள் நடிக்கப்படுகின்றன. காலத்திற்கு ஏற்ப இந்நாடகங்களில் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. வெறும் கதையை மட்டும் சுவைக்கும் மனப்பாங்கு மாறி வருகிறது. துன்பவியலை மட்டுமே விரும்பி வந்த மக்கள், துன்பவியல் நாடகத்திலும் இன்பத்தை எதிர்நோக்கியதின் விளைவாக, கொச்சையான சில காட்சிகளைச் சேர்க்க வேண்டிய கட்டாய சூழ்நிலை உருவாயிற்று. இதனால் தற்கால புராண நாடகங்கள் மூன்று கூறுகளை உடைய வாயின.

1. பபூன் அறிமுகம். இசைத்தட்டிற்கு ஏற்ற நடனம். (ரெக்கார்டு டான்ஸ்) ஆண் பெண் இருபாலரின் நாட்டியம். முழுவதும் நாடகத்தோடு தொடர் பில்லாதது. அரைகுறையான உடைகளோடு ஆடப்படுவது[71].
2. புராண நிகழ்ச்சிகளை விளக்கும் நிகழ்ச்சிகள்.
3. இந்நிகழ்ச்சிகளின் நடுவே குறவன் குறத்தி நாட்டியக் காட்சிகள்

இந்தக் கலப்படக் கூத்துக்களே தற்காலத்தில் நடத்தப் படுகின்றன.

**சமயத் தொடர்பானவை:**

வைணவ சமயத்தில் ஆழ்ந்த பற்றுள்ள சிலர் தசாவதார வேடமிட்டுக்கொண்டு, பசனை மூலம் சமயத்தைப் பரப்பி வருகின்றனர். பள்ளக் கொல்லை கே. வி. ஆர். கலிய பெருமாள் குழுவினர், புன்செய் வரதராச நாயுடு குழுவினர், சித்தன் காத்திருப்பு இராமச்சந்திரன் குழுவினர் போன்றோர் இவ்வியக்கத்தைச் சார்ந்தவர்கள். இவர்கள் நாங்கூர் கருடசேவை விழாவன்று பல்வேறு வேடங்களைப் பூண்டு பாடல்களைப் பாடிச் சமயத்தைப் பரப்பி வருகின்றனர். 'ஆடல் பாடல் இருந்தால்தான் மக்கள் பசனைப் பாடல்களைக் கேட்கிறார்கள். பாடல்களைப் பரப்ப வேண்டுமானால் இத்தகு ஆடல் பாடல் அவசியம் வேண்டும்' என்று வரதராச நாயுடு இக்குழுவின் நோக்கத்தைத் தெளிவுறுத்துகிறார். கருடன், ஆஞ்சநேயர், கோணங்கிப் பெருமாள், நரசிம்மம், வெங்கடாசலபதி, இராமர், சீதை, இலக்குமனன், இரணியன், நாரதர், விநாயகர், முருகன், சிவன், பலராமன், கண்ணன், பாமா ருக்குமணி ஆகிய வேடங்களைச் சிறுவர்களுக்கும், பெரியவர்களுக்குமாகப் போடப்படுகிறது. இவர்களில் கருடன், ஆஞ்சநேயர், கோணங்கிப் பெருமாள், நரசிம்மம், இரணியன் வேடமிட்டவர்களே ஆட்டங்களை ஆடுகிறார்கள்.[72]

வேடம் புனைதலில் பள்ளக்கொல்லைக் குழுவினரே சிறப்பிடம் பெறுகின்றனர். மணிகள், கண்ணாடி, மயிலிறகு, பொன் வண்ணத்தாள்கள், கற்றாழை நார் போன்ற வற்றால் ஆன கிரீடம், வீணை, வில், கதை, குரங்கு சிம்ம முகங்கள், மாலைகள், அணிகள், ஆடைகள் முதலியவற்றை வேடத்திற்காகப் பயன்படுத்துகின்றனர்.

**கோலாட்டம்:**

பள்ளக்கொல்லைக் குழுவில் கோலாட்டம் நடைபெறுதலும் உண்டு. இதன் தலைவர் கலியன் என்பவர். எண்மர் அல்லது பதின்மர் வட்டமாக நின்று, இரு கையிலும் கோலை ஏந்திக்கொண்டு பம்பை முழங்க இவ்வாட்டத்தை நடத்துவர்.

முத்துக் கணபதியின் திருவடியைக் கண்டு
இளம் பெண்கள் எல்லாம் நின்று
அனுதினமும் போற்ற வேண்டும்
அடி மலரைக் கண்டு ...

போன்ற பாடல்களும்,

தாயே சொல்லுவன் கேளம்மா – உன்மகள் செய்தி
வாயால் சொல்லவும் கூடுமோ?...

என யசோதை பாடுவதைப் போன்ற பாடல்களும்[73] இக்கோலாட்ட நிகழ்ச்சிக்குப் பயன்படுத்தப்படுகின்றன.

**சமயத் தொடர்பு இல்லாதன:**

சமயத் தொடர்பு இல்லாமல், விழாவின் போது கரகம், மயிலாட்டம், குறவன் குறத்தி ஆட்டம் போன்ற நிகழ்ச்சிகள் நடைபெறுவதுண்டு. இது முழுவதும் கேளிக்கையோடு தொடர்புடையது. தீப்பந்தம் சுற்றுதல் முதலிய சிறப்பு நிகழ்ச்சிகள் இடம் பெறும். குறவஞ்சி நாடகத்தின் திரிபே தற்காலத்தில் நடைபெறும் குறவன் குறத்தி ஆட்டமாகும்.

ஓகோ கோ வாங்க லையோ
காடை கவுதாரி
ஓஹோ ஹோ ஆயாலோ
வாங்கலையோ ஆயாலோ

என்ற பாடல் குறவன் குறத்தி ஆட்டத்தில் இடம் பெற்ற பாடலாகும்.[74] இப்பொழுது இத்தகு கலைத்தன்மை மிக்க

பாடல்களும் ஆட்டங்களும் புதுமை என்ற பெயரால் கொச்சைப்படுத்தப்பட்டுப் புனிதத் தன்மை இழந்து காணப்படுவது வருந்தத் தக்கதாகும். திருமுலைப்பால் உற்சவம் போன்ற பெரிய திருவிழாக்களில் இவர்களைக் கொண்டு விளம்பரதாரர்கள் தம் விளம்பரத்திற்கான நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்கின்றனர்.

## பண்பாட்டுக் கொடையும், இலக்கியக் கொடையும்

சோயில் மூலம் பெறப்படும் பண்பாட்டுக் கொடைப் பற்றியும், இலக்கியக் கொடைப் பற்றியும் இவ்வியல் கூறுவதாவது வருமாறு:

**பண்பாட்டுக் கொடை:**

கோயிலோடு தொடர்புடையவர்களின் மனநிலை, ஆர்வம், பண்பாடு இவைகளுக்கு ஏற்ப வழிபாடு அமைகிறது. சாத்வீக பண்புடையவர்கள் தொடர்பு கொண்டுள்ள சைவ, வைணவக் கோயில்களில் அமைதி வழிபாடும்; ஏனையோர் தொடர்பு கொண்டுள்ள சிறு தெய்வக் கோயில்களில், பலி முதலியன நேர்ந்து வீர வழிபாடும் நடத்துவதை இதற்குச் சான்றாகக் கூறலாம்.

தான் விரும்புகின்றவர்களுக்குத் தான் பெரிதாக விரும்பியவற்றையே கொடுக்கும் பண்பு தமிழர்களுக்கு உண்டு. படையல்களில் இடம் பெறும் பொருள்கள், குறிப்பாகச் சிறு தெய்வப் படையல்களில் இடம் பெறும் பொருள்கள், அபிடேகம் முதலியன இப்பண்பாட்டை வெளிப்படுத்துவதாக உள்ளன. தெய்வக் குற்றம் ஏற்படின், அதனை நிவர்த்தி செய்யும் வழிமுறையை இறைவனே கூறுவான் என்ற சமய நம்பிக்கைத் தமிழர்களுக்கு உண்டு. சிறு தெய்வக் கோயில்களில் ஆவேசம் வரப் பாடல்களைப் பாடுதலும், ஆவேசம் அதிகமுற்றுத் தெய்வம் ஏறியதாக

கருதப்பட்ட நிலையில் கூறும் சொற்களைத் தெய்வ வாக்காக நம்புவதும், மேற்கூறிய சமயப் பண்பாட்டைத் தெளிவுறுத்துவனவாகும். இப்பண்பாடு, வருசபத்து அங்காளம்மன் கோயில் மூலமும், சீர்காழி புத்தடி மாரியம்மன் கோயில் மூலமும், பிற காளியம்மன், மற்றும் காமன் கோயில்கள் மூலமும் பெறப்படுகிறது.

மக்களைத் துன்பத்திலிருந்து காப்பாற்றக்கூடியது இறைச் சக்தி ஒன்றே என்பது தமிழர்களின் நம்பிக்கையாகும். பிணிகள் தீய ஆவிகள் முதலியவற்றின் அருகைக்கு ஆட்படாமலும், இயற்கை வளந்தரவும், மக்கட்பேறு முதலியன உண்டாகவும் இறைவனை முழுமையாக நம்பினர். மேலும் இறைவனை உண்மையாக நம்புகின்ற போது புறச் செயல்கள் ஏதும் தம்மை பாதிக்காது என்ற நம்பிக்கையின் விளைவாக தன்னையே வருத்திக்கொள்கின்ற நேர்த்திக் கடன்களில் ஈடுபட்டனர். தொன்று தொட்டு வரும் தமிழர்களின் சமய நம்பிக்கையில் பேரின்ப வீடு பேறு அடைய. இம்மையில் சிற்றின்பங்களைத் துறந்து, தியாகங்கள் பல செய்து, தன்னையே வருத்திக்கொள்வது தலையாயது. அகத்தை ஒருமைப் படுத்துவதோடு புறத்தையும் ஒருமைப்படுத்தச் சில சோதனைகளை மேற்கொண்டனர். இதன் விளைவாக வந்த நேர்த்திக் கடன்களே தீமிதித்தல், அலகுக்குத்திக்கொள்ளுதல், அலகுக் காவடி எடுத்தல், அங்கப் பிரதட்சணம் முதலியனவாகும். இந்நேர்த்திக்கடன்களை மாதானம் மாரியம்மன் கோயில், சீர்காழி புத்தடி மாரியம்மன் கோயில் போன்ற கோயில்கள் வெளிப்படுத்துகின்றன. அதோடு ஒரு பேரின்பத்தை அடையவேண்டும் என்ற அவா ஏற்படும்போது துன்பத்தையும், இழப்பையும் தாங்குகின்ற ஒரு மனநிலை ஏற்பட வேண்டும் என்ற சமயத் தத்துவத்தை ஆய்வுக்கட்டுரையில் கூறப்பட்டுள்ள நேர்த்திக்

கடன்கள் விளக்குவனவாகும். இவை மேற்குறிப்பிட்ட சமயந்தொடர்பான பண்பாட்டை வலியுறுத்துகின்றன.

விழாக்கள் முழுக்க முழுக்கச் சமயந் தொடர்பான ஒன்றாக இருப்பினும், அவற்றில், தமிழர்களின் பல பண்பாடுகள் வெளிப்படுகின்றன. "யாதுஉம் ஊரே யாவரும் கேளிர்" என்ற பொதுவுடைமைப் பண்பாடு தமிழர்களுக்கேயுரியதாகும். விழாக்கள் பொருட்டு வேற்றூர்களிலிருந்து வருவோரையும், உறவினர்களையும், நண்பர்களையும் அரவணைத்து உபசரிக்கும் நிலை விழாக் காலங்களில்தான் ஏற்படுகிறது. எவ்வளவுதான் வேறுபாடுகள் இருப்பினும் அவை விழாக்காலங்களில் இல்லையாக நீங்கி, உறவு கொண்டனர். இவை மேற்கூறிய பண்பாட்டைக் காட்டுவதாக உள்ளன. இப் பண்பாடு; திருமுலைப்பால் விழா; நாங்கூர் மங்களாசாசன விழா; நந்தனார் விழா; மாரியம்மன் கோயில்களில் நடைபெறும் தீமிதி விழாக்கள் போன்ற விழாக்கள் மூலம் பெறப்படுகிறது.

விருந்தோம்பும் பண்பு தமிழர்களின் தலைசிறந்த பண்பாகும். உருத்திராபதியார் கோயில் அன்னப்படையல் விழாவில் எண்ணற்றவர்களுக்கு அன்னமிடுதலும் தீமிதி விழாக்களின் போது செய்யப்படும் நீர் மோர் வார்த்தல், கஞ்சி வார்த்தல் போன்றனவும் நாங்கூர் மங்களாசாசன விழாவில் செல்வந்தர்களால் அளிக்கப்படும் சித்தாரன்னங் களும் விழாவிற்கு வரும் உறவினர்களையும் நண்பர் களையும் வரவேற்று உணவளிப்பதும் மேற்கூறிய விருந் தோம்பும் பண்பை வெளிப்படுத்துவதாக உள்ளன.

எதிலும் ஒரு கலையுணர்ச்சியோடும், பொழுது போக்குந் தன்மையோடும் ஈடுபடும் தமிழர்களின் பழக்கத்தை விழாக் காலக் கூத்துக்கள் விளங்குகின்றன. காமன் கோயில்களில்

வேடமிட்டுக்கொண்டு பாடுவதும், உருத்திராபதியார் கோயில்களில் பைரவர் வேடம் பூண்டவர் பிள்ளைக் கறி கேட்பதும், திரௌபதியம்மன் கோயில்களில் பாரதக் கதையைக் கூத்தாக நடத்துவதும், மற்றும் விழாக்காலங் களில் நடைபெறும் பசனை நிகழ்ச்சிகளும், கூத்துகளும் மேற்கூறிய பண்பாட்டைத் தெளிவுபடுத்துகின்றன.

**இலக்கியக் கொடை:**

நாட்டுப்புற இலக்கியத்திற்குப் பல பாடல்களை இவ்வட்டச் சிறுதெய்வக் கோயில்கள் காணிக்கையாக்கி யுள்ளன. வருசபத்து அங்காளம்மன் கோயில் போன்ற கோயில்கள், பல உடுக்கைப் பாடல்கள், குறிகேட்கும் பாடல்களையும்; சீர்காழி மாரியம்மன் கோயில் போன்ற கோயில்கள், மாரியம்மன் தாலாட்டுப் பாடல்களையும்; காமன் கோயில்கள் இரதியின் ஒப்பாரி பாடல்களையும்; வருசபத்து உருத்திராபதியார் கோயில், காமன் கோயில் போன்ற கோயில்கள், கூத்துத் தன்மை மிளிரும் காமன் விழாப்பாடல்களையும், அன்னப்படையல் விழாப்பாடல் களையும், நாட்டுப்புற இலக்கியத்திற்குக் கொடையாக்கி யுள்ளன.

இவ்வாறாகக் கோயில்கள் மூலம் பெறப்படும் தமிழர் களின் சில பண்பாட்டுக் கொடைகளையும், இலக்கியக் கொடைகளையும் இவ்வியல் வெளிப்படுத்தியுள்ளது.

## குறிப்புகள்

1. சுப்பிரமணியப்பிள்ளை, கா; **தமிழர் சமயம்,** ப. 55.
2. வையாபுரி பிள்ளை, எஸ்; **தமிழர் பண்பாடு** ப. 184.
3. **திருக்கோயில்,** (மாதஇதழ்), மகராஜன், எஸ்; "சமயச் சடங்குகள்" ஜூன் 1975, ப. 13.

4. **சிலப்பதிகாரம்:** காதை; குன்றக்குரவை, வரிகள். 16–20.
5. **திருக்கோயில்,** (மாத இதழ்), குமாரசாமி குருக்கள், "ஆலயத் தத்துவ விளக்கம்", ஏப்ரல் 1977, பக். 25–26.
6. சட்டைநாதர் புனுகுடன் நவபாடணம் சேர்கிறது. தகவல் :எஸ். சோமசுந்தர குருக்கள், சீர்காழி.
7. தகவல்; நா. இராமநாத சிவாச்சாரியார், திருக் கோலக்கா.
8. சுப்பிரமணியப்பிள்ளை, கா; **தமிழர் சமயம்,** ப. 21.
9. **வனபூசை போடும் விபரமுறை:** (பதிவு செய்யப்பெறாத சுவடியிலிருந்து பெறப்பட்டது.)
10. ஷை
11. **அகராதி;** ப. 680.
12. **வனபூசை போடும் விபரமுறை:** (பதிவு செய்யப் பெறாத சுவடியிலிருந்து பெறப்பட்டது.)
13. கணபதி, இரா; **அம்மா,** (சென்னை, கலைமகள் காரியாலயம், முதற்பதிப்பு 1975.) ப. 151.
14. **சீர்காழித் தலவரலாறு;** ப. 61.
15. நல்ல விநாயகபுரம், திரு. கோபால் அவர்களிடமிருந்து போட்டியின்போது பெறப்பட்டது.
16. **ஆய்வுக்கோவை:** (அண்ணாமலைப் பல்கலைக்கழகச் சார்பு வெளியீடு, 1981) தொகுதி. 3, ப. 117.
17. **அகநானூறு:** (நித்திலக்கோவை) பாடல் எண்: 382. வரிகள். 3–5.
18 **தொல்காப்பியம்:** பொருளதிகாரம், புறத்திணையியல், நூற்பா எண்: 5
19. பெயரும் பீடும் கூறி வாழ்த்தும் முறையையே பிற்கால அடியார்கள், பக்திப் பாடல்களைப் பாடவழிவகுத்தது.

20. கா. சிவதம்பி அவர்கள்: "நாடகமும் பண்பாடும் – தமிழ் நாடக வளர்ச்சி பற்றிய ஒப்பாய்வு" என்ற சொற்பொழிவு ஆற்றியபோது பெற்ற கருத்து. (களம்: புட்பம் கல்லூரி, பூண்டி, காலம்: 5– 8– 82. 11-30-1-00.)

21. சீர்காழி திருஞானசம்பந்த மூர்த்தி, திருப்புன்கூர் சுப்பிரமணியம் போன்றோர் சிறந்த ஓதுவார்களில் சிலர்.

22. இப்பாடல்கள் பதிவு செய்யப்பெறாமல் இருந்ததால் பதிவு செய்யும் நோக்கோடு இவை ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்டன.

23. **மன்மத சுவாமி பாடல்கள்:** (பதிவு செய்யப் பெறாத சுவடியிலிருந்து பெறப்பட்ட பாடல்.)

24. **உத்திராபதியார் பாடல்கள்:** (பதிவு செய்யப்பெறாத சுவடியிலிருந்து பெறப்பட்ட பாடல்.)

25. **உடுக்கைப் பாடல்கள்:** (அங்காளம்மன் பாடல், பதிவு செய்யப்பெறாத சுவடியிலிருந்து பெறப்பட்டது.)

26. **இரதியின் ஒப்பாரி பாடல்கள்:** (பதிவு செய்யப்பெறாத சுவடியிலிருந்து பெறப்பட்ட பாடல்.)

27. **தாலாட்டுப் பாடல்கள்:** (மாரியம்மன் பாடல், பதிவு செய்யப்பெறாத சுவடியிலிருந்து பெறப்பட்டது.)

28. சிதம்பர சுவாமிகள்: **திருப்போரூர்ச் சந்நிதி முறையும் பிற நூல்களும்**, (திருப்போரூர், கந்தசாமி தேவதானம், 1967.) ப. 86.

29. இராதாகிருட்டினன். எஸ்; **நம்பிக்கையின் மறுமலர்ச்சி.** ப. 12

30. "நாட்டோடிப்பாடல்கள் காட்டும் நம்பிக்கை" –(ப.இ.) ப. 1.

31. சண்முகசுந்தரம், சு; **நாட்டுப்புறவியல் ஓர் அறிமுகம்** ப. 11.

32. இராதாகிருட்டினன். எஸ்; **நம்பிக்கையின் மறுமலர்ச்சி** ப. 34.

33. சண்முகசுந்தரம், சு; **நாட்டுப்புறவியல் ஓர் அறிமுகம்** ப. 11.

34. முருகையா தேசிகர்; **அங்காரகன்** ப. 4.

35. **புள்ளிருக்கு வேளூர்த் தலவரலாறு**, ப. 7.

36. சுந்தரர்; **தேவாரம்,** (தலமுறை) ப,18.

37. "நாடோடிப் பாடல்கள் காட்டும் நம்பிக்கை"; ப, 21,

38. **மன்மத சுவாமி பாடல்கள்**; (பதிவு செய்யப்பெறாத சுவடியிலிருந்து பெறப்பட்டது)

39. **குறிகேட்கும் பாடல்கள்**; (பதிவு செய்யப்பெறாத சுவடியிலிருந்து பெறப்பட்டது.)

40 திருஞானசம்பந்தர்; **தேவாரம்,** (தலமுறை) ப. 545.

41. தட்சிணாமூர்த்தி, அ: **தமிழர் நாகரிகமும் பண்பாடும்,** ப. 82.

42. "நாடோடிப் பாடல்கள் காட்டும் நம்பிக்கை", ப. 13.

43. ஷை;ப. 22.

44. அரவிந்தன், மு. வை; **தமிழக நாட்டுப்பாடல்கள்,** (சென்னை, பாரிநிலையம், முதற்பதிப்பு 1977.) ப. 261.

45. திருஞானசம்பந்தர்; **தேவாரம்,** (தலமுறை) பக். 692 - 694.

46. பரமசிவானந்தம், அ மு; **தமிழ்நாட்டு விழாக்கள்,** (முன்னுரை) (சென்னை, தமிழ்க்கலைப் பதிப்பகம், முதற்பதிப்பு, 1956.) பக். IV - V.

47. தட்சிணாமூர்த்தி, அ; **தமிழர் நாகரிகமும் பண்பாடும்,** ப. 307.

48. ஷை; ப. 307.

49. சைவ சித்தாந்தம்; (தேர்வு வினாவிடை) ப. 120.

50. நாங்கூர், மங்களாசாசனத்திருவிழா அபிமான உற்சவம் ஆகும்.

51. **சைவ சித்தாந்தம்;** (தேர்வு வினாவிடை) ப. 20.

52. ஷை; ப. 120.

53. பரமசிவானந்தம், அ. மு; **தமிழ்நாட்டு விழாக்கள்,** (முன்னுரை) ப. III

54. தட்சிணாமூர்த்தி, அ; **தமிழர் நாகரிகமும் பண்பாடும்,** ப. 307.

55. காந்தி,க; **தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்,** (சென்னை, உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்) என்ற நூலில் சான்றுகள் கொடுக்கப்பட்டுள்ளன.

56. **கலித்தொகை,** (பாலைக்கலி) பாடல் எண்: 27, வரிகள்: 23 - 26.

57. அம்மை நோயிலிருந்து தம்மை காப்பாற்றவே இவ்விழா நடைபெறுகிறது என்ற கருத்தும் உண்டு.

58. கரகம் என்றால் கமண்டலம் என்று பொருள்படும். தகவல்: கே. கண்ணன், சீர்காழி.

59. ‘காமன் பண்டிகை’ என்ற சொல்லின் மருவிய சொல்.

60. காமன் எரித்த பள்ளத்தை மூடுங்குழியே மூணாங்குழி ஆகியிருக்க வேண்டும். தகவல்: கே. கண்ணன், சீர்காழி.

61. வில், ஆற்றுநொச்சி கிளைகளினால் செய்யப்படுவது.

62. **மன்மத சுவாமி பாடல்கள்:** (பதிவு செய்யப்பெறாத சுவடியிலிருந்து பெறப்பட்டது.)

63. இதனை ஊர் முதியவர் ஒருவர் செய்வது மரபாகும்.

64. அரிசி முதலிய கலவையால், அச்சுக்கொண்டு பாவை செய்யப்படும்.

65. **உத்திராபதியார் பாடல்**; (பதிவு செய்யப்பெறாத சுவடியிலிருந்து பெறப்பட்டது.)

66. இந்நாடகம் இப்பொழுது நடைபெறுவதில்லை.

67. **மன்மதசுவாமி பாடல்கள்**; (பதிவு செய்யப்பெறாத சுவடியிலிருந்து பெறப்பட்டது.

68. சிதம்பரம்; அண்ணாமலை நகரில் இன்றளவும் இவ்விழா நடைபெறுகிறது.

69. தகவல்: திட்டை, கிருட்டினமூர்த்தி.

70. உள்ளே படுத்திருக்கும் அவர் இறந்துபடவும் கூடும் என்ற நம்பிக்கையால், அவரைச் சிலர் கிள்ளிக் கொண்டு இருப்பர்.

71. தகவல்: சி. மிருத்யூஞ்செயன், இடமணல்.

72. குரங்குபுத்தூர், துரைராசு என்பவர் ஆஞ்சநேயர் ஆட்டத்தில் சிறந்தவர், இவரை "விசுவரூப ஆஞ்சநேயர்" என்ற பட்டப்பெயர் கொண்டு அழைப்பர்.

73. கோலாட்ட நிகழ்ச்சியின்போது நேரில் கேட்டுப் பதிவு செய்யப்பெற்ற பாடல்.

74. குறவன் குறத்தி ஆட்ட நிகழ்ச்சியின் போது நேரில் கேட்டுப் பதிவு செய்யப்பட்ட பாடல்.

## கோயிலும் வரலாறும்

கோயில் பற்றிய வரலாற்றையும் பிற செய்திகளையும் தரக்கூடிய மூலங்கள் பல. புராணங்கள், செவிவழிச் செய்திகள், இலக்கியங்கள், கல்வெட்டுக்கள் முதலியன அம் மூலங்களாகக் கொள்ளத் தக்கன. சைவ, வைணவக் கோயில்களின் தோற்றம் பற்றிய செய்திகளும், இலக்கியங்களும், புராணத் தன்மை வாய்ந்தன. இக்கோயில் பற்றிய வரலாற்றுச் செய்திகளை மூன்று பிரிவுகளுள் அடக்கலாம்.

1. தலபுராணம், மற்றும் செவிவழிச் செய்திகள் தரும் கோயிலின் தோற்றம் பற்றிய தகவல்கள்.
2. தனிப்பாடல்களாவும், நூல்களாகவும் உள்ள இலக்கியங்கள் தரும் செய்திகள்.
3. கல்வெட்டுக்கள் காட்டும் வரலாற்றுச் செய்திகள்.

சிறு தெய்வக் கோயில்களின் தோற்றம் பற்றி ஏராளமான செவிவழிச் செய்திகள் காணப்படுகின்றன. இக்கோயில்களின் வழிபாட்டுப் பாடல்களில் ஆங்காங்கே சிதறிய நிலையில் சில சமுதாயச் செய்திகள் காணக் கிடக்கின்றன. இப்பாடல்களும் வழிவழியே வருவதால் அச் செய்திகளுக்குரிய நிகழ்ச்சிகள் தெளிவாகவில்லை. பொதுவாகச் சிறு தெய்வக் கோயில்கள் மூலம் பெறப்படும் செய்திகளைச்

1. செவிவழிச் செய்திகள் தரும் கோயில் பற்றிய தகவல்கள்
2. வழிபாட்டுப் பாடல்களினால் பெறப்படும் செய்திகள்

என்று இரு பிரிவுகளுள் அடக்கலாம்.

சீர்காழி வட்டக் கோயில்களின் வரலாற்றை ஆராய முற்படின் அது விரிந்து செல்லும். எனவே பெருந் தெய்வக் கோயிலான சீர்காழி சட்டைநாதர் கோயில் வரலாற்றுச் செய்திகளை மட்டும் ஆராய்வதற்கு இவ்வியல் விழைகிறது.

## சட்டைநாதர் கோயில் வரலாறு

இக் கோயில் பற்றிய வரலாற்றுச் செய்திகள் முன்னர்ப் பாகுபடுத்திய மூன்று பிரிவுகளில் ஆராயப்படுகிறது.

### சட்டைநாதர் கோயில் தோற்றம் பற்றிய செய்திகள்:

இக் கோயிலின் தோற்றம் பற்றி, தல வரலாறு பின்வரும் கதையொன்றைக் கூறுகிறது.[1]

ஆரியா வர்த்தத்தை ஆண்ட மன்னன் காலவித்து என்பவன், இவன் மகப்பேறு இன்மையால் உரோமச முனிவரை வணங்கினான். அவர், "கயிலையின் சிகரத்தைத் தரிசித்தால் கவலை தீரும்" – என்றார். "அதனை எவ்வாறு தரிசிக்க முடியும்" – என்று கவலையுற, முனிவர் தவம் மேற்கொண்டார். இறைவன் முனிவர் முன் தோன்றி, "வேண்டுவது யா"தென வினவ; முனிவரும், "தென்னாட்டு மக்கள் தரிசிக்க வேண்டி, இம் மலைச் சிகரம் ஒன்றைத் தென்திசையில் தோற்றுவித்து அதில் உமா தேவியுடன் வீற்றிருந்தருள வேண்டும்" – என்று வேண்டினார். இறைவனும், "ஆதிசேடனுக்கும், வாயுக்கும் போர் நடக்கும்போது இது நிறைவேறும்" – என்றருள் புரிந்தார். பின்னொருநாள் ஆதிசேடனுக்கும், வாயுக்கும் தம்முள் யார் வலியர் என்பது பற்றிப் போர் நிகழ்ந்தது. ஆதிசேடன் தனது ஆயிரந் தலையாலும் கயிலாய மலையை மூடிக்கொண்டான். வாயு தன்னால் இயன்றளவு காற்றை வீசியும் மலையைச் சிறிது கூட அசைக்க முடியவில்லை. உலகம் ஊழிக்காலம் போல அலைந்தது. அது

கண்டு, தேவர்களின் வேண்டுகோளின்படி ஆதிசேடன் தனது ஒரு தலையைத் தூக்கினான். உடனே மலைச் சிகரம் பெயர்ந்து ஒருபெருங் கிளையும், பல சிறு கிளைகளுமாகப் பதினொரு கிளைகள் வீழ்ந்தன.

பெருங்கிளையான சிகரம், இறைவன் அருளால் இருபது பறவைகள் சேர்ந்து சீர்காழி நகரில் கொண்டு வந்து வைக்கப்பட்டது. காலவித்து அரசனும் தரிசித்தான். பின்னர் அம்மலை மறைந்துவிட, மலை வந்து தங்கிய இடத்தில், சுதையால் இருபது பறவைகள் தாங்கியது போன்ற அமைப்பில் ஒரு கட்டுமலையை அரசன் கட்டுவித்தான். இதன்பின் ஏழு தீவுகள் அடங்கிய இப் பேரண்டத்தைக் கடலானது ஓர் ஊழிக்காலத்தில் பொங்கி யழித்தது. இறைவன், ஆன்மக் கோடிகளைப் படைக்கத் திருவுளம் கொண்டு பிரணவமே தோணியாக, உமா மகேசுவரராகத் தோணியைச் செலுத்திக் கொண்டு வருகையில், அக்காலத்தும் அழியாத இத்தலத்தைக் கண்டு இதுவே மூலாதாரசேத்திரம் என்று தோணியுடன் எழுந்தருளினார்.

இவ்வாறாகச் சீர்காழி சட்டை நாதர் கோயில் தோற்றம் பற்றி அக்கதை கூறுகிறது.

**சட்டைநாதர் கோயில் இலக்கியங்கள் தரும் செய்திகள்:**

சட்டைநாதர் கோயில் பற்றி, சமயக்குரவர் காலந் தொட்டு இன்று வரையிலும் இலக்கியங்கள் எழுந்த வண்ணம் உள்ளன. இக் கோயிலைப் பற்றித் திருஞான சம்பந்தர் அறுபத்தேழு பதிகங்கள் பாடியுள்ளார். திருநாவுக்கரசர் பாடிய மூன்று பதிகங்களும், சுந்தர மூர்த்தியின் திருப்பதிகம் ஒன்றும், திருவாசகப் "பிடித்தப் பத்தும்" இக் கோயிலைப் பற்றிப் பாடப்பட்டவையே ஆகும்.

மேலும் பட்டினத்தடிகளின் "திருக்கழுமல மும்மணிக் கோவை", நம்பியாண்டார் நம்பிகளின், "திருமும்மணிக் கோவை", "திருச்சண்பை விருத்தம்", "திருத்தொகை" "திருவந்தாதி", "திருவுலாமாலை", "திருக்கலம்பகம்". ஆகிய நூல்களும் இக் கோயிலைப் பற்றிய செய்திகளைத் தந்து நிற்கின்றன. அருணகிரிநாதர், காழிக்குமரவேளைத் திருப்புகழ் பாடிச் சிறப்பித்துள்ளார். கண்ணுடைய வள்ளலாரின் "ஒழிவில் ஒடுக்கம்", சிவஞான தேசிகரின் "ஆபதுத்தாரணமாலை", மாசிலாமணி தேசிகரின் "திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ்", அருணாச்சல கவிராயரின், "காழிப்பள்ளு", "காழியந்தாதி", "காழிப் புராணம்", முதலிய நூல்களும் சட்டைநாதர் கோயில் பற்றி எழுந்த நூல்களேயாகும். இன்று வாழும் கவிஞர்களில் சீர்காழி சித்ருப சுவாமிகள் குறிப்பிடத்தக்கவர். இவர் பிருமபுரீசுவரர் சம்பந்தர் மீது ஏராளமான விருத்தப் பாக்களைப் பாடியுள்ளார். தண்டபாணி தேசிகர் அவர்கள் "சட்டை நாதர் பதிகம்" ஒன்றை இயற்றி வெளியிட்டுள்ளார்.

இவ்விலக்கியங்கள் தரும் செய்திகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

அவை,

1. இறைவன் புகழ்பற்றிய செய்திகள்
2. புராணச் செய்திகள்
3. வரலாற்றுச் செய்திகள் எனப்படும்.

**இறைவன் புகழ்:**

இறைவன் புகழ் ஒன்றையே நெக்குருகிப் பாடிப் போற்றும் பாடல்களே மிகுதி.

தோடுடைய செவி யன்விடையேறியோர்
தூவெண்மதி சூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென்
உள்ளங்கவர் கள்வன் -

என்று திருஞானசம்பந்தர் இறைவனைப் போற்றுவர்.[2]

சிந்தித் தெழுமன மேநினை யாமுன் கழுமலத்தைப்
பந்தித்த வல்வினை தீர்க்கவல் லானை ...

என்று திருநாவுக்கரசர் வினை தீர்க்க வல்லவன் இவன் என்று பாடுவர்.[3]

அருளுடைச் சுடரே யலிந்ததோர் கனியே
பெருந்திற லருந்தவர்க் கரசே
பொருளுடைக் கலையே புகழ்ச்சியைக் கடந்த
போகமே யோகத்தின் பொலிவே

என்று மாணிக்க வாசகர் புகழ்வர்.[4] இவ்வாறாக, இக் கோயில் பற்றிய இலக்கியங்களில் பல இறைவன் புகழ் பாடுவதே நோக்கமாகக் கொண்டு இயற்றப்பட்டுள்ளன.

**புராணச் செய்திகள்:**

இப் பாடல்களில் புராணச் செய்திகளும் மிகுதியாக இடம் பெற்றுள்ளன.

நிலையும் பெருமையும் நீதியுஞ்சால அழகுடைத்தாய்
அலையும் பெருவெள்ளத் தன்றுமிதந்த
இத்தோணிபுரம்

என்ற திருநாவுக்கரசர் பாடல் ஒன்று,[5] ஊழிப் பெரு வெள்ளத்தில் மூழ்காது நின்ற இத் தோணிப்புரப் பெருமையைக் கூறுகிறது. இவரே; 'சிவபெருமான்', இராவணன் முடி சிதறுமாறு தன் மலரடி ஊன்றிய நிகழ்ச்சியைக் கூறியுள்ளார்.[6] தேவார, திருவாசகப் பாடல்கள் பிருமபுரீசுவரரையும், தோணியப்பரையுமே

மிகுதியும் குறிப்பிடுகின்றன. சட்டைநாதர் பற்றிய புராணக் குறிப்புகளைப் பிற்கால நூல்களே மிகுதியும் இயம்புகின்றன.

துங்க மாமணித் தூணில்வந் திரணியன்
தோள்வலி தனை வாங்கும்

என்ற தல புராணப் பாடல் ஒன்று,[7] சிவபெருமான் நரசிங்கத்தை அடக்கியதும், நரசிங்கத்தின் எலும்பை கதையாகவும், தோலைச் சட்டையாகவும் அணிந்த செய்தியையும் கூறுகிறது. "ஆபதுத்தாரணர் மாலை"–முழுவதும் சட்டைநாதர் புராணத்தைக் கூறும் இலக்கியமாகும்.

ஞானசம்பந்தர் இறையருள் பெற்றதைப் பிற்கால இலக்கியங்கள் கூறுகின்றன. சம்பந்தன் காழியர்கோன் றன்னையுமாட் கொண்டருளி என இதனைத் "திருவிசைப் பா" – தெளிவுறுத்தும்.[8]

தாதையொடு வந்த வேதியச் சிறுவன்
தளர்நடைப் பருவத்து வளர்பசி வருத்த

என்ற "திருக்கழுமல மும்மணிக்கோவைப்" பாடல் ஒன்று[9]. திருஞானசம்பந்தர், தந்தையோடு பிரும்ம தீர்த்தக் கரையை அடைந்ததும், சம்பந்தர்க்குப் பசியேற்பட்டு அழ, அன்னை உமையவள் ஞானப்பால் அளித்ததும் ஆகிய புராணச் செய்திகளைக் கூறுகிறது. மாசிலாமணி தேசிக சுவாமிகள் இயற்றிய, "திருஞானசம்பந்தர் பிள்ளைத் தமிழ்", ஞானசம்பந்தர் வரலாறு முழுமையும் கூறும் சிற்றிலக்கியமாகும். இவ்வாறாக இக் கோயில் இலக்கியங்களில் பல புராண நிகழ்ச்சிகள் விளக்கப்பட்டுள்ளன.

**வரலாற்றுச் செய்திகள்**

இயற்கைக்கு ஒவ்வாத நிகழ்ச்சிகளுடன் வரலாற்றுக் குறிப்புகளையும் கலந்து விட்டதால், இலக்கியங்கள் தரும் வரலாற்றுச் சான்றுகளை முழுவதுமாக வரலாற்று அறிஞர்கள் ஏற்றுக் கொள்வதில்லை. திருஞானசம்பந்தர்

பாடல்களில் சமண, பௌத்த எதிர்ப்பு காணப்படுகிறது. இவர் தோன்றிய காலத்தில், சைவமும் வைணவமும், சமண பௌத்த மதங்களோடு முட்டி மோதி முன்னேறும் நிலை இருந்து வந்தது. இதனைத் தெளிவுறுத்தும் வகையில், பல வரலாற்று நிகழ்ச்சிகளை உள்ளடக்கிய பாடல்கள் புனையப் பெற்றன.

கூடலிற் சமண்முகர் திருமடத் திட்டஎரி
கொற்றவர் பற்ற...

என்ற "திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ்ப்" பாடல் ஒன்று.[10] சமணர்கள் சம்பந்தர் மடத்தை எரித்ததும், சம்பந்தர், பாண்டியனின் பெருங்கூனும், வெப்புநோயும் தீர்த்து, அவனைச் சைவத்திற்கு மாற்றியதுமான செய்திகளைக் கூறுகிறது. புத்தரோடு பொறியில் சமணும் புறங்கூறிநெறி நில்லா என்று ஞானசம்பந்தர் இரு மதங்களையும் பழித்துக் கூறுவர்.[11] இப்பாடல்கள் தரும் செய்திகளின் அடிப்படையில், அக் காலத்தில் சமயப் போட்டிகள் மிகுந்திருந்த நிலையையும், அடியார்கள், மன்னர்களைத் தங்கள் சமயத்திற்கு மாற்ற பெரும் முயற்சிகளை மேற்கொண்டனர் என்பதையும் அறியமுடிகிறது. இவ்வாறாக, இக்கோயில் இலக்கியங்கள் சில வரலாற்றுச் செய்திகளை ஆங்காங்கே சுட்டிச் செல்கின்றன.

## சட்டைநாதர் கோயில் கல்வெட்டுக்கள் காட்டும் வரலாறு:[12]

இக்கோயிலைப் பற்றி 47 கல்வெட்டுக்கள் உள்ளன. அவற்றுள் இரண்டாம் குலோத்துங்கன் கல்வெட்டுக்கள் மூன்று, இரண்டாம் இராசராசன் கல்வெட்டுக்கள் ஐந்து, மூன்றாங் குலோத்துங்கன் கல்வெட்டுக்கள் ஏழு, வீரராசேந்திரன் கல்வெட்டுக்கள் மூன்று, இராசாதிராசர் கல்வெட்டு ஒன்று, கோனேரின்மை கண்டான் என்ற குறிப்பில் உள்ள கல்வெட்டுக்கள் இரண்டு. மூன்றாம்

இராசராச தேவர் கல்வெட்டுக்கள் இரண்டு, கோப்பெருஞ் சிங்கன் கல்வெட்டுக்கள் நான்கு, பெயர் குறிப்பிடப்படாத பரகேசரிவர்மன் கல்வெட்டு ஒன்று, இராசகேசரி வர்மன் கல்வெட்டுக்கள் மூன்று, வீரவிருப்பண்ண உடையார் கல்வெட்டுக்கள் இரண்டு. ஆண்டு மட்டும் குறிக்கப்பட்ட கல்வெட்டுக்கள் மூன்று, கிருட்டின தேவராயர் கல்வெட்டு ஒன்று, வேங்கட தேவ மகாராயரது கல்வெட்டு ஒன்று. பெயர் குறிப்பிடப்படாத கல்வெட்டுக்கள் எட்டு, ஆக நாற்பத்தாறும், படியெடுக்கப்படாத ஒன்றும் 47 கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன.

கல்வெட்டுக்களால் 'தலம்' 'மூர்த்தி' இவற்றின் அமைப்பும், பல வழக்கங்களும் அறியப்பெறுகின்றன. இத்தலம், இராசராச வளநாட்டுத் திருக்கழுமல நாட்டு பிரமதேயம் "திருக்கழுமலம்" என்று குறிக்கப்பட்டுள்ளது. பிருமபுரீசுவரரைத் "திருக்கழுமல உடையார்" என்றும், தோணியப்பரைத் "திருத்தோணிபுரம் உடையார்" என்றும், தோணியப்பர் பக்கமுள்ள அம்மையைப் "பெரியநாச்சியார்" என்றும், திருஞான சம்பந்தரை "ஆளுடைய பிள்ளையார்" என்றும் குறிக்கப்பட்டுள்ளன. ஆளுடைய பிள்ளையார் கோயிலில் அவர் தம்திருவுருவத்தை முதன்முதலில் எழுந் தருளச் செய்தவள் மூன்றாம் குலோத்துங்கன் அடுக்களைப் பெண்டுகளில் மூத்தவள் இராச விச்சாதரி என்பவள். இரண்டாம் இராசராசனது கல்வெட்டு, கங்கைகொண்ட சோழபுரத்தான் ஒருவன், ஆளுடைய பிள்ளையார் கோயில் முதற் பிரகாரம் திருமதில் எடுக்கப் பொன் கொடுத்தமையை அறிவிக்கிறது.

இராச மகேந்திரனுக்குப் பின்னர் வீரராசேந்திரன் அரசை மேற்கொண்டான். இவனது ஆறாம் ஆட்சி ஆண்டில் தொங்கு விளக்குகள் இரண்டு வைக்கவும், எரிக்கவும் சயங் கொண்ட சோழ மண்டலத்துப் பழயனூரில் நிலம் விடுத்து

இருக்கிறான். அதே யாண்டில் குலோத்துங்க சோழ வளநாட்டு திருநரையூர் நாட்டு வேளூர் வாசியான ஒருவரால் ஆளுடைய பிள்ளைக் கோயில் நிலங்கள் பரிவர்த்தனை செய்யப்பட்டன. ஏழாம் ஆட்சியாண்டில் திருத்தோணி புரமுடையார் பெரிய நாச்சியார் நிவேதனத்திற்காகக் கிடாரங் கொண்ட சோழ நல்லூரில் நிலம் வழங்கிய செய்தி அறிவிக்கப்படுகிறது.

இரண்டாம் குலோத்துங்கனது மூன்றாம் ஆட்சி யாண்டில், முதலாங் குலோத்துங்கன் தன் 18–வது ஆட்சியாண்டில் கொடுத்து இறையிலி நிலம் தரிசாகக் கிடக்க அதனைத் திருத்தி வேறொருவருக்கு அளித்த செய்தி தெரியவருகிறது. நான்காம் ஆட்சி ஆண்டில்; திருஞான சம்பந்தர் கோயிலில் நெடுநாளாகவே தேவாரத் திரு முறைகள் எழுதி வைக்கப் பெற்றிருந்தன. அவற்றைப் பூசித்துக் கண்காணிக்க ஒரு விரகர் நியமிக்கப் பெற்றிருந் தார். அவர் கடமை திருமுறை ஏடுகள் பழுதடையாமல் பாதுகாத்துக் கொள்ளுதலும், பழுதடையின் அவற்றை எழுதிப் புதுப்பித்தலும், அவற்றைப் பூசிப்பதுமேயாகும். அவர் கிராமக் காரியம் பார்ப்பாரை இறையிலியாக நிலம் வேண்டிக்கொள்ள அவர் விருப்பப்படி நிலம் விடப்பட்டது. பத்தாம் ஆட்சியாண்டில் ஆக்கூர் நாட்டுத் தலைச் செங்காட்டில் மும்முடிச்சோழன் பேரம்பலம் என்ற பொது மன்றத்தில் சபையார் கூடித் திருஞான சம்பந்தர் பாற்போனகத்துக்கு நிலம் விடப்பட்டது.

இரண்டாம் இராசராசனது இரண்டாம் ஆட்சியாண்டில் இருநூற்றுப் பத்தொன்பதாம் நாள் ஆளுடைய பிள்ளையார் கோயில் திருப்பணிக்காகக் கங்கை கொண்ட சோழபுரத்திலுள்ள ஒருவரால் நிலம் விடப்பெற்றது. பதினோராம் ஆட்சியாண்டிலும் ஆளுடைய பிள்ளையாருக்கு நிலம் விடப்பட்டது. பன்னிரண்டாம் ஆட்சியாண்டில்

ஆளுடைய பிள்ளையார் கோயிலில் எழுந்தருளுவித்திருந்த மங்கையர்க்கரசி நாச்சியாருக்கு நிவேதனத்திற்காக வீர சோழ நல்லூரில் நிலம் விட்டமை குறிக்கப்பட்டுள்ளது. பதினெட்டு, மற்றும் இருபத்திநான்காம் ஆட்சியாண்டு களில் நந்தவனத்திற்கு நிலம் விட்டது கூறப்பட்டுள்ளது. இரண்டாம் இராசாதிராசனின் பதினோராவது ஆட்சி யாண்டில் சம்பந்தர் கறியமுதுக்குப் பயிருக்காக வெண் மலைத் தலைவனான ஆட்கொண்ட நாயகன் நட்ட பெருமாள் என்பவனால் நிலம் விடப்பட்டுள்ளது.

மூன்றாம் குலோத்துங்கன் மூன்றாம் ஆட்சியாண்டில் கும்பரவி பூர்வ பக்கத்துச் சப்தமி திங்கட்கிழமை அநிலம் (சுவாதி) கூடிய நாளில் தேவாரப் பண் இசைப்பார்க்கும் பயிற்றுவார்க்குமாகக் குலோத்துங்கனால் நிலம் விடப் பட்டது. ஒன்பதாம் ஆட்சி ஆண்டில் விளக்குக்காக நிலம் விட்ட செய்தி அறிவிக்கப்பட்டுள்ளது. பதினோராம் ஆட்சியாண்டில் பாண்டிய நாட்டிலே வீரபாண்டியன் விளைவித்த கலகங்களை அடக்கச் சென்றவர்களில் சீயகங்கன் மாமனாரான பொத்தப்பிச் சோழனும் ஒருவன். இவன் தனது வெற்றிக்கு அறிகுறியாக மதுரையிலிருந்து நடராசமூர்த்தியைக் கொண்டு வந்து சீர்காழியில் பிரதிட்டை செய்தான். பன்னிரண்டாம் ஆட்சியாண்டில் ஆளுடைய பிள்ளையார் கோயில் தேவகன்மிகள் கேட்டுக் கொண்டபடி எதிரிலிச் சோழ சதுர்வேதி மங்களத்துப் பெருங்குறிச் சபையார் நிலம் அளித்த செய்தி கூறப் பட்டுள்ளது. பதினான்காம் ஆட்சி ஆண்டில் அரசு சுற்ற மான எதிரிலிப் பெருமாள் என்பார் கோயிலுக்கு வைத்த நிவந்தத்தை நந்தி மங்கலம் கிழான் சூரியதேவன் அபகரித்துக் கொள்ள முறைப்பாடு உண்டான போது கணக்கனும், சபையோரும் சேர்ந்து நிலத்தை மீட்டளித் தனர். பதினேழாம் ஆட்சி ஆண்டிலும், இருபத்தேழாம்

ஆட்சி ஆண்டிலும் நந்தவனத்திற்காகவும், கோயிலுக்காகவும் நிலம் விட்ட செய்திகள் கூறப்பட்டுள்ளன.

மூன்றாம் இராசராசனின் எட்டாம் ஆட்சி ஆண்டில் இராசாதிராச வளநாட்டு திருவாலியான் மும்முடிச்சோழ சதுர்வேதி மங்களத்துப் பனங்குடியில் நிலம் விற்றமையும், திருத்தோணிபுரம் உடையார்க்கு நிலம் இறையிலியாக அளித்தமையும் குறிக்கப்பட்டுள்ளன. பதினேழாம் ஆண்டு 258-ஆம் நாள் தோணிபுரத்துத் திருக்கோயிலுக்கு ஆளுடைய நாயனார் பருகப் பொன்வட்டில் அளிக்கப் பட்டுள்ளது. மூன்றாம் கோப்பெருஞ்சிங்கன் திருத்தோணி புரமுடைய நாயகர்க்கு நிலம் இட்ட செய்தியை ஒரு கல்வெட்டு கூறுகிறது.

விசய நகர பேரரசின் மன்னன் இரண்டாம் அரிகரன் தென்னாட்டுப் பிரதிநிதியாக வீரவிருப்பண்ண உடையாரை நியமித்திருந்தான். இவர் சகம் 1315-இல் தில்லைவிடங்க நல்லூரில் சில பட்டர்களுக்கும், சீர்காழியிலுள்ள திருநெறி மாளிகை மடத்திற்கும் மடப்புறமாக நிலம் விட்டார். கிருட்டின தேவராயர் மனைப்பகுதியாக ஆண்டுதோறும் பத்துப்பொன் கோயிலுக்கு, வாடகை கட்டிவர உத்திர விட்டிருந்தான். வேங்கட தேவராயர் சகம் 1520-இல் ஆபதுத்தாரணர் அபிடேகத்திற்கு நிலம் அளித்துள்ளார். கி.பி. 1520-இல் தான் சட்டைநாதர் பற்றிய கல்வெட்டுக் குறிப்புக் காணப்படுகிறது. அதற்கு முன்னுள்ள கல்வெட்டுக்கள் தோணியப்பரையும், ஆளுடைய பிள்ளையாரையுமே குறிக்கின்றன.

இன்னாரென்று அறியமுடியாத கல்வெட்டுக்கள் பல உள்ளன. அவற்றுள் திருவாலி என்னும் மும்முடிச் சோழ சதுர்வேதி மங்களத்து நிலம் விட்ட செய்தியை ஒன்று குறிப்பிடுகிறது. மற்றுமொரு கல்வெட்டு சகம் 1313-இல்

பிரசோத்பத்தி ஆண்டு மகரமாதம் திருதியை வெள்ளி சதய நாள் திருஞானசம்பந்தர் மடத்திற்கு நிலம் விட்ட செய்தியைக் கூறுகிறது. ஆரனூர் இணைச்சியப்ப அகர வல்லபன் மூன்று தூண்களை அளித்த செய்தியை மற்றொரு கல்வெட்டு விளக்குகிறது. சகம் 1410–இல் கோனேரி தேவமகாராசா என்பவர் சீர்காழி கோயிலுக்கு நிலம் விட்டார் என்பதை ஒரு கல்வெட்டு காட்டுகிறது. இவர் யாரென்பது தெரியவில்லை.

ஒரு கல்வெட்டில் விட்டவ தேவமகாராசா முதலிய விருதுகள் குறிக்கப்படுகின்றன. இவ்விருதுகள் மேலைச் சாளுக்கிய மன்னர்களது கவிகளிலும் காணப்படுமாதலால் சிதைந்த இக் கல்வெட்டு அவர்களுடையதாகவும் இருக்கலாம். பாண்டியர்கள் கல்வெட்டுக்கள் ஒன்றும் இல்லாமல் இருப்பது குறிப்பிடத்தக்கது.

**பண்பாட்டுக் கொடையும் இலக்கியக் கொடையும்**

கோயில்கள் மூலம் பெறப்படும் பண்பாட்டுக் கொடை பற்றியும், இலக்கியக் கொடை பற்றியும் இவ்வியல் கூறுவதாவது வருமாறு:

**பண்பாட்டுக் கொடை:**

கோயில்கள் மூலம் அறப்பணி ஆற்றுவது என்பது தமிழர்களின் பண்பாடாகும். இவ்வறப் பணிகள் இடையறாது நடைபெறவேண்டும் என்ற நோக்கோடு, அவை கல்வெட்டுக்களாய்ச் செதுக்கி வைக்கப்பட்டன. கோயில் திருச்சுற்றுக்குத் திருமதில் எடுக்கப் பொன் கொடுப்பதும், நிவேதனத்திற்காக நிலங்கொடுப்பதும், கோயில் செயற்பாடுகளை (காரியஞ் செய்வார்) மேற் கொள்வோர்க்கு இறையிலியாக நிலமளிப்பதும், நந்தவனத் திற்கு நிலம் விடுதலும், கோயில் மூர்த்திகளுக்கு வேண்டும் பொருள்களை அளிப்பதும் முதலிய அறப்பணிகள்;

தமிழர்தம் பக்தி நெறியையும், கொடைத்திறனையும், அறச்செயல்களை விரும்பும் மனவெழுச்சியையும் காட்ட வல்லனவாகும். அறச்செயல் ஆற்றும் தமிழர் பண்பாட்டை சீர்காழி வட்டக் கோயில்களான சட்டைநாதர் கோயில், வைத்தியநாதர் கோயில், அகோர மூர்த்திக் கோயில் முதலிய கோயில்களின் கல்வெட்டுக்கள் வெளிப்படுத்து கின்றன.

**இலக்கியக் கொடை:**

தமிழ் இலக்கியப் பிரிவில்; பக்தி இலக்கியப் பிரிவு, ஒரு பெரும் பிரிவாகக் கருதப்படும் அளவிற்குப் பல இலக்கிய வகைகளைப் பெற்றுக் காணப்படுகிறது. பக்திப் பாடல்கள், தலபுராணங்கள், சிற்றிலக்கியங்கள், மருத்துவப் பாடல்கள், தத்துவப் பாடல்கள், நாட்டுப்புறப் பாடல்கள் முதலியன கோயில்கள் மூலம் வெளிப்படும் இலக்கியப் பிரிவுகளுள் அடங்குவனவாகும். இவ்விலக்கியங்களைச் சீர்காழி வட்டக் கோயில்கள், தமிழ் இலக்கியத்திற்குக் கொடையாக்கியுள்ளன.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோரின் தேவாரப்பதிகங்கள் சில; சட்டைநாதர் கோயில், வைத்திய நாதர் கோயில், சிவலோக நாதர் கோயில், அகோர மூர்த்தி கோயில், முதலிய கோயில்கள் மூலம், பக்தி இலக்கியத்திற்குக் கொடையாக்கப்பட்டுள்ளன.

நாங்கூர் பதினொரு திருமால் கோயில்கள் மூலம், திருமங்கையாழ்வாரின் நாலாயிரத் திவ்ய பிரபந்தப் பாடல்கள் வெளிப்படுகின்றன. "காழித்தல புராணம்", சட்டைநாதர் கோயில் மூலமும்; "புள்ளிருக்கு வேளூர்த் தல புராணம்" வைத்தியநாதர் கோயில் மூலமும்; "திருவெண் காட்டுத் தல புராணம்" அகோரமூர்த்திக் கோயில் மூலமும் இலக்கியத்திற்குக் கொடையாக்கப்பட்டுள்ளன.

சிற்றிலக்கிய வரிசையில் சட்டைநாதர் கோயில் மூலம் வெளிவந்துள்ள சிற்றிலக்கியங்கள் அல்லாமல்; வைத்திய நாதர் கோயில் மூலம், "முத்துக்குமரசாமிப்பிள்ளைத் தமிழ்": "திருவருட்பா", "சேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழ்", "புள்ளிருக்கு வேளூர்க் கலம்பகம்" முதலிய சிற்றிலக்கியங்களும் அகோர மூர்த்திக் கோயில் மூலம் "அகோரர் அந்தாதியும்"; சிவலோகநாதர் கோயில் மூலம்; "நந்தனார் சரித்திரக் கீர்த்தனைகளும்" ஆகியவற்றைக் கோயில்கள் சிற்றிலக்கியங்களாகத் தமிழுக்குக் கொடை யாக்கியுள்ளன.

இவையல்லாமல்; "திருப்புகழ்", காளமேகப் புலவர் பாடல்கள், கபிலதேவ நாயனார் பரணதேவ நாயனார் ஆகியோரின் பாடல்கள், "திருவிடைமருதூர் மும்மணிக் கோவை", "திருவேகம்பமுடையார்த் திருவந்தாதி", "பெரியபுராணம்", "கந்தபுராணம்", "பட்டினத்தார் வைத்தியநாதர் கோயில், சிவலோகநாதர் கோயில் பாடல்கள்", முதலிய இலக்கியங்களில் சில பாடல்களை, இவ்வட்டக் கோயில்களான, சட்டைநாதர் கோயில், அகோர மூர்த்திக்கோயில் போன்ற கோயில்கள் இலக்கியக் கொடையாக வழங்கியுள்ளன.

இவ்வாறாகக் கோயில்கள் மூலம் பெறப்படும் தமிழர் களின் சில பண்பாட்டுக் கொடைகளையும், இலக்கியக் கொடைகளையும் இவ்வியல் வெளிப்படுத்தியுள்ளது.

## குறிப்புகள்

1. **சீர்காழித் தலவரலாறு**, பக். 7–8.
2. திருஞானசம்பந்தர், **தேவாரம்**, (தலமுறை) ப. 35.
3. திருநாவுக்கரசர், **தேவாரம்**, (தலமுறை) ப. 42.

4. **திருவாசகம்,** (திருப்பனந்தாள், காசிமட வெளியீடு,) 1977, ப. 164.
5. திருநாவுக்கரசர், **தேவாரம்,** (தலமுறை) ப. 42.
6. ௸, ப. 43.
7. **சீர்காழித் தலவரலாறு,** ப. 53.
8. ௸, ப. 49.
9. ௸, ப. 49.
10. ௸, ப. 54.
11. திருஞானசம்பந்தர், **தேவாரம்,** (தலமுறை) ப. 36.
12. 'சீர்காழித் தலவரலாறு', நூலின் அடிப்படையில் "சட்டைநாதர் கோயில் கல்வெட்டுகள் காட்டும் வரலாறு" என்ற பகுதி அமைந்துள்ளது.

## அ. கோயிலும் பூசை செய்வோரும்

சமுதாயத்தில் பூசை செய்வதற்கென்று ஒரு தனி இனம் உண்டு. மேல் மட்டத்தைச் சார்ந்தோரும் அடித்தளத்திலுள்ளோரும் பூசையினத்தில் இடம் பெற்றுள்ளனர். இவர்கள் செய்யுந் தொழிலால் ஒன்றுபட்டவர்கள். இறைவனுக்கும், இவர்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதாக மதிக்கப்பட்டதே இவ்வினம் தோன்றுவதற்குக் காரணமாயிற்று. ஆதிகாலத்தில் தெய்வத்தை நெருங்கவே அஞ்சிய சமுதாயத்தில் இவர்கள் துணிந்து தெய்வச் சடங்குகளை மேற்கொண்டனர். எனவே தெய்வத்தை ஒப்ப இவர்கள் மதிக்கப்படலாயினர். இக்கருத்தைக் கா. சுப்பிரமணிய பிள்ளை விளக்கியுள்ளது வருமாறு.[1]

> பலியிடுதல் முதலிய கிரியைகளில் பயிற்சி பெற்றவர்கள் பொது மக்களால் மதிக்கப்பட்டனர். இதனால் ஏற்பட்ட கௌரவத்தை இழக்க விரும்பாமையே குருக்கள் இனம் தோன்றக் காரணமாயின. இவர்கள் தெய்வச் சடங்குகளை விரிவுபடுத்தினர். இதன்பின்னர்த் தங்களிடத்திலே தெய்வம் தோன்றி வெளிப்படுவதாகவும் தாங்களே நம்பி அற்புதச் செயல்களைச் செய்ய முற்பட்டனர்.

எனக் குருக்கள் இனத்தின் தோற்றம் வளர்ச்சி குறித்து விளக்கியுள்ளார். இவர்கள் தெய்வக் குற்றம் ஏதேனும் ஏற்படின் அதற்குப் பரிகாரமும் செய்து குற்றத்தை நீக்குவதற்கான வழிமுறைகளையும் விரிவுபடுத்தினர். இதனால் சமுதாயத்திற்கு இவர்களின் தேவை இன்றியமையாததாயிற்று. சைவக் கோயிலின் பூசாரி "சிவாச்சாரியார்" என்றும், வைணவக் கோயிலின் பூசாரி "பட்டாச்சாரியார்" என்றும் அழைக்கப்படுவர். இப்பொழுது ஆலயங்களில்

குருக்களாய் உள்ள ஆதி சைவ மரபினர் தமிழ் அந்தணரே ஆவார். இவர்கள் சிவன் முகத்து அருள் பெற்ற அந்தணர் எனவும், அயன் முகத்து உதித்த அந்தணர் எனவும் கருதப் படுவதுடன், பின்னையோர் கோயிற் பூசனைக்குரியவரல்லர் என்று ஆகமம் விதிக்கிறது[2]

**சிவாச்சாரியார் – பட்டாச்சாரியார்**

சீர்காழி வட்ட சைவ, வைணவக் கோயில்களில் தலைமைக் குருக்கள்களும், அவரின் கீழ்த் துணைமைக் குருக்கள்களும் உண்டு.[3] ஆகமமுறைப்படி அனைத்துங் கற்றுத் துறை தேர்ந்தவர்கள். திருக்கோலக்கா கோயில் குருக்கள் வேத மந்திரங்களைக் கூறி வழிபடுவதோடு அல்லாமல் தேவார திருவாசகப் பாடல்களையும் பாடி வழிபாடு செய்குவர். இறைத் தொண்டில் தூய்மையுடைய கிழோர்கூடப் பார்ப்பனரே என்பது இவர் போன்றோரின் கருத்தாகும். கோயில் குடமுழுக்குச் செய்தல், யாகம் வளர்த்தல், இல்லச் சடங்குகளைச் செய்வித்தல் போன்ற நிகழ்ச்சிகளிலும் இவர்கள் பங்கு கொள்கின்றனர். இவர்களின் சொற்பொழிவுகள், தத்துவத்தை விளக்குவதைவிட தத்துவத்தை, நடைமுறை மெய்ம்மைகளோடு இணைத்து விளக்குவதாக அமைந்துள்ளன. இவர்களுக்கும் மற்ற அந்தணப் பிரிவினர்க்கும் வேறுபாடு உண்டு. குருக்கள் இனத்தோடு மற்ற அந்தணப் பிரிவினர் கொள்வினை, கொடுப்பினை, வைத்துக் கொள்வதில்லை. இவர்களில் சிலர் திருநீறு போடுதல், தாயத்துக் கட்டுதல், மந்திரித்தல் போன்ற செயல்களை மேற்கொண்டுள்ளனர்.

**பூசாரிகள்**

சிறு தெய்வங்களுக்குப் பூசை செய்வோரைப் "பூசாரிகள்" என்றழைப்பர். சிறு தெய்வத்திற்குப் பூசை செய்யும் குருக்களும் உண்டு. இவர்கள் ஆகமமுறைப்படி பூசை செய்வர்.

விழாக்களில் முக்கிய பங்கு கொள்வது, கரகம் எடுப்பது, காவடி எடுப்பது, தீ மிதிப்பது, காப்புக் கட்டுவது, பலி கொடுப்பது போன்ற செயல்களைப் பூசாரிகள் மேற்கொள்வர். குருக்களுக்கும் மக்களுக்கும் உள்ள தொடர்பை விட, பூசாரிகளுக்கும் மக்களுக்கும் உள்ள தொடர்பில் நெருக்கம் மிகுதியுண்டு. வேத மந்திரங்களால் பூசை செய்தால் மட்டும் போதும், நன்மை இறைவனால் நமக்குக் கொடுக்கப்படும் என்ற நிலையைவிட, இறைவன் பூசாரியின் மேல் தோன்றி நேரில் வரங்கொடுக்கும் நிலையே பெரிதாக மதிக்கப்படுகிறது. பூசாரிகள் வெறும் பூசையை மட்டும் மேற்கொள்வதில்லை. இவர்களே மந்திரவாதிகளாகவும் செயல்படுகின்றனர். இவர்களை இரு வகையினராகப் பிரிக்கலாம்.

1. மந்திரங்களை நல்வழியில் மட்டும் பயன் படுத்துவோர்.
2. மந்திரங்களை நல்வழியிலும் தீயவழியிலும் பயன் படுத்துவோர்.

"திருநீறு போடுதல்", "வேப்பிலையடித்தல்", "தாயத்து அணிவித்தல்", "மையிட்டுப் பார்த்தல்", "நீர் மந்திரித்துத் தருதல்", "குறி கேட்டல்" போன்ற செயல்களை மேற்கொள்வோரை முதல் வகையில் அடக்கலாம்.

இரண்டாம் வகையைச் சார்ந்தவர்கள் தீயவழியில் மந்திரத்தை ஈடுபடுத்துவோராவார். சூன்யம் வைத்தலும் அதனை எடுத்தலும், துர்தேவதையை ஏவி ஒருவனை ஆக்கலும் அழித்தலும் இவர்களின் செயல்களாகும். களவு போன பொருளைக் கண்டுபிடித்தல் இவர்களின் பொழுது போக்கு. வேண்டாதவர்களை வேரறுக்க விழைவது இவர்களின் இயல்பு.

முதல்வகையைச் சேர்ந்தோர், கணபதி, முருகன், ஆஞ்சநேயர், காளி போன்ற தெய்வங்களை மந்திரத்தால்

கட்டுப்படுத்தி ஏவல் கொள்வர். தீய ஆவிகளின் ஆளுகைக் குட்பட்டவர்களுக்குத் திருநீறு போடும்போது மந்திரச் சொற்களின் கூடவே வேறு சில சொற்களும் இடம் பெறும். இச்சொற்களைக் கேட்போர் அப்பொழுதே பாதி நலத்தைப் பெறுவர் என்ற நம்பிக்கை இருக்கிறது. இத்தகு மந்திரச் சொற்களில் சில பின்வருமாறு:[4]

> உச்சிப்பேயே உருமப் பேயே முண்டிப் பேயே முக்கிறைப் பேய்களும் வள்ளியிடும் வள்ளியிடும். கொறளி மந்திரம் அண்டங்கட்டி, ஆகாசகட்டி ஆணைமேல் போறவனே, ஆவாடா கட்டி நம்மைப் பார்த்தவனே. கண்ணைக் கட்டித் திருட்டுப் பேய்களை வள்ளியிடும் வள்ளியிடும்...

இது போன்ற சொற்களை மூல மந்திரத்துடன் சேர்த்து உச்சரிப்பது வழக்கமாகும். இரண்டாவது வகையைச் சேர்ந்தவரில் பலர் தீய ஆவிகளையே ஏவல் தெய்வமாகக் கொள்வர். இறைவன விதித்த காலக்கெடுவுக்குள் தம்மை மாய்த்துக்கொண்டு ஆவியாகத் திரியும் சில துர்தேவதை களுக்குப் பலி கொடுத்தும், மாமிச உணவு, சாராயம், சுருட்டு முதலியன படைத்தும் ஏவல் கொள்வர். வீரபத்திர காளி, முனீசுவரன், காட்டேரி முதலிய தெய்வங்களையும் மந்திர வலிமையால் கட்டுப்படுத்தி ஏவல் கொள்வர்.

இவர்களின் மந்திர வகைகளில் ''சீட்டு எழுதிக் கட்டுதல்'' என்பது ஒரு வகை. பொருள் களவுபோயின் அதனைத் துண்டுச்சிட்டில் குறிப்பிட்டுத் மந்திரங்களை எழுதி, கரி முதலியன பூசி தேவதையின் மடியில் கட்டி விடுவர். குறிப்பிட்ட சில நாட்களில் குற்றமிழைத்தோர் கடுமையான உடல்நலக் குறைவுக் குட்பட்டுத் தாமே குற்றத்தை ஒப்புக்கொள்வர். அல்லது களவு பொருளைத் தம்மை வெளிப்படுத்தாது தந்துவிடுவர். அல்லது இவர்தாம் களவாடினர் என்பதை மந்திரம் காட்டிக் கொடுத்துவிடும். என்று நம்பப்படுகிறது. இதுவல்லாமல் எலுமிச்சம்பழம்,

முட்டை இவற்றை மந்திரித்து ஐயப்படும் மனிதர்களைத் தொட்டுக் கொடுக்கச் செய்தும் களவினைக் கண்டுபிடிப்பர். மை தடவிப் பார்த்து எவர் களவு செய்தார் என்பதை அறியும் முறையும் உண்டு.

"பாவை செய்வது" என்பது ஒருமுறை. மாவால் பாவை உருவாக்கப்படும். மனத்தைத் துணுக்குறச் செய்யும் வண்ணம் உருவஞ் செய்து, இடுகாட்டிற்கு எடுத்துச் சென்று அதற்குப் பலி கொடுத்துப் புதைத்து விடுவர். ஒருவனைக் கெடுக்க நினைத்துத் தகடு எழுதி மந்திரித்து அவன் இல்லத்தில் வைத்துவிடின், அக்குடும்பத்தைக் கேடு சூழும். உயிர் வாங்குவதை "மாரக வேலை" என்பர். மந்திரச் சொற்களை மாறி அமைப்பின் அது மரணத்தை உண்டு பண்ணும். சரியாக அமைத்தால் உயிர்ப்பிக்கும். மாரக வேலையில் "மாடன் தியானம்" சிறந்ததாகக் கருதப்படுகிறது. சக்கரங்களை அமைத்து மந்திரங்களை உச்சரித்து, பலிகள் கொடுக்கக் குறிப்பிட்டவர் இரத்தம் ரத்தமாகக் கக்கி உயிர் விடுவர். இத்தகு மந்திரங்களில் சில பின்வருமாறு:[5]

> சாட்சாதிபதியே, மலையாள கருப்பே, துஷ்ட கருப்பே, துடிக் கருப்பே உன்னுடைய ரூபம் கொண்டு வா வா வா. என்னோடு எதிர்த்தவன் மாரை பிள பிள பிளந்து வைப்பு, பில்லி, சூனியத்தைத் தரி தரி தரித்து பூத பிசாசுகளை நெஞ்சை முரி முரி முரித்து கொண்டோடி வா வா வா; கட்டு கட்டு கட்டு, பூட்டு பூட்டு, முட்டு, முட்டு வாயினால் உதிரம் விழுங்கு உகுத்து இன்னான் மகன் இன்னானை மோது மோது, தாக்கு, தாக்கு, தூக்கு தூக்கு, உன் பாசத்தினாலே கட்டு கட்டு.....

இவ்வாறு ஏவப்படும் தேவதைகளைச் செயல் முடிந்ததும் திசை திருப்பிவிட வேண்டும். இல்லையெனில் ஏவிய மந்திரவாதியையே பலி கொள்ளும் என்று நம்புவர்.

இத்தகு பூசாரிகளின் முடிவு இரங்குவதற்குரியதாக முடிகிறது. இவர்களின் ஏவல் தேவதையே இவர்களைப் பலி கொள்கிறது. வாரிசு இன்றி இவர்கள் குடும்பம் அழிவதைக் கண்கூடாகப் பார்க்க முடிகிறது. என்று நம்பிக் கூறுவோர் உள்ளனர் மந்திரங்களை நல்வழியில் பயன்படுத்தி நற்செயல் புரியும் பூசாரிகளை மக்கள் தெய்வமாக வணங்கி வருகின்றனர்.

## ஆ. கோயிலும் பாடகர்களும்

சிவாலயங்களில் பாடுவோரை ஓதுவா மூர்த்திகள் என்றும், வைணவாலயங்களில் பாடுவோரை தீர்த்தக் காரர்கள் என்றும், சிறுதெய்வக் கோயில்களில் பாடு வோரைப் பாடற் பூசாரி அல்லது பாகவதர் என்றும் அழைப்பர்.

**ஓதுவார்களும் தீர்த்தக்காரர்களும்:**

பன்னிரு திருமுறையும், நாலாயிர திவ்ய பிரபந்தமும் ஓதுவார்களாலும், தீர்த்தக்காரர்களாலும் பாடப்பெறு கின்றன. இப்பாடல்களைப் பற்றித் திரு கா. சுப்பிரமணியப் பிள்ளை கூறுவது வருமாறு:[6]

> சிவாலயங்களில் திருவருட்பாக்கள் நல்லமுறையில் பயிற்றப் படுவதில்லை. வைணவ ஆலயங்களில் அது மதிப்படைந்தாலும் எல்லா மக்களாலும் செவ்விய முறையிற் பாடப்பெறாமல் ஓரினத்தாரால் வடமொழி வேதம் போலப் பிறர்க்கு விளங்கா முறையில் பாடப் படுகின்றன.

கோயில்களில் வழிபாடு முடிந்ததும் இப்பாடல்கள் பாடப் படுகின்றன. இறைவனைப் போற்ற வேண்டும் என்பதை விட, இக்கோயில் பழமை சிறப்பு மிக்கது என்ற கருத்தை

வலியுறுத்தவேண்டும் என்பது போல இப்பாடல்கள் பாடப் பெறுகின்றன. சிதம்பரத்திலும், தருமபுரத்திலும் பன்னிரு திருமுறைகளைக் கற்பிக்கப் பள்ளிகள் உள்ளன. ஐந்தாண்டு படிப்பிற்குப் பின்னர்ச் சான்றிதழ் அளிக்கப்படுகிறது. ஓதுவார்களில் பெரும்பான்மையினர் தேசிகரினத்தைச் சேர்ந்தவர்கள். தீர்த்தர்க்காரர்களும் ஓதுவார்களும் மரபு வழியாக இப்பாடல்களைப் பாடி வருகின்றனர்.

ஆழ்வார்களும், நாயன்மார்களும் இறைவனோடு கலந்து உய்ய வழி வகுத்த இப்பாடல்களின் பெருமை அறியாது வெறும் அலங்காரப் பாடல்களாக இவை கருதப்படுகின்றன. கோயில்கள் உருவாகவும், சமயம் மறுமலர்ச்சிப் பெறவும், கோயில்கள் பெருமையடையவும், காரணமாக இருந்தவை இப்பாடல்களே. இப்பாடல் களைப் பேணாத நிலையில் சமய, மனித உணர்வின் இடைவெளி பெருகி வருகிறது. மரபாகப் போற்றி இசைக்கப்பட்டு வந்த இப்பாடல்களை இப்பொழுது பேணுவாரில்லை. இம்மரபில் வந்த ஓதுவார்கள் தீர்த்தக் காரர்கள் தம் வாரிசுகளை உருவாக்க விரும்பவில்லை என்பதைப் பேட்டியின் மூலம் அறியமுடிகிறது. நலிந்து வரும் இவ்வினத்தாரை உயர்த்தினாலொழிய இப்பாடல் களைப் பாதுகாக்க முடியாது. பேட்டியினால் பெறப்பட்ட கருத்துக்களின் அடிப்படையில், சில வழிமுறைகளைக் கையாண்டால் இப்பாடல்கள் மறுமலர்ச்சியடைய இயலும். அவை வருமாறு:

1. பாடல்களைப்பாடுவது வெறும் சடங்குகளாக மதிக்கப்படும் நிலையை முதலில் மாற்ற வேண்டும்.

2. பாடல்களில் உள்ள, வாழ்விற்குரிய, கருத்துக்களை மக்களிடம் விரிவாகப் பரப்புதல் வேண்டும்.

3. வழிபாடும், பாடல்களும் பிரித்தறிய முடியாத பிணைப்பு நிலையைப் பெற்றதால்தான், சிறு தெய்வ வழிபாட்டுப் பாடல்கள், செவி வழியாகக் கற்பிக்கப்பட்டு வந்தாலும் இன்றளவும் சிரஞ்சீவீத் தன்மை பெற்றுள்ளன. எனவே வழிபாட்டில் திருமுறைப் பாடல்கள் முக்கியத்துவம் பெற வழி செய்தல் நல்லது.

4. 'திருவாசகத்திற்கு உருகார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்று திருவாசகத்தின் பெருமை பேசப்படுகிறது. இத்தகு இனிமையான பாடல்களை வெறுமனே பாடாது இசைக் கருவிகளுடன் கவர்ச்சிகரமான முறையில் பாடிப் பரவச நிலையை ஏற்படுத்தவேண்டும். சான்றாக நாங்கூர் கருட சேவையின்போது தசாவதாரக் குழுவினர் பல்வேறு வேடங்களைப் பூண்டும், அடியும், பாடியும், இசைத்தும் பிரபந்தப் பாடல்களைப் பரப்புவது நோக்கற்பாலது.

5. கிருத்துவ மதத்தார் 'பைபிளை' உலகெங்கும் பரப்புவது போலத் திருமுறைகள் பிரபந்தங்களை மக்களிடையே பரப்பு வழி செய்தல் வேண்டும்.

6. இப்பாடல்களைப் பரம்பரையாகப் பேணிவரும் இனத்தார் வாழ்க்கை வளம்பெற அரசு ஆவன செய்தல் நல்லது.

7. ஓதுவார்தான் இப்பாடல்களைப் பாடவேண்டும், என்ற நிலைமாறி, அனைத்து மக்களும் பாடி வழிபடும் நிலையைத்தோற்றுவித்தல் வேண்டும்.

8. வேதங்களை ஓதுவதின் மூலம் இறைவன் அருள் எவ்வாறு பெற முடிகிறதோ அவ்வாறே இப்

பாடல்களைப் பாடுவதின் மூலம் பெறலாம் என்ற நம்பிக்கையை மக்கள் உணருமாறு செய்தல் அவசியமானது.

இத்தகு வழிமுறைகளைக் கையாளுவதின் மூலம் இப்பாடல் களைப் பாதுகாத்துப் பரப்ப வழி ஏற்படும் எனலாம்.

**பாடற் பூசாரிகள்:**

பாடற் பூசாரிகள் சமுதாயத்தில் பெரும் மதிப்புடைய வர்கள். வாய்மொழி வடிவப் பாடல்களைப் பரம்பரை யாகப் பாடி வருபவர். இறைவனருள் பெற்ற இவர்கள் வழிபாட்டில் ஒன்றிக் கலந்து விடுவதால் சமுதாயத்தில் பெரும் மதிப்புடையவர்களாகின்றனர்.

உடுக்கை அடித்துப் பாடிய அளவிலேயே அவருக்கு மட்டுமின்றிப் பொதுமக்கள் பலருக்கும் இறை சக்தியை ஏற்றி ஆவேசத்தை வரச் செய்வதால் இவர்களை இறைவனின் வழித்தோன்றல் எனச் சமுதாயம் நம்புகிறது. பூசாரி வேறு, பாடற் பூசாரி வேறு (சில இடங்களில் இருவரும் ஒருவராக இருத்தல் உண்டு). பூசாரியை இறைவனாக வழிபடும் நிலையில், பாடற் பூசாரி பூசாரியாக எண்ணப்படுவர். சான்றாகக் கரகம் எடுத்துவரும்போது, பூசாரிக்கு ஆவேசத்தை உண்டு பண்ணி, கரகம் சுமக்கச் செய்வது பாடற் பூசாரி ஆவார். கரகம் சுமந்த நிலையில் பூசாரி இறைவனாகக் கருதப்படுவார். இவரை வழிநடத்திச் சென்று சடங்குகளைச் செய்பவர் பாடற் பூசாரி ஆவர்.

உருத்திராபதியார் வழிபாட்டில், பூசாரி பைரவர் வேடம் பூண்ட நிலையில் சிவனாகக் கருதப்படுவார். பைரவரை நீர்த்துறையிலிருந்து அழைத்து வருவதும் பிள்ளைக்கறி படைப்பதும், தர்க்கம் செய்வதுமான பல செயல்களைப் பாடற்பூசாரி மேற்கொள்ளும்போது அங்குச் சிறுத்தொண்டராகவே மாறி விடுகிறார். இவ்வாறாக

விழாவின் ஒவ்வொரு கூறுகளையும் நடத்திச் செல்பவராக இவர்கள் இருப்பர்.[7]

பலர் இதற்காக ஊதியம் பெறுவதில்லை. ஒருவரே காமன் வழிபாட்டிலும், உருத்திராபதியார் வழிபாட்டிலும், மாரியம்மன் வழிபாட்டிலும் பங்கு கொள்கிறார். இவர் களுக்குத் தெய்வ வேறுபாடு கிடையாது. காத்தவராயன் கதை கூறுவதும், பாரதக் கதை கூறுவதும், படுகள விழாவைச் செய்வதும் இவர்களே.

இவர்கள் பாடும் பாடல்கள் சிரஞ்சீவித் தன்மையைப் பெற்றதற்குக் காரணங்கள் பல. அவற்றில் சில வருமாறு: மக்கள் விரும்பிய புராணத்தை அடிப்படையாகக் கொண்டது. மக்களுக்குப் புரிந்த மொழியில் உணர்ச்சியை ஊட்டக்கூடியது. கவர்ச்சிகரமான முறையில் பாடப்படுவது. எல்லாவற்றிற்கும் மேலாக, இவர்கள் மூலம், இப்பாடல்கள் மூலம் இறைவன் அருளைப் பெறமுடியும் என்ற நம்பிக்கையைத் தருவது, போல்வனவற்றைக் காரணங் களாகக் கூறமுடியும். சமுதாயத்தில் இவர்களுக்கு இருக்கும் நன்மதிப்பே இவ்வினம் வளர வழிகோலி விடுகிறது. வழி பாட்டையும் இவர்களையும் பிரித்தறிய முடியாத நிலையில், வழிபாடு உள்ளளவும் இவர்கள் இருப்பர் இவ்வினம் வாழும் என்ற முடிவுக்கு வரலாம்.

## இ. கோயிலும் மக்களும்

கோயிலோடு தொடர்புடையவர்கள் என்ற வரிசையில் பாமர மக்கள் முக்கிய இடம் வகிக்கின்றனர். பல தெய்வ வழிபாட்டிற்குக் காரணமும். காரணமானவர்களும் இவர்களே என்ற வகையில் முக்கியத்துவம் பெறுகின்றனர். முழுமுதற்கடவுள், சமயப்பற்று போன்ற இடர்ப்பாடுகளில் இவர்கள் சிக்குறுவதில்லை. அச்சத்தைத் தவிர்க்கும் சக்தி எதுவோ அதுவே இவர்களுக்கு இறைவனாகும். எந்த மத,

எந்த சமயக் கடவுளாயினும் அது பற்றி இடர் கொள்ளாது வழிபட முயல்கின்றனர்.

முதலில் மக்கள் இறந்த தாய் தந்தையரைத் தொழத் தொடங்கி, அவர்களை அடக்கம் செய்த இடத்தில் கல்லை நாட்டி வழிபட்டனர். அக்கல்லின்கண் முன்னோர்கள் உயிரோடிருந்து தங்கள் வணக்கத்தை மகிழ்ச்சியுடன் ஏற்றுத் தங்களுக்கு நலன் தருவதாக நம்பி வழிப்பட்டனர். நாளடைவில் கிடைத்த நன்மைக்கு ஏற்றவாறு வழிபாடு பெருகிவந்தது. இவ்வழிப்பாட்டில் நற்பலன் கிடைக்கவே அக்குலத்தார் மட்டுமின்றி வேறு பலரும் வழிபடத் தொடங்கினர்.[8] இவ்வாறாகச் சக்தி மிகுந்த தெய்வங்கள் ஒவ்வொன்றையும் வழிபடத் தொடங்கி இறுதியில் எல்லாத் தெய்வங்களையும் இணைத்து வழிபடத் தொடங்கினர்.

இவர்கள் பல தெய்வ வணக்கத்தை மேற்கொண்டாலும் உண்மையில் பல தெய்வங்களில் ஒரு தெய்வத்தைக் கண்டனர். கிருத்துவர், இசுலாமியர் போன்றோர் ஒரு இறைவனைக் கண்டு வழிபட்டனர். ஆனால் பாமர மக்கள் பல இறை வடிவங்களில் ஒரு இறைவனைக் காண முற்பட்டனர். அதில் வெற்றியும் பெற்றனர். எந்தத் தெய்வத்தைக் கண்ணுற்றாலும் அதில் தன் குல தெய்வம் தோன்றும் நிலையைக் கண்டனர்.

"யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி
யாங்கே மாதொரு பாகனார் தாம்வருவர்"

என்ற கருத்து பாமர மக்களுக்கு முற்றிலும் பொருந்திய ஒன்றாகும்.

பாமர மக்களின் வழிபாட்டுக் கடவுளரை நான்கு வகையாகப் பிரிக்கலாம்.

1. குல தெய்வத்தை வழிபடுதல்.
2. ஆற்றல்மிக்க தெய்வத்தை வழிபடுதல்.

3. பரபரப்பான சமயப் போட்டிகள் மிகுந்த காலத்தில் அவ்வவ் வடியார்களால் ஈர்க்கப்பட்டு அச்சமயத் தெய்வத்தை வழிபடுதல்.

4. தொன்மையான புராணக் கடவுளரை வழிபடுதல்.

இந்த நான்கையும் ஒன்றாக்கி வழிபடுதலில் பாமர மக்கள் வல்லவர்கள். குல தெய்வமானது வழிவழி மரபாக வணங்கப்படுவது. இது ஓரினத்தின் முழுமைக்குமான தெய்வமாகும். வீரமரணம் அடைந்தோர் தன் குலங்காக்கப் போராடி மாண்டவர்கள், முனிவர்கள், சக்தி மிகுந்த ஆடவர் மகளிர் கல்லறைகள் முதலியன இவ்வழிப்பாட்டிலடங்கும். ஆற்றல் மிக்க தெய்வங்களாவது, மக்களின் குறைகளை யெல்லாம் நீக்கும் என்ற நம்பிக்கைக்குப் பாத்திரமான அனைத்துத் தெய்வங்களும் ஆகும். நாகூர் ஆண்டவர், வேளாங்கண்ணிமாதா போன்ற பிறமதக் கடவுளரானாலும், அவர்களின் அருள் நோக்கி வழிபடுதல். இரண்டாம் வகையைச் சாரும். சைவ, வைணவ ஆதிக்கத்தின் காரணமாக ஈர்க்கப்பட்டு அத்தெய்வங்களையும் வழிபடுதல் மூன்றாம் வகையாகும். புராண இதிகாசத் தெய்வங்களின் கீர்த்தியால் ஈர்க்கப்பட்டு வழிபடும் நிலை நான்காவதாகக் கொள்ளலாம். இந்நான்கையும் தன் குலதெய்வ வணக்கத் தோடு இணைத்தவர்கள் பாமரமக்கள். இதனைப் பின்வரும் சான்றுகள் மூலம் நிறுவ இயலும்.

**சான்று-1:**

பாமர மக்களிடம் காணப்படும் வழிபாட்டுப் பாடல் களை ஆராயும் போது, இந்த இணைந்த வழிபாட்டு நிலைப் புலனாகும். பிற மத ஆற்றல் மிக்க வணக்கத்திற்குக் காட்டாக 'முத்தாளய்யா' வழிபாட்டைக் கூறலாம். இவரே நாகூர் முத்தையா என அழைக்கப்படும் நாகூர் ஆண்டவராவார் என்பதை வழிபாட்டுப் பாடல்கள் கூறும்.

இத் தெய்வத்தின் அருள் காரணமாக மக்கள் இவரை வழிபடத் தொடங்கினர்.

நாவூர் முத்தையா
நல்லதொரு பட்டாணி

என இவ்வழிபாட்டுப் பாடல் தொடங்குகிறது. இப் பாடலில் இத் தெய்வத்தைப் பற்றிய வருணனையும் அருளும் கூறப்பட்டு, இறுதியில் இந்துமதப் புராணக் கதையோடு இணைக்கப்பட்டுள்ளது.

பஞ்சவர்கள் தேவி
பாஞ்சாலி துரோபதி
துரோபதியாள் வாசலுக்குத்
துலங்குகின்ற பட்டாணி[9]

என்று முத்தாளய்யா துரௌபதி வணக்கத்தோடு சேர்த்து வழிபடப்படுகிறார். இப்பாடலின் முற்பகுதி இசுலாமியக் கடவுளைப் பற்றியும், பிற்பகுதி இந்துமதக் கடவுளைப் பற்றியும் கூறுகிறது. எனவே ஆற்றல்மிக்க தெய்வமான நாகூர் ஆண்டவரைப் பிற மதக் கடவுளாக எண்ணாமல், அவ்விறைவனை ஊடுருவி அங்கு இந்துமதக் கடவுளைக் கண்டு வழிபட்டனர். இது; மேல் பாகுபடுத்திய தெய்வ நிலையில் இரண்டையும் நான்கையும் இணைத்து வழிபட்ட நிலையை வெளிப்படுத்தும்.

**சான்று–2;**

சைவ, வைணவ மறுமலர்ச்சி காரணமாக அரியையும், அயனையும் தன் குலதெய்வத்தோடு சேர்த்து வழிபட்டனர். இச்சமயங்கள் ஓங்கிய காலத்தில், தன் குல தெய்வத்திற்குப் புகழ் சேர்க்க வேண்டும் என்று எண்ணியோ, அல்லது இக்கடவுளரின் சக்தியால் ஈர்க்கப்பட்டோ அத்தெய்வங் களைத் தன் குலதெய்வத்தோடு சேர்த்து விட்டனர். "பதினெட்டாம் படியார் பாட்டில்" சிவனுக்கும்,

விட்ணுவுக்கும் மகனாய்ப் பிறந்தவர் பதினெட்டாம் படியார் என்று கூறப்பட்டுள்ளது.[10]

வேடியப்பனைக் குலதெய்வமாகக் கொண்டவர்கள் பாடும் பாடல் ஒன்றினை ஈண்டு எடுத்துக் காட்டலாம்.[11]

நாராயணா, நரசிம்ம அவதாரா
அரிக்கும் சிவனுக்கும் உற்பத்தியாய்ப் பிறந்த
அரிமால் புத்திரா! ஐயனாரப்பா!
வேட்டுவ தலைவா வேடியப்பா

என்ற இந்தப் பாடலில் வேடியப்பன் நாராயணனாகவும், நரசிம்ம அவதாரமாகவும், சிவனுக்கும், திருமாலுக்கும் பிறந்த ஐயப்பனாகவும், எண்ணி வழிப்படப்படுகிறார். இவ்வாறாக வேடியப்பனை உயர்த்த வேண்டும் என்ற எண்ணங் கொண்டோ அல்லது அக் காலத்தில் மிகப் புகழ்பெற்ற தெய்வங்களான சிவனையும், திருமாலையும் தன் குல தெய்வத்தில் கண்டு வணங்கியதாலோதான் இப்பாடல் பிறந்திருக்க வேண்டும். இது மேல் பாகுபடுத்திய கடவுள் நிலையில் ஒன்றையும், மூன்றையும் இணைத்து வழிபட்ட நிலையை வெளிப்படுத்தும்.

**சான்று-3:**

ஒவ்வொரு சிறு தெய்வத்திற்கும் பல துணைத் தெய்வங்கள் உண்டு. அங்காளம்மன் ஆலயத்தில் இருபத்தியோரு துணைத் தெய்வங்களுக்கு உருவம் சமைக்கப் பட்டுள்ளது. அங்காளம்மனைக் குல தெய்வமாகக் கொண்டவர்கள், தமக்கு அருள் புரியும், மனம் விரும்பிய (இட்ட தெய்வம்) தெய்வங்களை எல்லாம் இணைத்து ஓரிடத்தில் வணங்கி வழிபட்டதாகத் தெரிகிறது.

**சான்று-4:**

பல தெய்வங்களில் ஒரு தெய்வத்தை எண்ணி வழிபடும் நிலைக்குப் 'பத்திர காளியம்மன்' பாடலைச் சான்றாகக்

கூறலாம்.[12] இப்பாடல் பத்திரகாளியம்மனுக்கு என்றிருந் தாலும் அதில் பல சக்தியின் வடிவங்களைக் கூறிப் போற்றப்பட்டுள்ளது.

தில்லை யம்மா காளியென்று
செகமெல்லா பேரெடுத்தா
நடராசங் கூட நடம்புரிந்து நின்ன சத்தி ...

என்று பத்திரகாளியின் உடுக்கைப் பாடல் தொடங்குகிறது. இருபத்தி மூன்று வரிகளையுடையது இப்பாடல். இப்பாடலில் வரும் ஒரு வரி

பத்திர காளிமுத்து பகவதையே மேனாட்டா

என்று காளியைப் போற்றுகிறது. 'காளிமுத்து' என்ற சொல்லில் 'முத்து' என்பது முத்து மாரியைக் குறித்து நிற்கும் சொல்லாகும். 'பகவதியே மேனாட்டா' என்பதில் "பகவதை" என்பது பகவதி அம்மனைக் குறிக்கும். மேனாடு- மலையாள நாடு. எனவே மலையாள நாட்டுப் பகவதி அம்மனை இவ்வரி குறித்து நிற்கிறது.

சூலம் கபாலம் கொண்டு சுடலை வனம் காத்தவளே
சுட்ட பிணம் தின்று சுடலை வனம் காவு கொண்டா
பச்ச பிணத்த பால்வடிய தின்ன சத்தி

என்ற வரிகள் இடுகாடு – பிணம் – போன்றவற்றைச் சுட்டி, காளி சுடலை வனம் காத்தல் முதலான நிகழ்ச்சிகளைக் கூறுகின்றன. இந்த தெய்வத்தைப் "பேச்சியம்மன்" என்றழைப்பர். பேய் = பேய்ச்சி. பேச்சியம்மனே சுடலையைக் காத்தல் முதலான செய்கைகளை மேற்கொண்டவள்.

பேய்ச்சி = "நச்சி வாயகி" என்றும் கூறுவர்.

வறத்திலே பெரியவளே வைகுண்ட காளிமுத்து

என்ற வரியில் வரும் வைகுண்ட காளிமுத்து, சமய நூல்கள் கூறும் நாராயணிகையாக இருக்கலாம்.

காளியென்றும் சூலியென்றும்
கபாலியென்றும் நீலியென்றும்

என்ற வரி சூலி–கபாலி–நீலி முதலிய சக்தி தெய்வங்களை வாழ்த்துகிறது. இப்பாடலில் "பகவதி" – "முத்துமாரி"– "பேய்ச்சி" – "நச்சி வாயகி" – "நாராயணிகை" – "சூலி"– "கபாலி" – "நீலி" ஆகிய பல்வேறு சக்தித் தெய்வங்களைப் பற்றிக் கூறப்பட்டுள்ளன. என்றாலும் இத்தெய்வங்களை ஊடுருவிப் பத்திரக்காளியம்மனைக் காணும் நுட்ப மனத்திறனைப் பெற்றிருந்தனர் மக்கள்.

இவ்வாறாகப் பாமர மக்கள் பல தெய்வத்தை வணங்கி வழிபட்டாலும் அவற்றில் தன் குலதெய்வத்தைக் கண்டு மகிழ்ந்தனர் என்ற கருத்திற்கு வர இச்சான்றுகள் துணை செய்கின்றன.

## ஈ. கோயிலும் சமுதாய மரபுகளும்

சமய உணர்வு என்பது உலகெங்கும் எக்காலத்தும் காணப்படுவதொன்று. சமய ஆதிக்கத்திற்குட்படாத சமுதாயம் இல்லை எனலாம். சமயப் போட்டிகளும் பொறாமைகளும், சச்சரவுகளும் வளர்ந்த காலத்திலும் கோயில்கள் சில சமுதாய மரபுகளைச் செவ்வனே வளர்த்து வந்தன. அரசியற் சட்டங்களை, ஒழுக்கச் சட்டங்களைக் கூட மீறி நடக்கலாம். ஆனால் இக் கோயிற் சட்டங்களை, மரபுகளை மீறி நடக்க இயலாது. அந்த அளவுக்கு, இம் மரபுகள் ஆழ வேரோடி, அகலப்பரவி நிலைத்து நிற்கின்றன. வழிவழியாகப் போற்றப்பட்டு வரும் இம் மரபுகளுக்குச் சமுதாயத்தின் ஒவ்வொரு மனிதனும் தலை வணங்கியே ஆக வேண்டிய கட்டாயம் உள்ளது. மக்கள் உள்ளுணர்வை மாற்றினாலேயொழிய, சட்டத்தாலோ, பிறவற்றாலோ இக்கொள்கைகளை மாற்றவோ, அழிக்கவோ இயலாதநிலை இன்றும் உள்ளது.

**நீதிமன்றமும் தண்டனையும்:**

"அரசன் அன்று கொல்வான். தெய்வம் நின்று கொல்லும்" என்னும் பழமொழியைச் சிறு தெய்வங்கள் தான் உறுதி செய்கின்றன. நல்லவர்களைக் காத்தலும், அல்லவர்களை ஒடுக்குதலும் இத் தெய்வங்களின் செயல் களாகும். இத் தேவதைகளின் கோயில்கள் சிறந்த நீதி மன்றங்களாகவும் விளங்குகின்றன.

> பெஞ்ச் கோர்ட் நீதிபதிகளைப் போன்று கிராம தேவதைகள் தன்னை நம்பினோரைக் காக்கிறார்கள் அவர்கள் எதிரிகளைக் கருவறுக்கிறார்கள்... அத் தெய்வங்கள் செய்யும் சாகசங்களை அறிந்து, அவற்றைப் பெஞ்ச் கோர்ட் நீதிபதிகள் என்றழைப்பதில் என்ன தவறு.

என்று சிறு தெய்வங்களைப் பற்றிக் கண்ணதாசன் கூறுவர்.[13]

இன்றுங்கூட ஊர்ப் பஞ்சாயத்துகளில் குற்றவாளி, தெய்வத்தின் மீது சத்தியம் செய்து தான் குற்றம் புரிய வில்லை என்று கூறின் அவனைத் தண்டியாது விடுதலை செய்வது வழக்கமாகும். உண்மையில் அவன் குற்றம் புரியவில்லையெனில் அவன் வாழ்வு சிறக்கும். குற்றத்தை மறைத்துச் சத்தியம் செய்வானாயின், அத்தெய்வம் அவன் குடும்பத்தையே கருவறுக்கும் என்று நம்புகின்றனர். இதற்கான செவிவழிச் சான்றுகள் பல உள்ளன. இத் தெய்வங்கள் நீதிபதியாக மட்டுமல்லாது சாட்சியாகவும் விளங்குகின்றன. நிரபராதிகள் தண்டனையடையும்போது, அவன் அத்தெய்வத்தைச் சாட்சிக்கு அழைக்கிறான். "நீ இருந்தால் கேள்" என்று கோயிலை நோக்கி மண்ணை வாரி இறைக்கிறான். அத்தெய்வம், அவன் எதிரிகளை மண்ணோடு மண்ணாக்குகிறது.

பால் எடுத்துக் குடித்துச் சத்தியம் செய்தல், ஏற்றிய சூடத்தைக் கையால் அடித்து அணைத்துச் சத்தியம்

செய்தல் போன்றவற்றை இன்றளவும் காணமுடிகிறது. ஊர்ப் பஞ்சாயத்து கூடும் இடமாகக் கோயில்கள் திகழ் கின்றன. ஊர்ப் பெரியோர்கள் அங்கு நீதிபதிகளாக இருந்தாலும் உண்மையில் அக்கோயில் தெய்வமே அங்கு நீதிபதியாக இருப்பதாக நம்புகின்றனர். இத்தெய்வங்கள் தன்னைக் குல தெய்வமாகக் கொண்ட குடும்பத்தை எஞ்ஞான்றும் துன்பத்துள்ளாக்குவதில்லை. பில்லி சூன்யம் போன்ற தீவினைகளிலிருந்து அவர்களைக் காப்பாற்று வதுடன், அதனைச் செய்தவர்களையும் காட்டிக் கொடுத்து விடுகிறது என்ற நம்பிக்கை நிலவுகிறது.

**முறைப்பாடு:**

முறை + பாடு > உறவு முறைப்படுதல் = உறவில் பிளவு ஏற்படல். ஒவ்வொரு இனத்தாரும் பல உறவினர்களைப் பெற்று ஒரு குழுவாக இயங்குகின்றனர். இவர்கள் அனை வருக்கும் குலதெய்வம் ஒன்றேயாகும். இவர்களுக்குள் பகை ஏற்பட்டு, குலதெய்வப் படையல் பொருள்களைப் பரிமாறிக் கொள்ளா விட்டாலோ அல்லது ஒருவர் செய்யும் குல தெய்வ வழிப்பாட்டில் கலந்து கொள்ளா விட்டாலோ "முறைப்பாடு" தோன்றுகிறது. "முறைப்பாடு" தோன்றின் அது மிகைப் பகையைக் குறிக்கும். இதன் பின்னர் அவர்களுக்குள் நல்வினை தீவினை எந்த நிகழ்ச்சிகள் நடந்தாலும் அவர்கள் கலந்து கொள்வதில்லை. "முறைப்பாடு" தெளியாது அவர்களுக்குள் உறவு கலந்தாலோ, உணவு உட்கொண்டாலோ தீவினைகள் சூழும் என்று நம்புகின்றனர்.

இதனை அடுத்து 'முறைப்பாடு தெளிதல்' என்ற நிகழ்ச்சி நடைபெறுகிறது. உறவில் பகை ஏற்பட்டவர்கள் அனைவரும் குல தெய்வக் கோயிலில் கூடுவர். வழிபாட்டுப் பொருளிலிருந்து நைவேத்தியம் வரை அனைத்திலும் பங்கீட்டு முறையில் அவரவர் பங்குக்குரிய பொருளைக்

கொடுத்து வழிபடுவர். வழிபாடு முடிந்து நைவேத்திய உணவை உண்டவுடன் முறைப்பாடு தெளிவடைகிறது. அதன் பின்னரே உறவு வலுப்படும் என்ற நம்பிக்கை மரபாகப் போற்றப்படுகிறது.

உறவை வலுப்படுத்தும் ஒரு கருவியாக இத் தெய்வங்கள் விளங்குகின்றன. குல தெய்வ வழிபாடு பங்காளிகளை விலக்கி நடப்பதில்லை. அவ்வாறு நடை பெறின் கேடு சூழும் என நம்புகின்றனர். வழிபாட்டில் இடையூறு ஏற்படும். பலி கொடுக்கும்போது அது சரிவர நிறைவேறுவதில்லை. ஒரே வெட்டில் தலை துண்டிக்கப்படுவ தில்லை. வழிபாட்டில் தீபம் அணைந்து போதல், ஆவேசம் வாராமை முதலிய தீச்சகுணங்கள் தோன்றும். எனவே பங்காளி இல்லாமல் வழிபடும் மரபு போற்றப்படுவ தில்லை. பங்காளிக்குள் "முறைப்பாடு" தோன்றின் அது தீரும்வரை வழிபாடே நடைபெறுவதில்லை.

**நல்லனவற்றைத் தொடங்குதல்:**

நல்ல செயல்களைத் தொடங்குவதற்கு முன்னர் இறை வணக்கம் செய்வது மரபாகும். எந்தச் செயலானாலும் இறைவன் அனுமதி பெற்ற பின்னரே தொடங்கப்படுகிறது. 'நற்சொல் கேட்டல்' என்பது பற்றித் தொல்காப்பியர் கூறியுள்ளார்.[14] இதுபோல இறைவன் நல்மொழி கேட்க மக்கள் காத்திருப்பர். இதனை 'உத்திரவு கேட்டல்' என்று கூறுவர். இறை வணக்கம் முடிந்ததும் தன் கோரிக்கையை இறைவன் முன்னர்ச் சமர்ப்பித்து நிற்பர். அப்பொழுது பல்லி அல்லது கெளளி ஒலி எழுப்பின் உத்திரவு கிடைத்தது என்று மகிழ்வது வழக்கம்.

பூப்பொட்டலம் போட்டுப் பார்க்கும் முறையும் உண்டு. குங்குமம், திருநீறு, மலர் இவைகளில் ஏதேனும் இரண்டினைப் பொட்டலமாக மடித்து, இறைவன் முன்னர்க்

குலுக்கிப்போட்டு இரண்டில் ஒன்றை எடுக்கச் செய்வர். இரண்டில் எது வர வேண்டும் என்று நினைத்தார்களோ அதுவரின் இறைவன் அருள் கிடைத்தது என்று பொருளாகும். மாறாக வரின் எந்தச் செயலைத் தொடங்க இறைவனை அனுமதி கேட்டனரோ அச்செயலைத் தொடங்க மாட்டார்கள்.

மனிதனின் வாழ்வில் பிறப்பு முதல் இறப்பு வரை ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் இறைவணக்கம் முதலிடம் பெறுகிறது. குழந்தை பிறந்து பதினாறாம் நாள் தொடக்கம், கடவுள் வழிபாட்டோடு ஆரம்பமாகிறது. இறந்த பதினாறாம் நாள் இறுதிச் சடங்கிற்குப் பின்னர் இறை வணக்கத்தோடு அவன் வாழ்வு நிறைவு பெறுகிறது. திருமணத்திற்கு முன்னர் முதல் அழைப்பிதழைக் குல தெய்வத்திற்கு வைத்து வழிபட்ட பின்னரே மற்ற வேலைகளை மேற்கொள்வது இன்றும் வழக்கமாகும்.

''செய்யுந் தொழிலே தெய்வம்'' – என்ற பழமொழிக்கு இணங்க, எந்தத் தொழிலையும் தொடங்கு முன்னர் அதற்கு வழிபாடு செய்யப்படுகிறது. விவசாயிகள் சாகுபடியைத் தொடங்கும் முன்பாக நிலத்தை வழிபடுகின்றனர். அதே போல் அறுவடை முடிந்த பின்னர் அரிவாளை நெல்லின் மீது வைத்து வணங்கிய பின்பே மற்ற வேலைகளை மேற்கொள்வர். அறுவடையான நெல்லின் முதல் மரக்கால் நெல் கோயிலுக்காகக் கொடுக்கப்படும்.

**கோயில் புகுதல்**

மரங்களின் அடியில் இறைவனை வழிபட்ட காலத்தில் இறைவன் முன்னர் நிற்கத் தகாதவர்கள் இன்னார் என்று விதிக்க வாய்ப்பில்லாதிருந்தது. பிற்காலத்தில், கோயில்கள் அமைந்த பின்னர் ஒருசில இனத்தவர் கோயிலுட்

புகுதல் கூடாது என்ற விதி ஏற்பட்டது. கோயிலில் புகுகின்றவர்களுக்கும் இன்ன குலத்தார் இன்ன இடத்தில் நிற்கவேண்டும் என்ற விதி ஆரிய வருண வேறுபாடுகள் ஆகமத்துட் புகுந்த பின் ஏற்பட்டதாகும்.[15] தாழ்த்தப்பட்ட இனத்தினர் கோயிலுட் புகுதல் கூடாது என்றும், அந்தணர் அல்லாதவர் கருவறைக்குள் புகுதல் கூடாது என்றும் விதிகள் ஏற்பட்டன. தற்காலத்தில் சட்டத்தின் மூலம் இவ்விதி தளர்த்தப்பட்டுள்ளது. என்றாலும் கிராமப் புறங்களில் இம்மரபு இன்றளவும் கடைபிடிக்கப்படுகிறது.

**முதன்மையர்**

கோயில்களில் முதன்மையுடையவர்கள் இன்னார் என்பதைச் சமுதாயம் மரபு வழியாகக் கடைப்பிடித்து வருகிறது. இன்னார்தான் முதல் மண்டகப்படி செய்ய வேண்டும். இவர்தான் முதல் மரியாதைப் பெறவேண்டும். வழிபாட்டில் இந்தச் சடங்குகளை இவர்தான் செய்ய வேண்டும் என்ற வழக்கம் உண்டு. கோயில்களில் முதன்மை யாகக் கருதப்படுவோரில் சிலர் வருமாறு:

1. கோயில் உருவாவதற்குக் காரணமானவர்கள், இவர்களின் வாரிசுகள்.

2. வழிபாட்டுச் சடங்குகளை வழிவழியாக மேற்கொள்வோர். சான்றாகத் தீமிதி விழாவில் பம்பை அடித்துச் செல்லும் தாழ்த்தப்பட்டவர்தான் முதலில் தீ மிதிப்பர். சில இடங்களில் கோயிலுக்கு உரிமையானவர்கள் கையில் சூலம் ஏந்தி முதலில் செல்வர். சில இடங்களில் ஊர்முதியவர் முதலில் தீ மிதிப்பர்.

3. ஓதுவார்கள், தீர்த்தக்காரர்கள், அறங்காவலர்கள் இவர்களுக்கு முதன்மையிடம் தரப்படும். இது

போலப் பாடற் பூசாரிகள் அவ்வக் கோயிலில் முதலிடம் பெறுகின்றனர்.

4. கோயில் பொருளைப் பங்கிடுவதில் சிலருக்கு முதலிடம் கொடுக்கப்படுகிறது. சான்றாகப் பலி கொடுக்கப்படும் ஆட்டுக்கடாவின் தலையைச் சலவைத் தொழிலாளிக்குக் கொடுப்பது மரபாகும்.
5. அன்றன்றைய மண்டகப்படி செய்யும் இனத்தாருள் முதியவருக்கு முதல் மரியாதை செய்யப்படும்.

**சமயக் குறியீடுகள்:**

சைவ சமயத்தினர் திருநீற்றையும், வைணவச் சமயத்தினர் திருச்சுண்ணத்தையும் அணிகிறார்கள். சிறு தெய்வக் கோயில்களில் திருநீறும் குங்குமமும் அளிக்கப் படுகின்றன. காமனை எரித்த சாம்பலும், தீ மிதித்த கரியும் நெற்றியில் பூசிக் கொள்ளப்படும். சில கோயில்களில் மண்ணும் திருநீறாக எண்ணி நெற்றியில் இட்டுக் கொள்ளப்படும்.

இவ்வாறாகக் கோயில்கள் சில மரபுகளைச் சமுதாயத் திற்குக் கொடையாக்கியுள்ளன.

## உ. கோயிலும் சமுதாய உறவுநிலையும்

### கோயிலும் சமுதாய உறவுநிலையும்

கோயிலின் மீது சமுதாயமும், சமுதாயத்தின் மீது கோயிலும், ஒன்றின் மீது ஒன்று ஆதிக்கம் செலுத்தி வருகின்றன. இந்த ஆதிக்கத்தின் காரணமாகவும், தொடர்பு காரணமாகவும், சமுதாயம் மூன்று வகையான கோயில் அமைப்புகளை உருவாக்கியது.

அந்தணர் போலும் மேல்மட்டத்தைச் சார்ந்தோரால் வணங்கப்பட்டு, அவர்களுக்கு முதல் உரிமைகள் அளித்த கோயில்கள் முதல் வகையில் அடங்குவன.

முழுமுதற் கடவுளர் கோயில்களான சைவ, வைணவக் கோயில்களில் தமக்கு முழு உரிமையும் பெறமுடியாத நடுத்தரச் சமுதாய அமைப்பினர், தாங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்ட வேண்டித் தோற்றுவித்த சிறு தெய்வக் கோயில்கள் இரண்டாம் வகையில் அடங்குவன.

சைவ, வைணவ, சிறுதெய்வக் கோயில்களில் தங்களுக்கு உரிமையும், வழிபாடும் மறுக்கப்பட்டபோது, தாழ்த்தப் பட்டவர்கள் தாங்கள் வணங்குவதற்கு என்று கன்னிக் கோயில் போலும் கோயில்களை உருவாக்கினர். இது மூன்றாம் வகையில் அடங்கும்.

இக்கோயில்களுக்கு உரியவர்களின் உரிமைகளில், மற்ற அமைப்பினர் தலையிடும்போதுதான் சமுதாய இனப் பூசல்கள் தோன்றுகின்றன. சமுதாய ஒருமைப்பாட்டிற்கு உறுதுணை புரிவது கோயில் என்றாலும் சில இடங்களில் இன வேறுபாட்டைத் தோற்றுவிப்பதும் கோயிலேயாகும். (முதல் மரியாதையைப் பெறுவதிலும், முதல் மண்டகப் படியைச் செய்வதிலும் இவ்வேறுபாடுகள் தோன்றுகின்றன.)

**உறவுநிலையை வெளிப்படுத்தும் சில காரணிகள்:**

கோயிலோடு தமக்குரிய நெருக்கமான தொடர்பை வெளிப்படுத்துவதில் பெயர் சூட்டுவதும் ஒன்றாகும். அவ்வப்பகுதியில் புகழ்பெற்று விளங்கும் இறைவன் பெயரைத் தம் மக்களுக்குச் சூட்டித் தமது உரிமையை நிலைநாட்டிக் கொண்டனர். இவ்வாறு இப்பகுதியில் வழங்கும் பெயர்களில் சில வருமாறு:

சட்டைநாதன் (சட்டை நாதர் கோயிலினால் ஏற்பட்ட பெயர்) வைத்தியநாதன் தையல்நாயகி (வைத்தியநாதர் கோயிலினால் ஏற்பட்ட பெயர்கள்) அகோரமூர்த்தி (சுவேதாரண்யேசுவரர் கோயிலினால்

ஏற்பட்ட பெயர்) முல்லைநாதன் (முல்லைவனநாதர் கோயிலினால் ஏற்பட்ட பெயர்).

கோயிலுக்கு என்று அடிமையானவர்கள் சிலருண்டு. கோயிலினால் வருவாயைப் பெறுபவர்கள், கோயில் நிலத்தில் குடியிருப்பவர்கள், அதற்கு ஈடாகக் கோயிலுக்குச் சில கடமைகளை ஆற்ற வேண்டியவர்களாகின்றனர். தேர் இழுப்பது, சப்பரம் இழுப்பது, பல்லக்குத் தூக்குவது, தீவட்டிப் பிடிப்பது முதலிய செயல்களைத் தங்கள் கடமையாக எண்ணிச் செய்து வருகின்றனர். கோயில் நிலங்களைப் பெருமளவில் சாகுபடி செய்து வரும் பண்ணையார்கள், தங்கள் கிராம மக்களை இச்செயல் களில் ஈடுபடுத்துவதை இன்றளவும் காண முடிகிறது.

**மண்டகப்படி:**

கோயிலுக்கெனத் தனியே வருவாயும், செல்வமும் இருப்பினும், விழாக் காலங்களிலும் சில சிறப்பு தினங் களிலும் ஒரு இனத்தவரோ அல்லது ஒரு குழுவினரோ அல்லது ஒரு இடத்தைச் சார்ந்தவர்களோ தங்களது சிறப்பு வழிபாட்டைச் செய்வர்.

சான்றாகத் திருமுலைப்பால் உற்சவத்தில் அந்தணர்கள், செங்குந்த முதலியார், முதலியார், படையாச்சி, பிள்ளை போன்ற இனத்தைச் சேர்ந்தவர்கள் தனித்தனியே மண்டகப்படி செய்கின்றனர். திருமுலைப்பால் உற்சவத்தை முதலியாரும், சட்டைநாதர் உற்சவத்தை அந்தணர்களும் செய்வது பழக்கமாகும். இதனை "இனவழி மண்டகப்படி பிரிவு" என்று கூறலாம். மோட்டார் தொழிலாளர்கள், வியாபாரிகள் போன்றோர்களுக்கும் தனியே மண்டகப்படி கொடுக்கப்படுகிறது. இது "குழுவழி மண்டகப்படி பிரிவு" என்று அழைக்கலாம். ஒரு தெருவைச் சார்ந்தவர்களோ, அல்லது ஊரைச் சார்ந்தவர்களோ சேர்ந்து வழிபடும்

நிலையும் உண்டு. இதனை "இடவழி மண்டகப்படி பிரிவு" எனலாம்.

செல்வம் அதிகம் இல்லாத கோயில்களுக்கு ஊரில் வரி வைத்து விழா எடுக்கப்படுகிறது. ஒவ்வொரு குடும்பமும் ஒரு 'தலைக்கட்டு'[15] என்று அழைக்கப்படும். ஒரு தலைக் கட்டுக்கு இவ்வளவு ரூபாய் என்று வசூல் செய்து விழா செய்யப்படும். இவர்கள் வரி கொடுப்பது மட்டுமல்லாமல் மண்டகப்படியும் செய்தல் வேண்டும்.

காமன் கோயில், உருத்திராபதியார் கோயில்களுக்கு வெளியூரிலும் சென்று வசூலிப்பது வழக்கமாகும். இரதி, மன்மதன் வேடமிட்டுக் கொண்டும், பைரவர் வேடம் பூண்டும், வழிபாட்டுப் பாடல்களைப் பாடிக்கொண்டு செல்வர். நெல், அரிசி, பணம் முதலியன வசூல் பொருள் களாகும். உருத்திராபதியார் கோயில் வசூலை 'யாசகம் எடுத்தல்' என்று கூறுவர்.

தனியார் சிலர் மாதத்தின் சிறப்பான கிழமைகளில் மண்டகப்படி செய்வதுண்டு. வைத்தீசுவரன் கோயில் திருவிளக்கு அறக்கட்டளையை இதற்குச் சான்றாகக் காட்டலாம். இந்த அறப்பணிக்காக ரூபாய் ஆயிரம் முதலீடு செய்தல் வேண்டும். அவரவர்கள் குறிப்பிடும் பிறந்தாள், அல்லது திருமணநாள், அல்லது முன்னோர் நினைவு நாள் இவற்றில் ஒரு நாளில் ஆண்டுதோறும் திருவிளக்கு ஏற்றி அருச்சனை செய்து பிரசாதம் அனுப்பி வைக்கப்படும்.

**இல்லறச் சடங்குகள்:**

இல்லத்தில் நிகழக்கூடிய சடங்குகளைக் கோயில்களில் நடத்துவதின் மூலம் நன்மை மிகும் என்ற நம்பிக்கை இப்பகுதிகளில் உண்டு. கோயில்களில் நடத்துவதால் அச்சடங்கு நிகழத் தடையாக இருந்த தீவினை (தோஷம்)

விலகிவிடும் என்று நம்பப்படுகிறது. வைத்தீசுவரன் கோயில், அண்ணன் கோயில் ஆலயங்களில் திருமணம், காது குத்துதல் போன்ற சடங்குகள் பெருவாரியாக நடைபெறுகின்றன. வைத்தீசுவரன் கோயிலைச் சுற்றிலும் திருமணச் சத்திரங்கள் கட்டப்பட்டுள்ளன. திருமணம் செய்வதாகில் கோயிலுக்குக் காணிக்கையாக ஐந்து ரூபாய் செலுத்தவேண்டும். காதுகுத்துதல் போன்ற சடங்கிற்கு ரூபாய் இரண்டு கட்டவேண்டும்.[17] இச்சடங்குகள் இறைவன் சந்நிதிக்கு நேரே வைத்துச் செய்யப்படுகின்றன.

இல்லத்தில் நடைபெறும் திருமணச் சடங்கிற்கும், கோயிலில் நடைபெறும் திருமணம் சடங்கிற்கும் வேறுபாடு உண்டு. ஒரே நேரத்தில் பல திருமணங்கள் நடைபெறுவ தால் சடங்குமுறைகள் குறைக்கப்படுகின்றன. கோயிலில் உள்ள அந்தணரே திருமணத்தை நடத்தி வைக்கிறார். பூணூல் அணியும் சடங்கும், அறுபதாண்டு நிறைவு விழாவும் கோயில்களில் கொண்டாடப்படுவது வழக்கமாகும்.

**நிலப் பராமரிப்பு:**

ஆலயங்களுக்கு ஏராளமான நிலங்கள் உள்ளன. இவற்றைத் தனித்தனியே பிரித்துத் தனியாரிடம் சாகுபடி செய்ய விடப்பட்டிருக்கிறது. இந்நிலப்பிரிவினை முறை பற்றிய விளக்கம் கிடைத்திலது. இந்நிலங்களுக்கு நீர்ப்பாய்ச்சும் முறைகள் வகுக்கப்பட்டுள்ளன. சான்றாக ஒன்று: வைத்தீசுவரன் கோயில் கிராமங்கட்குப் பாய்ச்சல் காளாக இருப்பது முடவனாறு. இந்த ஆறு பழவாற்றில் ஆதமங்கலத்திற்கு அருகில் பிரிகிறது. இதிலிருந்து புங்கனூர் அருகில் சட்டைநாதபுரம் வாய்க்கால் பிரிகிறது. இந்த வாய்க்கால் கணவாய்க்கு நீளம் 35 அங்குலம், அகலம் 8 அங்குலம் வைத்துக் கட்டப்பட்டுள்ளது. இன்னும் பெரிதாகக் கணவாய் வைத்துவிட்டால் தேவதான நிலங்கள் பாய்ச்சல் கெடும். இந்த அளவினை மாற்ற முடியாத

அளவிற்குக் கல்வெட்டு ஒன்றைச் செல்வமுத்துக்குமாரசாமி கருவறை நிலப்படியில் செதுக்கி வைக்கப்பட்டுள்ளது.[18]

இத்தகு நிலங்களைச் சாகுபடி செய்வோர் ஏக்கருக்கு இத்தனை கலம் நெல் என்று கோயிலுக்கு அளந்துவிட வேண்டும் (100 குழிக்கு 5 கலம் நெல், அதாவது ஏக்கருக்கு 15 கலம் நெல் அளக்கவேண்டும் என்பது மரபாகும்) சாகுபடியில் பாழ் ஏற்படின் குத்தகைப் பொருளின் அளவு குறைக்கப்படும். பெரும்பாலான குத்தகைக்காரர்கள் ஒழுங்காக நெல் அளக்காமல் போவதால் கோயிலின் பராமரிப்பு கெட்டுவருகிறது. நெல்லை வைத்துக் கொள்வதற்கென்று ஒவ்வொரு கோயிலிலும் நெற் களஞ்சியம் வைக்கப்பட்டுள்ளது.

நெற்பயிர் மட்டுமல்லாமல், சவுக்கு, தென்னை, மா, பலா, தேக்கு, வாழை, மூங்கில், கொய்யா, புளி, நெல்லி, நாவல், விளா, முந்திரி போன்றனவும் பயிர் செய்யப்படு கின்றன. சான்றாகத் திருவெண்காட்டுக் கோயிலின் நிலங்களை இவ்விடத்தில் காட்டலாம். சவுக்கு மூன்று இலட்சம், தென்னை 5500, மா 1000, தேக்கு 884, பலா 527, முந்திரி 260, கொய்யா 104 முதலிய பொருள்கள் பயிரிடப்படுகின்றன. இவ்வாலயத்திற்கு நன்செய், புன்செய் இரண்டிலுமாக மொத்தம் 1613.41 ஏக்கர் நிலங்கள் உள்ளன.[19]

வருவாய் உள்ள கோயில்களுக்கு அறங்காவலர் குழு நியமிக்கப்பட்டுள்ளது. இக்குழுவினர் ஆலய வருவாயைக் கண்காணித்து வருகின்றனர். தருமபுர ஆதீனத்திற்கு உரிமையான கோயில்கள் சட்டைநாதர் கோயில், வைத்தீசுவரன் கோயில், திருக்கோலக்கா கோயில், திருமுல்லை நாதர் கோயில் முதலியனவாகும். தனியார் பராமரிப்பில் பல சிறு தெய்வக்கோயில்கள் உள்ளன. வருவாயை இவர்கள் கண்காணிப்பர். இவ்வாறாக

கோயில்களும் சமுதாயமும் ஒன்றுக்கொன்று பல நிலைகளில் தொடர்பு கொண்டு விளங்குகின்றன.

## பண்பாட்டுக் கோடை

கோயில்கள் மூலம் பெறப்படும் பண்பாட்டுக் கொடை பற்றி இவ்வியல் கூறுவதாவது வருமாறு:

இறைவனோடு தொடர்புடைய அனைத்தையுப் மதிக்கும் பண்புடையவர்கள் தமிழர்கள். எனவேதான் கோயில் பொருள்கள் அனைத்திற்கும் "திரு" என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. இறைவனுக்குத் தொண்டு செய்வதிலும், மந்திரங்கள் முதலியன ஓதி நன்மை மிகு விப்பதிலும், பில்லிசூனியம் போன்றவற்றிலிருந்து மக்களைச் காக்கவல்ல மந்திரத் தன்மை பெற்றிருப்பதிலும் இறைவனோடு ஒன்றிக் கலந்து விட்ட காரணத்தாலும் பூசாரிகளையும், பாடற்பூசாரி முதலானோரையும், மக்கள் மதித்து நடக்கலாயினர். இது முன்னர்க் கூறிய தமிழர் பண்பாட்டை விளக்குவதாக உள்ளது.

அச்சத்தைத் தவிர்த்தும், இடர்ப்பாடுகளிலிருந்தும் துன்பங்களிலிருந்தும் மீட்சியளித்தும், தம்மைக் காக்கவல்ல அனைத்துச் சக்திகளுக்கும், மதிப்பும் மரியாதையும் தருவது தமிழர்களின் பண்பாகும். இப்பண்பாட்டைத் தமிழர்களின் பல தெய்வ வழிபாடு வெளிப்படுத்துகிறது. இப் பல தெய்வ வழிபாட்டை: வருசபத்து அங்காளம்மன் கோயிலும், பிற மாரியம்மன் கோயில்களும் தெளிவுறுத்துகின்றன.

சமூக வாழ்வில் அநியாயங்கள் நிகழாதவாறும், தீமைகள் ஏற்படாதவாறும், உண்மைகள் கண்டுபிடிக்க வேண்டியும் நீதி நேர்மைகளை நிலைநாட்ட வேண்டியும் தெய்வங்களை வேண்டி வழிபடுவது தமிழர்களின் மரபாகும். மேற்கூறிய வற்றை நிலைநாட்ட, கோயிலில் சென்று சத்தியம் செய்வது

எரிகின்ற சூடத்தைக் கையால் அடித்து நிறுத்துவது, பால் எடுத்துக் குடிப்பது போன்ற செயல்களைத் தமிழர்கள் மேற்கொண்டனர். இத்தகு செயல்கள் மேற்கூறிய பண்பாட்டை விளக்கி நிற்கின்றன. இப் பண்பாட்டை, வேட்டங்குடி மாரியம்மன் கோயில், வருசபத்து அங்களாம்மன் கோயில் போன்ற கோயில்கள் வெளிப் படுத்துகின்றன.

தமிழர்கள், குடும்ப ஒற்றுமையைப் பெரிதும் விழையும் பண்பினர். இவ்வொற்றுமைக்கு ஊறு நேராமலும், முறைப் பாடு வாராமலும் இருக்கக் கோயில்களை ஒரு கருவியாகப் பயன்படுத்தினர். முறைப்பாடு தோன்றின் வழிபாடு நடத்தாமல் இருப்பது பங்காளிகளுள் வேறுபாடு தோன்றின் வழிபாடு நடத்தாமல் இருப்பது போன்றன, ஒற்றுமை யோடு சேர்ந்திருந்து இறைவனை வணங்க வேண்டும் என்ற தமிழர் மனப்பாங்கினைத் தெளிவுறுத்துகின்றன. இப்பண் பாட்டை இவ்வட்டத்தில் காணப்படும் ஒவ்வொரு இனக் குலத்தெய்வக் கோயில்களும் வெளிப்படுத்துகின்றன.

எதையும் மங்கலகரமாகத் தொடங்க வேண்டும் என்பது தமிழர்களின் பண்பாடாகும். நல்லவை, ஊர் அறிய, பொதுவிடங்களில், கோயில்களில் நடத்த விழைந்ததின் பொருட்டு, 'உத்திரவு கேட்டல்', முதலியனவும், இல்லறச் சடங்குகள் முதலியனவும், இறைவன் முன்னர் மங்கலகரமாக நடத்தப்பட்டன. இது மேற்கூறிய தமிழர்களின் பண்பாட்டை வலியுறுத்துகிறது.

'இறைவன் முன்னர் அனைவரும் சமம்'– என்பது தமிழர்களின் சமயப் பண்பாடாகும். கோயில் வழிப்பாட்டில் சிறியோர்க்கும் பெரியோர்க்கும் கீழோர்க்கும் மேலோர்க்கும் சம உரிமை அளிக்கவேண்டி மண்டகப்படி, தலைக்கட்டு வரிவசூல் போன்றன ஏற்படுத்தப்பட்டன.

இதனால் அனைவரும் சம உரிமையோடு சம பங்கீட்டுப் பொருள்களைத் தந்து வழிப்பாட்டில் கலந்து கொண்டனர். இது முன்னர்க் கூறிய சமயப்பண்பாட்டை வெளிப் படுத்துகிறது. இச்சமயப் பண்பாட்டை வைத்தியநாதர் கோயில், அண்ணல் கோயில், வருசபத்து உருத்திராபதியார் கோயில், மாதானம் மாரியம்மன் கோயில், காமன் கோயில்கள் முதலிய கோயில்கள் வெளிப்படுத்துகின்றன.

இவ்வாறாகக் கோயில்கள் மூலம் பெறப்படும் தமிழர்களின் சில பண்பாட்டைக் கொடைகளை இவ்வியல் வெளிப்படுத்தியுள்ளது.

## குறிப்புகள்

1. சுப்பிரமணியப்பிள்ளை, கா; **தமிழர் சமயம்**, ப. 184-185.
2. ஷை, ப. 101–102.
3. சீர்காழி இராமநாத சிவாச்சாரியார், வைத்தீசுவரன் கோயில் இராசாமணிக்குருக்கள், திருநாங்கூர் சம்பத் பட்டாச்சாரியார் போன்றோர் குறிப்பிடத்தக்க பூசை செய்வோரில் சிலராவர்.

4-5. நல்ல விநாயகபுரம் திரு. கோபால் அவர்களிடம் பேட்டி கண்டபோது பெற்ற மந்திரம்.

6. சுப்பிரமணியப்பிள்ளை, கா. சு; **தமிழர் சமயம்** ப. 35.
7. நல்ல விநாயகபுரம் கோபால், திட்டைக் கிருட்டின மூர்த்தி, திருமுல்லைவாயில் இரத்தினசாமி போன்ற வர்கள், சிறந்த பாடற் பூசாரிகளில் சிலராவர்.
8. சுப்பிரமணியப்பிள்ளை, கா. சு; **தமிழர் சமயம்** ப. 44.
9. **குறிகேட்கும் பாடல்கள்.** (முத்தாளய்யா பாடல், பதிவு செய்யப் பெறாத சுவடியிலிருந்து பெறப்பட்டது.)

10. குறிகேட்கும் பாடல்களில் பதினெட்டாம் படியார் குறித்த பாடலில் உள்ளது. தகவல்: கே. கண்ணன், சீர்காழி.
11. **ஆய்வுக்கோவை,** (அண்ணாமலைப் பல்கலைக்கழகச் சார்பு வெளியீடு, 1981.) தொகுதி 3, ப. 118.
12. **உடுக்கைப் பாடல்கள்** (பத்திர காளியம்மன் பாடல்; பதிவு செய்யப் பெறாத சுவடியிலிருந்து பெறப் பட்டது.)
13. **திருக்கோயில்,** (மாத இதழ்) கண்ணதாசன்; "இறைவனின் நீதிமன்றங்கள்", சனவரி 1975, ப. 6-7.
14. **தொல்காப்பியம்,** பொருளதிகாரம், புறத்திணையியல், நூற்பா எண்: 4.
15. சுப்பிரமணியப்பிள்ளை, கா. சு; **தமிழர் சமயம்,** ப. 106.
16. இவ்வட்டத்தில், ஒரு குடும்பத்தை ஒரு 'தலைக்கட்டு, என்று கூறுவர்.
17. **புள்ளிருக்கு வேளூர்த் தலவரலாறு,** ப. 29.
18. ஷை, ப. 15.

# காமன் விழாவும் பண்பாடும்

'காமன் விழா சங்க காலம் தொட்டு நடைபெறுகிறது. காதலர்கள், இளவேனில் காலத்தில் கொண்டாடும் 'காதல் விழாவாக' அப்பொழுது கொண்டாடப்பட்டது.[1] ஆனால் தற்காலத்தில், புராண ஆதிக்கத்திற்கு ஆட்பட்டு, ஆதிசிவன், காமனை எரித்துப் பின் உயிர்ப்பித்ததாக நடைபெறுகிறது.

'காமண்டி' என்ற சொல் இவ்விழாவைக் குறிக்கப்பயன் படுத்தப்படுகிறது. இது 'காமன் பண்டிகை' என்ற சொல்லின் மருவிய வழக்காகும்.[2] மாசித் திங்களில் 15 நாட்கள் நடைபெறும் இவ்விழாவில் 'காமதகனம்', 'மூணாங்குழி' ஆகிய விழாக்கள் சிறப்பிடம் பெறுகின்றன காமக்கடவுளாக மக்கள் வணங்குவது கரும்பு, வாழை, மாவிலை, ஆமணக்குச் செடி ஆகியவையேயாகும். அவற்றை நாணல் கயிற்றால் ஒரு கம்பத்தில் பிணைத்து இருப்பார்கள். பிறகு அவற்றை எரிப்பார்கள்.

'காமதகன விழாவில்' முக்கிய நிகழ்ச்சியாகக் கருதப்படுவது 'வில்லெடுத்துக் கொடுத்தல்' ஆகும்.[3] இரதி மன்மதன் வேடமிட்ட சிறுவர்களைக் கோயிலின் முன்னிறுத்தி இருவர் கையிலும் வில்லைக் கொடுத்துத் தர்க்கப்பாடல்களைப் பாடுவர். இப்பாடல்கள், காமன், சிவனின் தவத்தைக் கலைக்கச் செல்லவிடாது இரதிதேவி தடுப்பதாக அமைந்துள்ளது.

இவர்களை ஊர்வலமாக அழைத்து சென்ற பின்னர், காமன் மண்டபத்தை எரியூட்டக் காசான், சவுக்குத் தழைகளை வைத்துக் கட்டியிருப்பர். தர்க்கம் முடிந்ததும்.

காமன், சிவனின் தவத்தைக் கலைக்கப் பாணம் விடும் போது கோயில் எரியூட்டப்படுகிறது.

அப்பொழுது சாவுப்பறை முழங்கும், பலர் வண்ணப் பொடிகளைப் பூசிக் கொண்டும், மாரடித்துக் கொண்டும், சுற்றிச்சுற்றி வந்து ஓலமிடுவர். நையாண்டி மேளம் தப்பு போன்ற இசைக்கருவிகள் முழங்கும். குறவன் குறத்தி நடனம் நிகழ்தலும் உண்டு. குறிப்பிட்ட சிலர் ஒப்பாரிப் பாடல்களைப் பாட, மற்றவர் தாளத்திற்கு ஏற்ப ஆடுவர்.

இதன் பின்னர் அலங்கரிக்கப்பட்ட இரதத்தில் இரதி மன்மதன் படத்தை வைத்து நீர்த்துறைக்கு எடுத்துச் சென்று நீரில் மூழ்கடிப்பர் காமனை எரியூட்டுவதிலிருந்து நீர்த்துறையில் நீராடும் வரையில், அந்நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளும் பொது மக்களை, மற்றையோர் 'தீட்டாக' நினைத்துத் தீண்டமாட்டார்கள். நீராடித் திரும்பிக் கோயிலுக்கு வரும்போது வேடமிட்ட சிறுவர்கள், விழாவில் முக்கிய பங்கேற்றவர்களுக்கு 'ஆரத்தி' எடுக்கப்படும். அனைவரும் எரித்த கோயிலை மும்முறை வலம் வந்து, சாம்பலை நெற்றியில் இட்டுக் கொள்வதுடன் விழா முடிவுறும்.

**மூணாங்குழித் திருவிழா,** காமதகனத் திருவிழாவின் மூன்றாம் நாள் நடைபெறும்.[4] அன்றைய தினத்தில் இரதி வேடமிட்ட சிறுவன், சிவவேடமிட்ட சிறுவனிடம் உயிர் பிச்சைப் பெற்ற பின்னர், காமன் வேடமிட்ட சிறுவனைப் படுக்கவைத்து துணியால்மூடி, நீர் தெளித்துக் "காமக் கடவுளே எழுந்திராய்" என்று கூறி உயிர்ப்பிக்கச் செய்வர். இதன் பின்னர்க் காமக் கடவுளுக்கு முடிசூட்டல் நடைபெறும். வேலைப் பாடமைந்த பழைய கீரிடம் ஒன்றைக் கோயிலின் படியில் வைத்துக் "கொலு விருத்தம்" பாடுவர். சிறப்பு வழிபாடு முடிந்த பின்னர், விழா

நிறைவுறும் இதன் மறுநாள் முதல் 'கூத்து' நடைபெறுவது வழக்கம்.[5]

**பாடல்களும் பண்பாடும்:**

இரண்டு நாள் விழா நிகழ்ச்சிகளும் புராண வரலாற்றுப் பாடல்களைப் பாடியே நடைபெறுகின்றன. இப்பாடல்களில் அன்றாட மானுடத் தன்மையின் நம்பிக்கைகள் ஆசாபாசங்கள், பழக்கங்கள் வெளிப்படுகின்றன.[6] 'சிவனின் தவத்தைக் கலைக்க வேண்டாம்' –என்று இரதி எவ்வளவோ மன்றாடியும் காமன் கேளாது போக, இரதி துன்பமுற்று

"அய்யோ பாவகெதியே முன் தையல் தலைவிதியே"

என்று சாதாரண மானுடப் பெண் புலம்பிப் பாடுவது போலப்பாடல்கள் உள்ளன. காமன் தடுத்துத் தர்க்கம் செய்யும் பாடல்கள் வீரச் சொற்கள் நிறைந்தவை.

"ஏதடி ரதியே என்னுடன் பேசினாய்
ஏதடி ஈஸ்பரன் என்னை யெரிப்பாரென்று
வாதாடிப்பேசுறாய் வம்புத் தனமாய் நின்று
தண்ணும் தவமதை தாக்குவேன் கேளடி
பண்ணும் பரமனார்க்குப் பாவமேன் கூறடி"

என்பன போன்ற தர்க்கப்பாடல்கள், சாதாரண மனிதர்கள் (தம்பதிகள்) தம்முள் வாதிட்டு உரைப்பது போல அமைகின்றன.[7]

"பொன்னுலகம் போகாவிட்டால் யென்னையார்
மதிப்பார் என்று"

என்ற காமன் தர்க்க வரி, வீரர்கள் வீர சொர்க்கத்தையே பெரிதும் விரும்புவர் என்ற பண்டை வீரப்பண்பாட்டை நினைவு கூறுகிறது. இரதி சிவடனிம் தர்க்கம் புரியும் போது

"நாயகன் இல்லாமல் நானொருபாவியாய்"

என்று பாடுவது, கைம்மை நோன்பு கொள்வது பாவச் செயலே என்ற பண்பாட்டின் எதிரொலி எனலாம்.

இரதியின் ஒப்பாரி பாடல்களின் மூலம் பல சகுணங்கள், நம்பிக்கைகள் வெளிப்படுகின்றன.

"கனகிரிமேல் வில்லெடுத்துக் கயிலாசம் போகையில
கண்ட சகுனமெலாம் கட்டழகி சொல்லறன்கேள்
காகம் கரைகிறதும் கழுகு பறந்ததுவும்
கன்னி யொருத்தியவள் கணவன் பின்நின்று
கண்ணைப் பிசைந்துகொண்டு கதறி அழுததுவும்
காளை பறிபோகக் கருநாய் குலைத்திடவும்
காணாத சொப்பணமும் கண்டனடி தாதிகளா"

என்ற பாடல் சமுதாயத்தில் நிலவும் பல தீய சகுணங்களைச் சுட்டுவதாக உள்ளது. முருங்கை மரம் அடியோடு சாய்வது தீது எனக் கருதப்பட்டதை

"ஆரணியில் வாழ்முருங்கை அடிமுருங்கை
சாய்ந்ததடி"

என்ற வரி எடுத்துக் காட்டுகிறது.

**முடிவுரை:**

இப் பண்டிகை நிகழ்ச்சி, மக்களின் பொழுது போக்காக மட்டுமின்றி, அவர்களின் கலையுணர்வினை வெளிப்படுத்தும் கருவியாகவும் அமைந்துள்ளது. சிறுவர்களிடம் கலை நாட்டத்தை வளர்ப்பது குறிப்பிடத்தக்கது. இவ்விழாவில் பாடப்படும் பாடல்கள் ஊர்தோறும் வேறுபடுவது வாய் மொழிப் பாடலின் பண்பைக் காட்டுவதாக அமைகின்றது.

## குறிப்புகள்

1.

| கலித்தொகை (கான்று) | பாடல் எண் | வரிகள் | சிலம்பு காதை | வரிகள் |
|---|---|---|---|---|
| | 27 | 32–24 | 9 | 59–62 |
| | 30 | 12–14 | 30 | 25–28 |
| | 36 | 8–10 | | |

2. 'காமண்டி' என்னும் சொல் கோயிலைக்குறிப்பதாயின், 'காமன் அடி' காமண்டி என்று ஆகியிருக்க வேண்டும். தென் தஞ்சைப் பகுதியில் இக்கோயிலைக் 'காமன் அடி' –என்று கூறுகின்றனர்.

3. 'வில்' – ஆற்றுநொச்சியின் கிளைகளினால் செய்யப் படுகிறது.

4. மூன்றாம் நாள் நடைபெறும் விழாவாகையால் மூணாங்குழி என்று பெயர் ஏற்பட்டிருக்க வேண்டும். அல்லது காமன் எரித்த குழியைச் சாம்பலால் மூடுவது– மூடும்குழி மூணாங்குழி என்று ஏற்பட்டிருக்கவேண்டும். அல்லது மூன்றாம் நாள் குழியை மூடுவதால் "மூணாங்குழி" என்ற பெயர் ஏற்பட்டிருக்க வேண்டும்.

5. இதன் மறுநாள் 'கம்ப சேவை' என்ற பெயரான் பலர்க்கு உணவளித்து மூன்று நாட்களுக்கு நாடகம் நடைபெறும். எரித்த கட்சி, எரியாத கட்சியினரின் 'லாவணி' சில இடங்களில் நிகழும்.

6. பாடல்கள் அனைத்தும் வாய்மொழி வடிவின.

7. 'மன்மதன்' மண்ணுலக மன்னன் என்ற எண்ணம் இப்பகுதியில் சிலரிடம் உள்ளது.

# காமத்தகன விழாவில் இரதியின் ஒப்பாரிப் பாடல்கள்

## முகவுரை

தமிழகத்தில் சங்க காலந்தொட்டே காமன் வழிபாடு நடைபெற்று வந்திருக்கிறது. இதற்கான சான்றுகள் பல உள.[1] காமன், காமவேள், நெடியோன்மகன், மாரன், மீனேற்றுக் கொடியோன், மலரம்பினோன், வில்லவன் - இவைகள் காமனைக் குறித்திடும் பிறபெயர்களாகும்.[2] தமிழகத்தில், உருமாறி நடந்திடும் விழாவாகக் காமன் விழாவினைக் கூறிடவேண்டும். சங்க கால விழா முறைமைக்கும், இக்கால விழா முறைமைக்கும் - மாறி நடந்திடும் நிகழ்ச்சிகள் பல உள. காதலர்கள் கொண்டாடி வந்த விழாதான், இன்று கார் மாரி பெய்யக் கொண்டாடப் படுகிறது. இடையில் சிவனார் காமனை எரித்த புராணக் கதைத்தாக்கத்தால் இம்மாறு நிகழ்ந்திருக்கக் கூடும். இப்புராண நிகழ்ச்சியின் அடிப்படையில்தான் இன்று விழா நடைபெறுகிறது. இவ்விழாவில் பாடப்படும் பாடல்களைக்

1. காமன் – இரதி – தர்க்கப் பாடல்கள்
2. காமத் தகனப் பாடல்கள்.
3. இரதியின் ஒப்பாரிப் பாடல்கள்.
4. இரதி – சிவன் – தர்க்கப்பாடல்கள்.
5. காமன் உயிர்ப் பெற்றப்பின்னர்ப் பாடப்படும் பாடல்கள் அல்லது இலாவணிப் பாடல்கள்

என ஐவகையாகப் பிரிக்கலாம். இப்பிரிவுகளுள் இரதியின் ஒப்பாரிப் பாடல்களே இக்கட்டுரைக்குத் தளமாய் அமைகின்றன.

## சமுதாயமும், துன்பியலும்

எட்டு மெய்ப்பாடுகளுள் அழுகைச் சுவை பெற்ற பெருமதிப்பு ஏனையன பெற்றில. இதனை நாட்டுப்புறவியல் நாடகங்கள் தெளிவுறுத்துவன. பாரதக் கதையில் பாஞ்சாலியின் புலம்பலும் நளமகாராஜா கூத்தில் தமயந்தியின் அழுகையும், அரிச்சந்திரப் புராணத்தின் மயான காண்டமும், காமன் விழாவில் இரதியின் ஒப்பாரியும் ஓர் வரிசையில் வைத்து எண்ணத்தக்கன. இலக்கியப் பெண்கள் படுதுயரைக் கண்டு சகிக்க முடியாத, சமுதாயத்தின் எண்ண வெளியீடாக இவைகளைக் கொள்ள வேண்டும். துன்பம் நிறைந்த சமுதாயம், பிறர் துன்பத்தைக் கண்டு, ஆறுதல் அடைந்தது. எனவே, இத்தகு துன்பியலை வளர்க்கத் துணை நின்றதாகச் சமுதாயத்தைக் கொள்ள வேண்டும். இத்துன்பியலின் வளர்ச்சி நிலையை இரதியின் ஒப்பாரிப் பாடல்களில் காணமுடிகிறது.

## இரதியின் ஒப்பாரிப் பாடலும், சூழலும்

காமத்தகன விழாவின் இரண்டாவது நிகழ்ச்சியாக ஒப்பாரிப் பாடல்கள் இடம் பெறுகின்றன. முதற்பகுதியில், நாடகப் பாங்கோடு விழா நடைபெறுகிறது. வேடமிட்டவர்களால் நடத்தப்படும் இவ்விழாவின் இறுதியில் காமன் மண்டபம் முழுமையாக எரியூட்டப்படும். காமன் மண்டபம் எரியூட்டப்படுவதிலிருந்து விழா முடியும் வரை ஒப்பாரிப் பாடல்கள் பாடப்படுகின்றன. பல்வேறு வண்ணப் பொடிகளைப் பூசிக்கொண்டோர் மாரடித்துக் கொண்டு பாடும் நிகழ்ச்சியாக இது அமையும். கிராமப்புறத்திற்கே இயல்பான, தொன்மையும், நெகிழ்வும், சுவையும் இந் நிகழ்ச்சியை அலங்கரிக்கக் காணலாம். வழிவழியாக இந் நிகழ்ச்சியை நடத்துவோர் மட்டுமின்றி ஆர்வலர் பலரும் இப்பாடல்களில் பங்கேற்கின்றனர். கிராமந்தோறும் இப்

பாடல்கள் வேறுவேறு வடிவங்களில் பாடப்படுகின்றன. எண்ணிக்கையும், வடிவமும் வரையறுக்கப்பட்டில.

## பாடல்களின் அமைப்பு

நிகழ்ச்சியைத் தொடங்கு முன்னர் அமையும் பாடல்களில் பொருள் ஒன்றாக அமையும்.

அல்லிமலர் முல்லைமலர் அசோகமலர் நீலமலர்
அய்ந்து மலரால்பாணம் அடிக்கரும்பு வில்லாக்கி
ஆதிசிவன்மேல் பாணம் அடித்தானே மன்மதனும்
ஆறடாவென்று சிவன் ஆங்கார கோபமுடன்
அதட்டியே கண்விழித்து அருகில்நின்ற மன்மதனை
அனலாய் யெரித்துவிட்டார் ஆதிசிவன் கோபமதாய்.

இப்பாடல் காமன் எரிந்த நிகழ்ச்சியை விளக்குவதாக உள்ளது. ஏனைய ஊர்கள் அனைத்திலும் இப்பொருள்பட அமைந்த பாடலே முதற்பாடலாகத் திகழ்கிறது. இதன் பின்னர் வரும் பாடல்கள் இரு பிரிவுகளுள் அடங்குவன.

1. இரதியின், தீயகனவுகளையும், தீயசகுனங்களையும் விவரிப்பன அல்லது செயல்களைச் சித்தரிப்பன.
2. இரதி நேரடியாகத் தன் பாங்கிகளோடு புலம்புவது. பத்தி பிரிக்க இப்பாடல்களுக்கு வரி வரையறைச் செய்யப்பட்டில. ஒரு பொருள் குறித்த பாடல் அப்பொருள் முடியும் வரை வரிகள் நீண்டு செல்கின்றன. பொருள்கள் தொடர்ச்சியின்மையுடன் காணப்படுகின்றன. சான்று: இந்திரன் தூது–மன்மதன் இந்திரலோகம் செல்லுதல் பற்றிக் கூறப்படும் பாடலை அடுத்துத் தீயசகுனங்களைப் பற்றி விளக்கப்படும் பாடல் இடம் பெறுகிறது. வந்தபொருளே மீண்டும் வருதல் உண்டு. சான்று: தீயகனவுகள் மற்றும் சகுனங்கள் பற்றி வரும் பாடல்களே மிகுதியாகவுள்ளன.

**பாடல்களில் சமுதாயப்பின்னணி**

இப்பாடல்கள், புராணத்தை அடிப்படையாகக் கொண்டாலும், முழுக்க முழுக்கச் சமுதாயமே பின்னணி யாகத் திகழ்கின்றன. சமுதாயத்தின் கேடுகளைச் சித்தரித்து, அக்கேடுகளால் விளையும் அழுகை உணர்வை விளக்கு வதாகவும் உள்ளன. காலத்திற்கு ஏற்ப ஒவ்வொரு கருத்தும் பாடல்களில் இடம் பெற்று வந்திருக்கிறது. சான்றாக: இளமை மணத்தால் விளைந்த கேடுகளை இப்பாடல்கள் சில இடங்களில் சுட்டிச் செல்கின்றன. மிக இளம் வயதிலே ஏற்படும் மணஉறவின் நிலையாமையை விளக்கி, அந்நிலையாமையால் உண்டாகும் பாதிக்கப் பட்டோரின் துன்ப உணர்வுகள் இப்பாடல்களில் தெளிவாகின்றன.

அஞ்சு வயதிலென்னை அழகிய மன்னருக்கு
அழகு கல்யாணம் அன்பாகச் செய்துவய்த்தார்
அழியா சிரஞ்சீவியா அன்பாய் வாழ்ந்திருந்தோம்
ஆரும் துணையுமில்லே வேரும் கதியுமில்லே-

இவ்வரிகள் சிறுவயதிலே நடைபெறும் திருமணத்தையும், அம்மணந் தரும் அன்பான உறவு நிலையையும், அவ்வுறவு நீடியாது அறுபட்டமையையும் விளக்கி நிற்கின்றன, மேலும்

அறனார்க்குப் பெண்ணாய்ப் பிறக்காமல் தன்
மகனுக்கு கொடுக்க
ஆறுவயதில் வாழ்வுபறிபோக அமைத்தானே
பிர்மதேவன்-

என்று இளம் வயதிலே விதவை ஆனமையும் குறிப்பிடப் பட்டுள்ளது. மேற்கூறிய பாடல்கள் தரும் பொருள் பொருத்தமுடையதாகத் தெரியவில்லை. முழுக்க முழுக்கப் புராணத்தோடு தொடர்புடைய ஒரு கதாபாத்திரம்

புலம்புகின்ற பாடல்களாக இருப்பினும், அப்பாடல்களைத் தோற்றுவித்தது சமுதாயந்தானே! ஆகவேதான் அப்பாடல்களில் சமுதாயக் கருத்துகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

**பாடல்களில் மானிட உணர்வுகள்**

மகிழ்ச்சியை விட அழுகைச் சுவையில்தான் மனித உணர்வுகள் பெரிதும் சித்தரிக்கப்படுகின்றன. தொன்று தொட்டு வரும், நம்பிக்கைகள், பழக்கங்கள், சடங்குகள் போன்றவற்றை இப்பாடல்கள் தெளிவுறுத்துகின்றன. சில தீய சகுனங்கள் நிகழின் அதன் பின்னர்த் துன்பம் ஏற்படும் என்பது தமிழர்களின் நம்பிக்கையாகும். முருங்கைமரம் சாய்தல்; கழுகு பறத்தல், காளை பறிபோகக் கருநாய் குலைத்தல், கன்னி ஒருத்தியவள் கதறி அழுவது போன்ற தீயச் சகுனங்களை.,

கனககிரி வில்லெடுத்துக் கயிலாசம் போவயிலே
கண்ட சகுனமெல்லாம் கட்டழகி சொல்லறன்கேள்
காகம் கரைகிறதும் கழுகு பறந்ததுவும்
கன்னி யொருத்தியவள் கணவன் பின்னேநின்று
கண்ணைப் பிசைந்துகொண்டு கதறி அழிததுவும்
காளைப் பறிபோக கருநாய் குலைத்திடவும்
காணாத சொப்பனமும் கண்டனடி தாதிகளா—

என்ற பாடல் தெளிவுறுத்துகிறது. இது போன்ற பல தமிழர்தம் சகுன நம்பிக்கைகள் பல பாடல்களில் விளக்கப் பட்டுள்ளன. மகளிர்க்கு மஞ்சள் பூசுவதும், குங்குமம் இடுவதும் மங்கல செயலாகப் போற்றப்படுவனவாகும். எந்தப் பெண்ணும் இவற்றை இழந்திடச் சம்மதிப்பதில்லை. கணவனை இழந்து நிற்கும் பெண்கள் மஞ்சள் இழந்ததற்கும், பொட்டிழந்ததற்கும் பெரிதும் வருந்தக் காணலாம். இதனை.,

மம்மட்டிக் கொண்டு யென்மாமன் கோபாலன்
குழிவெட்டிப் போட்டமஞ்சள் ... ... ... ...
மார்பு செவக்க யான்பாவி சண்டாளி
மறுநாள் குளித்தறியேன்.
உடம்பு செவக்க யான்பாவி சண்டாளி
ஒருநாள் குளித்தறியேன்

எனவும், மஞ்சள் இழந்தேன் மணம் ஒழிந்தேன், பொட்டிழந்தேன்., மானமிழந்தேன், மதிமோசம் போனேனே என வரும் பாடல்வரிகள் விளக்குகின்றன. இவ்வாறாகப் பாடல்கள் புராணத் தன்மை அடிப்படையில் இருப்பினும் தனிமனித உணர்வுகளைத் தழுவியே அமைக்கப்பட்டுள்ளன என்பதை அறிய முடிகிறது.

## குறிப்புகள்

1. கலித்தொகை: பாடல் எண் – வரிகள்
   27 – 23 – 24
   30 – 12 – 14
   36 – 8 – 10

   சிலப்பதிகாரம்: காதை – வரிகள்
   4 – 82 – 84
   9 – 59 – 62
   30 – 25 – 28 மற்றும் பல.

2. வையாபுரி பிள்ளை, சங்க இலக்கியம் (தொகுதி, 2, பக்கம். 1385).

# நாட்டுப்புற வழக்காற்றில் சிறுத்தொண்டர் புராணம்

## முன்னுரை

சங்க இலக்கியங்கள் வாய்மொழி வடிவின என்பது அறிஞர் தம் கருத்தாகும். இதிகாசங்கள்கூட ஒரு காலத்தில் வாய்மொழியாக வழங்கப்பட்டுப் பின்னர்தாம் எழுத்துரு பெற்றன என்பர் பெரியபுராணத்தில் இன்றளவும் வாய்மொழியாக வழங்கி வரும் புராணக்கதை களும் உண்டு. இக்கதைகள் எழுத்துருபெற்ற பின்னர் வழங்கப்பட்டனவா? அல்லது எழுத்துருபெறும் முன்னரே வழங்கப்பட்டனவா? என்பது ஆய்விற்குரியது. பெரிய புராணத்தில் இடம்பெற்ற சிறுத்தொண்டரின் வரலாறு இன்றளவும் பரமர மக்களிடையே எழுச்சியோடு நிலவக் காண்கிறோம். இவரினும் மாப்புகழ் நாயன்மார்களின் வரலாற்றை அறிந்திருப்பினும், மக்கள் சிறுத்தொண்டரின் சிவப்பக்தியைப் பாராட்டுவது போன்று ஏனைய நாயன்மார்களைப் போற்றுவது இல்லை. இதனைத் தமிழகம் தழுவிய "அன்னப்படையல்" திருவிழா எடுத்துக் காட்டும். இதனைக் கருதியே முக்கண் முதல்வனும்

"நீரோ பெரிய சிறுத் தொண்டர்" (பா. எண். 44) என்று திருவாய் மலர்ந்தருளி உரைக்கக் காணலாம். பட்டினத்தடிகளும்

"வாளால் மகவரிந்து ஊட்ட வல்லே னல்லேன்"

எனப்போற்றிப் பரவுகின்றார். இவர்தம் வரலாற்றைப் பாமரர் நோக்குவது எங்ஙனம் என்பது இக்கட்டுரையின் களமாக அமைகிறது.

## பெரிய புராணமும் பாமர புராணமும்

பெரிய புராணத்தில் எண்பத்தேழு பாடல்களில் சிறுத்தொண்டர் புராணம் புனையப்பட்டுள்ளது. பாமரர் கதைப் பாடல் இடத்திற்கு இடம் எண்ணிக்கை வேறுபடுவனவாகப் பாடல்கள் மாறுபடுவனவாக உள்ளன. ஆனால் நிகழ்ச்சிகள் ஒரு தன்மையன.

வாதாபி போர், திருவெண்காட்டு நங்கையின் மணம், சீராள தேவரின் பிறப்பு முதலியன பெரியபுராணத்தில் முற்பகுதியில் இடம் பெற்றுள்ளன. ஆனால் பாமரர் புராணத்தில் இத்தகு நிகழ்ச்சிகள் இடம் பெற்றில.

"உலகத்தில் உத்தமன் யார் தேவி
உணருவாயு ரைப்பேன் ஓமையவளே
சகல உலகமெல்லாம் சங்கரன் என்றே பூஜை
சாதியினைப் போலச் செய்வார் தையலே"

என்று சிவன் சிறுத்தொண்டரின் பக்தியைச் சோதிக்க எழுவதாக இக்கதைப்பாடல் தொடங்குகிறது. இதற்குக் காரணம் என்னவெனில், இப்புராணப் பாடல்கள் விழா நடக்கும்போது பாடப்படுவன. எனவே விழாவின் தொடக்கமான 'நகர் சோதனையிலிருந்து' இப்பாடல்கள் பாடப்படுவதால் முன்னைய வரலாற்று நிகழ்ச்சிகள் இதில் இடம் பெற்றில எனலாம்.

## சிறுமையும் பெருமையும்

பெரியபுராணம் ஓரிரு வரிகள் கூறக் கூடிய நிகழ்ச்சிகளைப் பாமரர் புராணம் பல பாடல்களில் விளக்கக்கூடியதாக அமைந்துள்ளது. (இது வாய்மொழியின் தன்மை எனலாம்)

"தனிமா மகனைத் தாதையார் கருவிகொண்டு
தலையரிவார்" – (பா. எண். 63)

என்று சீராளனைத் தலை யரியும் நிகழ்ச்சி பாமரர் புராணத்தில்

"பிடியடிக் காலைப் பிள்ளைத் துள்ளாமலே
போக்கிட உயிர்த் தாக்கிட அருக்கிறேன்
பிள்ளை என்றுமனம் பேதையை நினையாமல்

"அரிகிறேன் உடலை அணியணியாகவே
உரிக்கிறேன் தோலை உடல்கறி வேறாக
கண்ட கண்டமாகக் கால்களை வெட்டுகிறேன்
துண்ட துண்டமாகத் துடைகளை வெட்டுகிறேன்"

என்று இந்நிகழ்ச்சி விரிவாகப் புனையப் பட்டுள்ளது. பெரியபுராணத்தில் அடிகளாரும், திருவெண்காட்டு நங்கையும் பைரவர்க்கு அன்னம் படைத்த நிகழ்ச்சி ஓரிரு வரிகளில் கூறப்பட்டுள்ளது. ஆனால் கதைப்பாடலோ,

"உண்மையாய் சொல்லிவாரேன் உத்தம்ரே கேளும் சுவாமி
உண்மையைச் சொல்லுகிறேன் உள்ளங்கால் கறியீது
உற்றதை உரைக்கிறேன் ரெத்தப்பொறியல் இது
கெண்டைக்கால் இரண்டையும் உண்டைபோல் செய்தகறி
கண்டத்தின் எலும்பினைத் துண்டித்தே செய்தகறி
பிண்டத்தின் கறியெல்லாம் சுண்டலாய் வறுத்தது"

என்று விரிவாக ஒவ்வொரு கறியாக கூறி படைப்பதாக அமைக்கப்பட்டுள்ளது, இத்தகு அமைப்புகள்.

1. சீராளனை வெட்டும் போது
2. சிவன் எழுந்தருளும் போது
3. சிவனை அழைத்து வரும்போது
4. தலைக்கறி படைக்கும்போது
5. சீராளனை அழைக்கும்போது
6. சீராளன் உயிர்ப்பெற்று வரும்போது

ஆகிய இடங்களில் விரிவும் விளக்கமும் பெற்றுத் திகழ்கின்றன.

**வேறுபாடுகள்:**

பெரிய புராணத்திற்கும் பாமரர் புராணத்திற்கும் நிறைய வேறுபாடுகள் உள்ளன. பெரியபுராணத்தில் பைரவர் சாந்த ரூபமான பதில்களைக் கூறப் பாமரர் புராணத்தில் மிகுந்த சினமுடையவராகக் காட்சி தருகிறார். பைரவர் அறு திங்களுக்கு ஒரு முறை உண்பவர். உணவுண்ணும் அன்று அன்னம் படைக்க நாழிகை அதிகம் ஆனபோது,

> "மங்கையே உன்கணவன் மகாபாவி என்று
> அறியேன், சங்கடமாக பசியினால் தவிக்கும்படி
> செய்தான்பாவி, நயவஞ்சகமாகப்பேசி நாள்
> பூராவும் பசியினால் வருந்தும்படி செய்தான்.
> இனி அரை நிமிஷமாவது நாங்கள் இவ்விடம்
> தங்குவதாக இல்லை"

என்று பைரவர் சினங்கொண்டு பேசுவதாக உரையாடல்கள் அமைக்கப்பட்டுள்ளன. இத்தகு நிகழ்ச்சிகள் பெரிய புராணத்தில் இல்லை.

> "தலை இறைச்சி அமுதுக் காகாதெனக் கழித்தோம்
> என்ன
> அதுவுங் கூட நாம் உண்பதென்றார் இடர்தீர்ப்பார்"
> (பா. எண். 74)

என்று தலை இறைச்சி சமைக்காமையை அடியார் எடுத்துரைக்க, "அதுவுங்கூட யாம் உண்போம்" என்று பைரவர் கூறுவதாகப் பெரியபுராணத்தில் உள்ளது. ஆனால் பாமரர் புராணத்தில் தலைக்கறி இல்லாத கோபத்தில்.

> "இந்தகறி எந்தனுக்கு ஏனோ? அம்மா!
> இந்தகறி எந்தனுக்கு ஏனோ?

விந்தையாகச் சொல்லி வந்தாய் வேணும்என்று
கொள்வதில்லை
முந்திமுந்தி முறையாக மோசம் செய்ய நினைத்தாயே"

என்று பைரவர் சினந்து கூறுவது பெரியபுராணத்தில் இல்லை. உணவு உண்ணும்போது பைரவர் சிறுவனை அழைக்க "என் மைந்தன் இப்போது உதவான்" என்று அடியார் கூறுவர். "நாம் உண்ண அவன் வந்தால் நாடி அழையும்" – என்று பைரவர் கூறுவர். இது பெரிய புராணத்தில் உள்ள நிகழ்ச்சியாகும். ஆனால் பாமரர் புராணத்தில் "எமக்கு மைந்தன் இல்லை" என்று அடியார் கூறியதும் "நீவீர் மலடியும் மலடனுமா?" எனப் பைரவர் வினவ அடியாரும், "சுவாமி! எங்களுக்கு மைந்தன் ஒருவன் இருக்கிறான். அவன் திருமதுரைப் பள்ளிக்கூடத்தில் பாலன் வாசிக்கிறான் மதுரை எட்டாத் தொலைவில் இருப்பதால் அவனை அழைத்து வரமுடியாது சுவாமி!" – என்று கூறும் நிகழ்ச்சிகள் பெரியபுராணத்தில் இடம்பெற்றில. பெரிய புராணம் சீராளன் ஒருவனையே கூற, இது மற்றும் ஒரு சிறுவனையும் கூறுவதாக உள்ளது. இவனையே தொண்டர், பைரவர் வேண்ட அழைக்கிறார். ஆனால் வருவது சீராளன் என்பதை இக்கதைப் பாடல்கள் விளக்கும்.

சீராளன் உயிர் பெற்றவுடன் பைரவர் மறைகிறார். வந்தது சிவனே என்பதை அறிந்த அடியார், சிந்தைக் கலங்கி, காணாது திகைத்து, வீழ்ந்தார், தெருமந்தார் என்று பெரியபுராணம் கூறும். ஆனால் பாமரர் புராணம்.

"அறனடியார் என்று அலஷியம் செய்தேனே
கண்மணிகண்மணி
அய்யனும் வந்ததை அறியாமல் போனோமே
பெண்மணி பெண்மணி
பரனடியார் என்று பாவியேன் எண்ணினேன்
அய்யனே அய்யனே".

என்று பதறிய அடியார் வாளால் தன்னை மாய்த்துக் கொள்வதாகக் காட்டப்பட்டுள்ளது.

**பாமரர் பார்வைகளில் வேறுபாடு:**

உத்திராபதியார் கோயில் ஊருக்கு ஊர் (தஞ்சைப் பகுதியில்) இருப்பதால், இடத்திற்கு இடம், பாடல்கள் வேறுபடுகின்றன. சான்றாக ஒரு கோயிலில் சீராளனை அரியும் பாடல் முன்னர் காட்டப்பட்டது. இதுவே வேறோர் கோயிலில்

> "அருந்தவர் புகழ்ந்தேத்தும் பைரவர் அமுதூட்ட
> அரிந்தேன் சீராள தேவனை"

என்று பாடப்படுகிறது. இவ்வாறு பாடல்கள் இடத்திற்கு இடம் வேறுபட்டுக் காணப்படுகின்றன.

# சுவடிகளில் வனப்பூசை - பதிவும் விளக்கமும்

தமிழர்களின் சமயப் பண்பாட்டினை விளக்கும் காரணிகளுள் முதன்மையும், சிறப்பும் பெறுவன சிறு தெய்வ வழிபாட்டு முறைகளாகும். இவை மூலம் தமிழர்தம் சமய நம்பிக்கைகள், ஆழ்ந்த இறையுணர்வு, வீர வழிபாட்டு முறைகள் போல்வன வெளிப்படுகின்றன. இத்தகு சிறு தெய்வ வழிபாட்டு முறைகள் நாளுக்குநாள் அருகியும், மாறியும், சிதைந்தும் வருவது சமயப் பண்பாட்டு வீழ்ச்சிக்கு அடிகோல்வது போலாகும்.

இறை பக்திக்கு மாறாகப் பொழுதுபோக்கு அம்சங்களுக்கு முக்கியத்துவம் அளித்த காரணத்தால், புதுமை என்ற பெயரால் கொச்சைப் படுத்தப்பட்ட பல நிகழ்ச்சிகள் இவ்வழிபாட்டு முறைகளின் புனிதத் தன்மைகளைக் கெடுத்து வருகின்றன. எனவே பழமை வாய்ந்த வழிபாட்டு முறைகளைப் பாதுகாக்க வேண்டுவது அவசியமாகிறது.

சுமார் நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னர்ச் சிறப்பாக நடைபெற்ற விழாக்களுள் ஒன்று வனப்பூசை. கீழ்த்தஞ்சைப் பகுதிகளில் இவ்விழா நடைபெற்றதாகக் கூறப்பட்ட செவிவழிச் சான்று கொண்டு ஆராய்ந்த போது, அவ்விழா நடைபெறும் முறைமை பற்றிய சுவடிக் குறிப்புகள் கிடைக்கலாயின. அச்சுவடியிலுள்ள செய்திகளைப் பதிவு மற்றும் விளக்கம் தரும் நோக்கில் இக்கட்டுரை அமைகிறது.

## அமைப்பு

இருபத்தோரு தெய்வங்களுக்கு வழிபாடு செய்யும் முறைகளே இச்சுவடிகளில் அடங்கியுள்ளன. தெய்வங்களின்

இருப்பிடங்கள், படையல் பொருள்களின் எண்ணிக்கைகள், படையல் முறைகள், வரிசைகள், பலியிடுதலில் காணப்படும் மரபுகள் முதலியன பற்றிய விளக்கம் தரப்பட்டுள்ளது.

**பேறியாணவனுக்கு வனபபுசை பொடும வேபறமுறை**
(பெரியாண்டவனுக்கு வனப்பூசை போடும் விபர முறை)

**பகுதி–1**

அஙகாளமமனுக்கு கெளககு முகம் – வலது பககம. கொஞசம கெளககு – வடககுமுகம இருபததோரு அறகூ பநதிறாசா யெங்குற வாலை குருநாதசாமிககி நெ. லெ. அஙகாளமமனுககு சறியான யெடது பககம் கெளககு முகம மாறியமமனுக்கு நெலெ. பெறியமமனுககும சாமிககிம தேஙகாயில மஞசல தடவி சததி. கறகம் ரெணடு மாறியமமனுககு வேபபலை கறகம – பூ தெனனபபாளை சாததி யெளனீா மூணுககு வையிககிறது.

மேற்காட்டிய சுவடி வரிகள் மூன்று தெய்வங்களுக்கு நிலையையும், உருவத்தையும் வரையறை செய்கின்றன. அங்காளம்மனுக்குக் கிழக்கு முகமாக பீடம் (நிலை) இதற்கு வலது பக்கம் வடக்கு முகமாகப் பாலகுருநாத சுவாமிக்கும், இடது பக்கம் கிழக்கு முகமாகப் மாரியம்மனுக்கும் பீடம் ஏற்படுத்த வேண்டும். பெரியம்மனுக்கும் (அங்காளம்மன்) பாலகுருநாதசுவாமிக்கும் மஞ்சள் தடவிய தேங்காய் கொண்ட கரகமும், மாரியம்மனுக்கு வேப்பிலைக் கரகமும் உருவமாகக் கருதப்படுகின்றன. கரகங்களில் தென்னம் பாளை சாற்றி இளநீர் வைத்து வழிபடுவது மரபாகும்.

**பகுதி-2**

சாமிககி அஙசுபாககு அஞசுவெததிலை அஞசபழம அஞசுதேஙகா அஞசுமாவிளக்கு அஞசு வததி வையித துஃயெதுகக அடுபபூ வெட்டி அஞசு பானையில அஞசு

படி அறிசி பொஙகி தளுவை வையிதது அதில வெஙகாயம பழம தேஙகா வெலலம் தயிா போடுகிறது அஙகாளமமனுககு ஏழு பாககு ஏழு வெததிலை ஏழு பழம ஏழுதேஙகா ஏழு மாவிளக்கு ஏழு வததி வையிததுஃயெதுகக அடுபபூவெட்டி ஏழு பாலையில ஏழு படிஅறிசி பொஙகி தளுவை வையிதது அதில வெஙகாயம பழம தேஙகா வெலலம தயிா போடுகிறது. மாறியமமனுககு ங பாககு ங வெததிலை ங பழம ங தேஙகா ங மாவளகவு ங வததி வையிதது*யெதுகக அடுப்பூ வெட்டி ங பானையில ங படி அறிசி பொங்கி தளுவை வையிதது அதில வெஙகாயம பழம தேஙகா வெலலம தயிா போடுகிறது.

மேற்காட்டிய சுவடி வரிகள் படையல் பொருள்களின் எண்ணிக்கையை வரையறை செய்கின்றன. பாலகுருநாத சுவாமிக்கு ஐந்கு பாக்கு, ஐந்து வெற்றிலை, ஐந்து பழம், ஐந்து தேங்காய், ஐந்து மாவிளக்கு, ஐந்து பத்தி இவை களைப் படைத்து, சுவாமிக்கு நேரே ஐந்து அடுப்பு வெட்டி ஐந்து பானையில் ஐந்துபடி அரிசியைப் பொங்கலிட்ட பொங்கலைப் படைத்து, பொங்கலின் மேல் வெங்காயம், பழம், தேங்காய், வெல்லம், தயிர் இவைகளை வைத்து படையலிட வேண்டும். இந்த எண்ணிக்கை அங்காளம் மனுக்கு ஏழாகவும், மாரியம்மனுக்கு மூன்றாகவும் அமைவது மரபாகும்.

**பகுதி–3**

நடுவில தெரைபோட்டு பேறியமமனுக்கு யெதுகக வலதுபுறம் பேசசியமமனுக்கு நெலெ. யெடதுபுறம பததிறகாளயமமனுககு நெலெ யிதுககு படையல பாககு வெததலை பழம தேஙகா வததி வயிதது யேழைகாபபடி அறிசி முசசெறஙகை பிசசெறஙகை போடடு-யெதிற அடுபபூ வெடடி ஒரு பானை வையிதது

சமையல செயகிறது. ஷ பொடடையூம முடடையும, காயியிம கறுவாடும, புணணாககும கீரயும, கொழுக கடடையில வெளககு செயிது சுடடு மேறபடியெலலா சமையல செயிகிறது. இதுபோல பததிறகாளியமமனுக்கு வேரை களககாமல சமையல செயய வேணும. யிது படைககும வெபறம பேசசியமமன நெலெயில பாவாடை கெளககு மேறகாக விறிதது அதில மேறகு ஒரு யெலை, கெளககு ஒருயெலை பொடடு நெலெய ரெணடாககி சகலமும ரெணடு நெலெயிலும சறியா வையிககவும. இதுபோல பததிரகாளிககும பருமாறி தீபாரததனை செயயவும - மொதல பேசசிககு.

மேற்கூறிய மூன்று தெய்வங்களையும் திரையிட்டு மறைத்த பின்னர், பெரியம்மனுக்கு எதிரே வலது புறமாகப் பேய்ச்சியம்மனுக்கும், இடது புறமாகப் பத்ரகாளியம்மனுக்கும் நிலை ஏற்படுத்த வேண்டும். இவ்விரு தெய்வங்களுக்கும் படையல் பொருளாவது வருமாறு: பாக்கு முதலியன. முச்செறங்கை பிச்செறங்கை எனப் போட்ட ஏழாகால்படி அரிசியில் பொங்கிய பொங்கல், பெட்டைக் கோழியுடன் சமைத்த முட்டை, புண்ணாக்கும் கீரையும், கொழுக்கட்டை விளக்கு, காயும் கருவாடும்*முதலியனவாகும்.

நிலைகளில் பாவாடையைக் கிழக்கு மேற்காக விரித்து, அதில் மேற்கே ஒரு இலை, கிழக்கே, ஒரு இலையென, ஒவ்வொரு நிலையையும், இரண்டாக்கிப் படையல் பொருள் களை அதில் வைத்துத் தீபாராதனை செய்வது முறை யாகும்.

## பகுதி-4

அடுதத கெளககு நெலெ யிருளப்பசாமிககி நெலெ. யிதுககும கெளககு பெறியமமனுககும நேரே யிருளப்ப சாமிககி மசானகுழி - பளளம் உண்டாககி நாலுபுறம

மொடிடடு - ஓமகுறிபோல செயிது - பிளளையாா பெறிதா அஞசுவயிதது நெலெயாககி - அதில பொஷபம பாககு வெததிலை பழம தேஙகா வததி வையிதது - யெதிறாக அடுபபு வெடடி - சுதத புழுஙகலறிசி அஞசுபடி சமையல செயிது - சோடிசுட்டு - அவலகடலை மாசிபசுருட்டு சாறாயம வையிதது குமப பூசை போடடு - அறுத்த சாவல உப்புநீா வையிதது. துபதீபமகாடடி ஆடுபணணிசாவ வெடடி முபபூசை யிடுகிறது.

அடுத்த கிழக்கு நிலை இருளப்பசுவாமியினதாகும். இதற்கும் கிழக்கே பெரியம்மனுக்கு எதிர்புறம் இருளப்பன் மயான குழி இம்மயான குழியை, நான்கு புறமும் மேடையிட்டு ஓமக்குண்டம் போன்ற அமைப்பாகச் செய்து ஐந்து பிள்ளையார் பிடித்து வைக்க வேண்டும். இதற்குப் படையல் பொருள்களாவது: பாக்கு முதலியன. அவுல்கடலை, சுருட்டு, சாராயம், உப்புநீரில் வைக்கப்பட்ட பலிசேவல் புழுங்கலரிசிப் பொங்கல் முதலியன. ஆட்டுக்கிடா, பன்றி, சேவல் மூன்றையும் பலியிட்டு முப்பூசை செய்வது மரபாகும்.

## பகுதி-5

அதுககு கௌளககே வலதுபுறம மருதைவிறனுக்கு நெலெ - யெடதுபுறம முததாலுறாவுததனுக்கு நெலே. யிதுக்கு பாககு வெததிலை பழம தேஙகா வததி பொஸபம அவலகடலை சுருடடு கதமபபொடி சாறாயம வையிதது தூபதீபம காட்டி யெதிற அடுப்பூ வெட்டி சுதத புழுஙகலறிசி ரெணடுபடி சமையல் செயது ஆடடுகிடா வெடடி சாவலறுறுதது அநத சாவலை உப்புநீா வையிதது குமபபூசையிட்டு படைக கிறது. யிதுபோல முததாலுறாவுததனுககும செயிகிறது. சாவல அறுககுமபோது வேதம சொலலி அறுககவும்

அதற்கும் கிழக்கே (இருளப்பசுவாமி மயான குழிக்கும் கிழக்கே) வலதுபுறம் மதுரை வீரனுக்கும், இடதுபுறம் முத்தாள் ராவுத்தன் சுவாமிக்கும் நிலை. படையல் பொருள்களாவது பாக்கு முதலியன, அவல்கடலை, சுருட்டு, சாராயம், கதம்பபொடி, உப்புநீரில் வைக்கப்பட்ட பலி சேவல், பொங்கல் முதலியன. ஆட்டுக்கிடா, சேவல் பலியிட்டுக் கும்பபூசை செய்வது மரபாகும். இதுபோன்றே முத்தாள் சுவாமிக்கும் செய்ய வேண்டும். முத்தாள் சேவலை அறுக்கும்போது வேதம் சொல்லி அறுக்க வேண்டும் என்ற குறிப்பு காணப்படுகிறது.

**பகுதி -6**

> ஷெ சுததிலும யிருககும பிளளையாறுக்கு தீபாரதனை பாக்கு வெதிலை பழம தேஙகா. நாலுதிககிலும தொகுபபான யிடததில வையிதது கெளககு வாசல படியிலிருநது தெககு மேறகு வடககு கெளக கோட நிரநது தூபதீபம காடடி வரவும.

கோயிலைச் சுற்றிலும் அமைக்கப்பட்டுள்ள பிள்ளையார் களுக்கு வழிபாடு செய்யும் முறை வருமாறு: பாக்கு, வெற்றிலை, பழம் முதலியவற்றை நான்கு திசைகளிலும் வைத்து கிழக்கு வாசலிலிருந்து, தெற்கு, மேற்கு, வடக்கு திசைகளுக்குத் தீப ஆராதனைச் செய்துவர வேண்டும்.

**பகுதி–7**

> கெடாவெடடும கணககு – முதல யிருளபபனகெடா – றெணடாவது மருதை கெடா – ஙவது முததாலு றாவுததன கெடா – நாலாவது யிருளப்பன பணணீ – சாவல முன அறுதது பொலிசடடியில யிருளப்பன சாததில கொஞசம யெடுதது பணணிககி முன வையிதது பொலி விழும போது பணணீ வெட்டவும் யிருளபபன பணணீ கெடா சாவ ரெததம பிடிதது

மசானத்தில நாலுதிககும சாதம யெறிநது பொலி சட்டியை பொட்டுவிட்டு கைகால சுததி பண்ணிவநது றெண்டாவது தீபாரதனை.

பலியிடும் முறைப் பற்றிய கணக்கு: முதலில் இருளப்பன் ஆட்டுக்கிடாவையும், அடுத்து மதுரைவீரன் ஆட்டுக் கிடாவையும், அடுத்து முத்தாள் சுவாமி ஆட்டுக் கிடாவையும் முறையே பலியிட்ட பின்னர், நான்காவதாக இருளப்பன் பன்றியை வெட்டுவது மரபாகும். மூன்று சேவலை அறுத்து அதன் இரத்தத்தோடு இருளப்பன் சோற்றையும் கலந்த பலி சோற்றைப் பன்றியின் முன்னர் வைத்து பொலி விழும் போது பன்றியை வெட்டவேண்டும். இருளப்பன் பன்றி, கிடா, சேவல் இவைகளின் உதிரத்தைப் பலிசட்டியில் பிடித்து, மயானம் சென்று, நான்கு திசைகளிலும் உதிரச்சோறு எறிந்து, பலிசட்டியைப் போட்டு விட்டு, கைகால்களை நீரால் கழுவிய பின்னர்க் கோயிலை அடைய வேண்டும். இதன் பின்னர் இரண்டாவது தீப ஆராதனை நடைபெறும்

**பகுதி-8**

சாமிககிமுன பெறியமமனுககு மாறியமமனுககு பேசசியமமனுககு பததிற காளியமமனுககு யிருளபனுககு மருதைககு முததாளுககு செயிது பொனபொறநத புளளைககு மாவளககு குடுதது பிளளையாாமுதல சகலமும எடுதது விடுகுறது. விடியகாலை கறகம மூணுயெடுதது மஞசல வெளயாடி கோயிலாவது வளது பாறிவேட்டை கிடாவெட்டி தூபமடுதது யெறககி வையிதது உதிறவாதொடைதது மூணணாள கறகம செலுதத வேணடியது.

இரண்டாவது தீப ஆராதனை பாலகுருநாதசுவாமி முதல் முத்தாள் சுவாமி வரை முறையே வரிசையாக நடை

பெறும். இதன் பின்னர் அக்கோயில் உரிமையுடையோரின் பரம்பரையில் வரும் திருமணமான பெண்களுக்கு எரியும் மாவிளக்கை கொடுப்பதுடன் வழிபாடு முடியுறும். பிள்ளையார் முதல் படையல் பொருள்கள் அனைத்தையும் எடுத்த பின்னர், விடியற் காலையில் மூன்று கரகங்கள் எடுத்து வந்து மஞ்சள் விளையாட்டு விளையாடி, கோயிலுக்கு வந்தவுடன் பரிவேட்டைக் கிடா பலி கொடுத்து, தீபாராதனை செய்து உதிரவாய் துடைக்க வேண்டும். அதிலிருந்து மூன்றாம் நாள் கரகங்களை ஆற்று நீரில் விடுவதுடன் விழா நிறைவுறும்.

## பகுதி-9

பிள்ளையாா வையிககும வெபறம - யிவவளவு படையலும உளள நடககுமபடி பாதது தெகககு வடககு 'கரு' கெளககு மேறகு 'ந0' கோல செதது வறபபு போடடு நாலுபுறமும வாசபடிவிட்டு பிளளையாா 'அஅ' பிடிதது - வாசபடி காததான யிணடு நாலுவாசபடிககு 'அ' வையிககவும-அஷடதிககு பாலகா யிணடு நாலு மூலைககு 'ச' நடுமததியில ஒணணு ஆகதிக பாலகா 'அ' - சாமிககி 'ரு' பெறியம மனுககு 'எ' மாறியமமனுககு 'ங' ஆக கரு - பஞ்ச பாணடவாயிணடு 'ரு' - வலதுபுறம சதத கணணியிணடு 'எ' செதத பெறியாராகிய வீடடு தெயவம 'எ' வலதுபுறம தணடலைககாறண தலையாறியிணடு கெளககு 'உ' - தணடுகாறன கொடடுககாறன மேறககாறன 'ரு' - வலதுபுறம - ஆகாசவாணி பூமாதேவி யிணடு வடமேறகு 'உ' - சந்திரா சூறியா யிணடு தென மேறகு 'உ' - யிருளபபன மசான மேடை சுததி 'ரு' - ஆக பிளளையாா அஅ

பிள்ளையார் வைக்கும் விவரம்: மேற்கூறிய வழிபாடு முழுவதும் உள்ளே அடங்குமாறு தெற்கு வடக்காக

பதினைந்து கோல் அளவும், கிழக்கு மேற்காக முப்பது கோல் அளவும் உள்ள இடத்தைத் தேர்ந்து தூய்மை செய்து, வரப்பிட்டு, நான்கு வாசல்களைத் திறக்கவும்.

மொத்த பிள்ளையார் 88. வாயிற்படி காத்தானுக்கு எட்டு பிள்ளையாரும், அட்டதிக்கு பாலகர்களுக்கு எட்டு பிள்ளையாரும், பாலகுருநாதசுவாமிக்கு ஐந்து பிள்ளையாரும், பெரியம்மனுக்கு ஏழு பிள்ளையாரும், மாரியம்மனுக்கு மூன்று பிள்ளையாரும், பஞ்ச பாண்டவர் களுக்கு ஐந்து பிள்ளையாரும், சப்தகன்னியர்களுக்கு ஏழு பிள்ளையாரும், வீட்டுத் தெய்வத்திற்கு இருபத்தோர் பிள்ளையாரும், தண்டலைக்காரன் தலையாரிகளுக்கு இரண்டு பிள்ளையாரும், தண்டுக்காரன், கொட்டுக்காரன், மேளக்காரன்களுக்கு ஐந்து பிள்ளையாரும், ஆகாசவாணி பூமாதேவியர்க்கு இரண்டு பிள்ளையாரும், சந்திரா சூரியர் களுக்கு இரண்டு பிள்ளையாரும், இருளப்பன் மயான மேடையைச் சுற்றி ஐந்து பிள்ளையாரும் – ஆக மொத்தம் 88 பிள்ளையார்கள். (எட்டு பிள்ளையார் பற்றிக் கூறப்பட் டுள்ள பகுதி சிதைந்துள்ளது).

**கட்டுரைக்குத் தொடர்பான முதன்மைத் தகவல்கள்:**

இவ்விழா குலதெய்வ வழிபாட்டு முறையைச் சார்ந்தது. ஓர் இனம் முழுமையும் இவ்விழாவில் கலந்து கொள்கிறது. எளிமையாக நடைபெறும் விழாவைப் பால்பூசை என்றும், பன்றியைப் பலியிட்டு நடத்தப்படும் விழாவை வனப்பூசை என்றும் கூறுவர். இவ்விழா கோயிலில் நடைபெறுவதில்லை. ஊரைச் சார்ந்த வனப் பகுதியில் புதிதாக ஏற்படுத்தப்பட்ட கோயில் போன்ற அமைப்பில் நடைபெறுகிறது.

தெய்வங்களுக்கு உருவங்கள் கிடையாது. கரகம், பிள்ளையார், கல் போன்றன உருவங்களாகக் கருதப் படுகின்றன.

இது ஓர் கூட்டுத்தெய்வ வழிபாடாகும். பாலகுரு நாதர், அங்காளம்மன், மாரியம்மன் - ஒரு பிரிவாகவும், (மாமிசம் கலவாத உயிர் பலி இடம் பெறாத வழிபாடு) பேய்ச்சி, காளி, இருளப்பன், மதுரைவீரன், முத்தாள் சுவாமி - ஒரு பிரிவாகவும், (மாமிசம் கலந்த உயிர்பலி இடம் பெற்ற வழிபாடு) பஞ்ச பாண்டவர், சப்த கன்னியர் ஒரு பிரிவாகவும், வீட்டுத் தெய்வம் ஒரு பிரிவாகவும் - நான்கு பிரிவுகளாக வழிபாடு நடை பெறுகிறது.

மனிதப்பிறவியாக எண்ணப்படும் மதுரை வீரனும், இசுலாமியக் கடவுளாகக் கருதப்படும் முத்தாள் ராவுத்தர் சுவாமியும் இவ்வழிப்பாட்டில் இடம் பெறுவது சிறப்பிற் குரியது. முத்தாள் சுவாமிக்குச் சேவல் அறுக்கும்போது வேதம் சொல்லி அறுக்க வேண்டும் என்பதும் குறிப்பிடத் தக்கது.

இருபத்தோர் பந்தி முறை என்பதில் பஞ்சபாண்டவர் களும், சப்த கன்னியரும் இடம் பெற்றுள்ளனர். மேலும் வீட்டுத் தெய்வத்திற்குச் செய்யும் வழிபாட்டு முறையும், மறுநாள் நடைபெறும் ஏவல் கருப்பு பெரிய சுவாமி வழிபாட்டு முறையும் கூறப்படவில்லை.

விழாவின் உச்சநிலை பன்றி பலியிடப்படுவதேயாகும். மூன்று ஆண்டுகளுக்கு முன்னரே விழா நடைபெறும் நாள் நிர்ணயம் செய்யப்படும். பன்றிக்குட்டி பிறந்த மூன்றாம் நாள் முதலாக அதனை எடுத்து, மூதாட்டி ஒருத்தி மூலமாகச்சைவ உணவு கொடுத்து வளர்த்து வரவேண்டும்.

அதற்கு மூன்று வயது முடியும் தறுவாயில்தான் பலியிடுவது மரபாகும். ஒரே வெட்டில் பன்றியின் கழுத்துத் துண்டிக்கப்படவில்லை என்றாலும், இடுகாட்டில் எறியப் படும் பன்றியின் உதிரம் கலந்த உதிரச்சோற்றைத் தேவதைகள் பெற்றுக் கொள்ளாமல், சோறு கீழே விழுந்தாலும் விழாவில் குறைபாடு நேர்ந்துள்ளது என்று நம்பப்படும்.

சுவடியில் இருபத்தோர் தெய்வங்களையும் உள்ளடக்கிப் பதினெட்டு வழிபாட்டுப் பாடல்கள் காணப் படுகின்றன. இப்பாடல்கள் இன்றளவும் பாடப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கது.

பெரியாண்டவனுக்கு வனப்பூசை போடும் விவர முறை - என்ற தொடர் சுவடியின் தலைப்பாக உள்ளது. ஆனால் பெரியாண்டவன் பற்றிய வழிபாடே அதில் கூறப்படவில்லை. இருளப்பனே பெரியாண்டவன் என்பர் ஒருலர். வேறு சிலர் பெரியாண்டவன் அருவ நிலையை உடையவர், அவருக்குத் தனியே சந்நிதி கிடையாது, கோயிலுக்கு எல்லையாக விளங்குபவர் அவரே என்றும் கூறுவர். சன்னத நிலையில் (தெய்வம் ஏறிய நிலையில்) இரும்பு முள் பதித்த பாதவடியைப் போட்டுக்கொள்ளும் தகுதியை எவர் பெறுகிறாரோ அவரையே பெரியாண்டவ னாக வழிபடுவர். ஆயக்காரன்புலம் (நாகப்பட்டினம் பகுதி) போன்ற ஊர்களில் நொண்டி முனி, இலாட சந்நியாசி முதலிய இருபத்தோர் பந்தி முறைகளை உடைய பெரியாண்டவன் கோயில் இருப்பதாகவும் கூறப்படுகிறது.

## சொற் பொருள் விளக்கம்

| | | |
|---|---|---|
| 1. | அஞுசு (அஞ்சு) | ஐந்து |
| 2. | அறசுபநதிறாசா (அரசுபந்திராசா) | பாலகுருநாதர், இருபத்தோர் தெய்வங்களுக்கும் முதன்மை யானவர். விநாயகர். |
| 3. | இருபததோரு அறசூ பநதி (இருபத்தோர் அரசு பந்தி) | பாலகுருநாதர் முதலான இருபத்தோர் தெய்வங்கள்; பாலகுரு நாதர், அங்காளம்மன், மாரி யம்மன், பேய்ச்சியம்மன், காளி யம்மன், இருளப்பன், மதுரை வீரன், முத்தாள் ராவுத்தன்; பஞ்ச பாண்டவர் ஐவர், சப்த கன்னியர் எழுவர், பெரி யாண்டவன் ஆக இருபத்தோர் தெய்வங்கள் |
| 4. | உதிரவா தொடைடதது (உதிரவாய் துடைத்து) | பலி முதலிய வெறியாட்டு நிகழ்ச்சிகளால் உக்ரம் கொண்ட தெய்வத்தை அருள் நிலைக்குக் கொண்டு வருதல். |
| 5. | களகம (கரகம்) | கிராமத் தெய்வ உருவங்களுள் ஒன்று. நீர் நிறைந்த வேப்பிலை மற்றும் மலர்களால் அலங்கரிக்கப் பட்ட குடம், நடுவே எலுமிச்சம் பழத்துடன் கூடிய சூலம் குத்தப் பட்டிருக்கும். |
| 6. | கெளககு (கெளக்கு) | கிழக்கு. |
| 7. | சாமிககி (சாமிக்கி) | சுவாமிக்கு |
| 8. | சாவல (சாவல்) | சேவல் |

| | | |
|---|---|---|
| 9. | செதத பெறியோர் (செத்த பெரியோா) | இறந்து போன மூதாதைகளைக் குறித்து வணங்கப்படும் தெய்வம். |
| 10. | சுததி (சுத்தி) | தூய்மை செய்து, வீரம்சுத்தி பூரம் சுத்தி என்பது சித்த மருத்துவ வழக்கு. |
| 11. | தளுவை | தளியல்-கூட்டுப் படையல். பல வகையான உணவுப்பொருள் களைப் படைத்தல். |
| 12. | தெரை | திரை |
| 13. | தெககு (தெக்கு) | தெற்கு |
| 14. | தீபாரதனை | தீப ஆராதனை. |
| 15. | தேஙகா (தேங்கா) | தேங்காய் |
| 16. | நெலெ | நிலை. தெய்வத்தை நிலை நிறுத்தும் பீடம்.சதுரவடிவமாக மூன்று முதல், ஒற்றை எண்ணிக் கையில் படிகள் வைத்து அமைக்கப்படும் பீடங்கள். |
| 17. | பனனி (பண்ணி) | பன்றி |
| 18. | பாறிவேடடை கிடா (பாறி வேட்டை கிடா) | பரிவேட்டை—வேடுபரி. பரி – குதிரை. குதிரை வாகனத்தில் சென்று வேட்டையாடி வந்த பின்னர் வெட்டப்படும் ஆட்டுக் கிடா. அல்லது குதிரை வாகனத் தின் முன்னர் வெட்டப்படும் கிடா. |
| 19. | பொலிசடடி (பொலிசட்டி) | பலிசட்டி. உதிரச் சோற்றை வைத்து மயானத்திற்கு எடுத்துச் செல்லும் மண் பாத்திரம். |

| | | |
|---|---|---|
| 20. | பொலிவிழும போது (பொலி விழும் போது) | உதிரச் சோற்றை மேலே எறிந்து, அது கீழே விழும் போதும். பொலி–கூட்டி வைத்த பொருள் (உருண்டையாகப் பிடித்த சோறு) |
| 21. | முசசெறஙகை பிசசெறஙகை (முச்செறங்கை பிச்செறங்கை) | நாட்டு வழக்கில் இருந்து வந்த ஒரு பழக்கம் பொங்கல் பானையில் அரிசியைப் போடும்போது உள்ளங்கையால் அள்ளி ஒரு முறையும், புறங்கையால் அள்ளி ஒரு முறையும், மாறி மாறி போடுவது |
| 22. | மஞசள வெளயாடடு (மஞ்சள் வெளயாட்டு) | விழாவின் இறுதி நிகழ்ச்சியைக் குறிக்கும் மஞ்சள் விளையாட்டு. மஞ்சள் கலந்த தண்ணீரைக் கொண்டு மனிதர் மீதும் தெய்வத்தின் மீதும் ஊற்றி விளையாடும் விளையாட்டு. |
| 23. | மசானகுழி | மயானக்குழி அல்லது மயானக் குண்டம். |
| 24. | மாவளக்கு (மாவளக்கு) | மா விளக்கு. மா–மாவு |
| 25. | வெததிலை (வெத்திலை) | வெற்றிலை |
| 26 | வேபறம (வேபறம்) | விவரம் |

# சிறுதெய்வ வழிபாட்டு மரபுகள்

## முன்னுரை:

தமிழர் சமயக் கொள்கையை ஆராய்ந்திடப் பெரிதும் துணை செய்வன சிறுதெய்வ வழிபாட்டு மரபுகளாகும். சைவ, வைணவச் சமய மரபுகள் ஆராயப்பட்ட அளவிற்குச் சிறுதெய்வச் சமய மரபுகள் விரிவான முறையில் ஆராயப் படாததோடு, அத்தெய்வங்கள் தாழ்தரமுள்ள தெய்வங்கள்[1] எனப் புறக்கணிக்கப்பட்ட காலமும் உண்டு. தமிழ்ச் சமுதாயத்தில் பெரும்பான்மையரால் வணங்கப்பட்டு வரும் வழிபாட்டு மரபுகளை நீக்கித் தமிழ்ச் சமய மரபுகளை ஆராய்வதும் வகுப்பதும் முழுமை பெறாது என்றுதான் கூறுதல் வேண்டும். சிறு தெய்வ வழிபாட்டு மரபுகளை ஆழமாகவும் அகலமாகவும் ஆராய்வதன் மூலம் தமிழர்களின் தொன்மைக் காலச் சமயத் தொடர்போடு கூடிய பண்பாட்டுக் கூறுகள் வெளிப்படுவதற்கு வாய்ப்புக்கள் இருக்கின்றன.

தவிரவும், இரண்டாம் உலகப் பெரும் போருக்குப் பின்னர்ப் பொருளாதார முதன்மைச் சமுதாயம் அமைந்த காரணத்தினால், சமயம் பின்னுக்குத் தள்ளப்பட்டு அதன் வீறு குன்றியிருக்கும் இக்காலக் கட்டத்தில் மூத்த தலைமுறையினரிடம் காணப்படும் சமய உணர்வும், நம்பிக்கையும் இளைய தலைமுறையினரிடம் காணப்பட வில்லை. மேலும், இருபது முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் நடைபெற்ற பத்தி உணர்வோடு கூடிய வழிபாட்டு முறைகள் பலவிடங்களில் வழக்கொழிந்தன. நடைபெறும் சில வழிபாட்டு முறைகளும் கேளிக்கைகளுக்கு முதன்மை கொடுக்கும் காரணத்தினால் தொன்மைத் தன்மையை இழந்து நிற்கின்றன.

எனவே, மேற்கூறிய இரண்டு காரணங்களையும் கருத்திற் கொண்டு, தொன்மையோடு கூடிய சிறுதெய்வ வழிபாட்டு முறைகளை, மூத்த தலைமுறையினரின் உதவியோடு பதிவு செய்து ஆராய வேண்டுவது விரைவோடு கூடி வேண்டப்படுவதாகிறது.

## பண்டைத் தொடர்பு:

தமிழர்கள் வழிவழியாகப் போற்றி வரும் சமய மரபுகளில் காலவாரியாகச் சில மாற்றங்கள் ஏற்பட்ட போதிலும், அவை பழைமைத் தொடர்பினை முற்றுமாகத் துறந்துவிடவில்லை என்பது இக்காலச் சிறுதெய்வ வழிபாட்டுச் சடங்குகளை நோக்கும்போது தெளிவாகிறது. இப்பழைமைத் தொடர்பினை உருவ அமைப்பிலும் பலியிடு முறையிலும், இசை வழிபாட்டிலும் காணமுடிகிறது.

## உருவ அமைப்பு:

பண்டைத் தமிழர்கள் தாம் வணங்கிய தெய்வங்கட்கு இதுதான் உருவமென்று வரம்புகட்டி வடிவமைத்துக் கொண்டதில்லை. இயற்கையை நோக்கிய வழிபாடும் பலிமுறைகளுமே மேற்கொள்ளப்பட்டன.[2] பிற்காலத்தில் உருவ வழிபாட்டின் தேவையை உணர்ந்தபோது கற்பனை கலவாத குறியீட்டு வடிவங்கள் ஏற்படலாயின. எண்ணெயிட்ட சிறுகற்கள் சிறு சதுரமான மண் பீடங்கள், முகம் மட்டும் அமைந்திருக்கும் பீடங்கள், ஓட்டுச் சிலைகள் எனப் பொதுவாகச் சிறுதெய்வ உருவங்கள் வரையறை செய்யப்பெறுகின்றன.[3] இவற்றோடு வேறுசில சிறப்பு வடிவமைப்புகளும் உள்ளன. அவை வருமாறு.

## மண் கூம்பு வடிவம்:

மண் பிள்ளையார் என்றழைக்கப்படும் இவ்வுருவ அமைப்பு எல்லாச் சிறுதெய்வங்களுக்கும் ஏற்றதொரு பொது உருவமாகக் கருதப்படுகிறது. இது சில இடங்களில்

எண்ணிக்கை அடிப்படையில் அமைக்கப் படுவதுண்டு. சான்றாக,

> பிள்ளையார் வையிக்கும் வெபறம் பிள்ளையாா
> அஅ பிடிதது வாசபடி காததான யிணடு நாலு
> வாசபடிக்கு அ வையிக்கவும் அஷ்டதிக்கு பாலகா
> யிணடு நாலுமூலைக்கு ச நடுமததியில ஒனன
> ஆக அ சாமிககி ரு பெறியமமனுக்கு எ மாறியம
> மனுக்கு ங ஆக கரு...[4]

மேற்காட்டிய சுவடிக் குறிப்பிலிருந்து வனப்பூசை என்ற சிறுதெய்வ விழாவின் போது 88 பிள்ளையார் செய்யப்படும் என்பதும், வாயிற்காப்போனுக்கு எட்டுப் பிள்ளையாரும், அட்டதிக்குப் பாலகருக்கு எட்டுப் பிள்ளையாரும், பாலகுருநாதசாமிக்கு ஐந்து பிள்ளையாரும், அங்காளம்மனுக்கு ஏழு பிள்ளையாரும், மாரியம்மனுக்கு மூன்று பிள்ளையாரும் என இவ்வாறாக 21 தெய்வங்களுக்கு 88 பிள்ளையாரை வைத்து வழிபாடு நடத்தப் பெறும் என்பதும் அறியமுடிகின்றன. மண் பிள்ளையார் மட்டுமன்றி மஞ்சள், சாணம் இவற்றாலும் பிள்ளையார் செய்யப்படுவதுண்டு.

**கருவி உருவம்:**

சூல வடிவங்கள், சுக்குமாத்தடி, ஆணித் திருவடிகள் முதலியன இவ்வகையுள் அடங்குவனவாகும். சூல வடிவம்-திரிசூலம், வேல் சூலம், கொழு சூலம் என்னும் மூன்று வகையான அமைப்புகளை உடையது. மாரியம்மன், காளியம்மன், வீரனார், ஐயனார், முனியன், கன்னிமார் முதலிய தெய்வங்களின் உருவங்களாக இச்சூல வடிவம் கருதப்படுகிறது. சுக்குமாத்தடி மதுரை வீரனுக்கும், ஆணித்திருவடிகள் இருளப்பசாமிக்கும் உருவங்களாகும். இத்தெய்வங்கள் குறித்த வழிபாட்டுப் பாடல்களில் வரும் வண்ணனைப் பகுதியில் இக்கருவிகள் சிறப்பிக்கப்படுகின்றன

சான்றாகப் பதினெட்டாம் படியார் சாமியின் உருவமாக அரிவாள் கருதப்படுகிறது. இந்த அரிவாளின் சிறப்புக் கருத்து பதினெட்டாம் படியார் வழிபாட்டுப் பாடலில் வரும் பகுதி வருமாறு:

> கீத்தருவாள் கைபிடித்துத் திலும்புமைய்ய இந்தமுகம்
> வெள்ளிப் புடியருவாள் விலை மதியா வீச்சருவாள்
> தங்கப் புடியருவாள் தவம் பெற்ற வீச்சருவாள்
> வீச்சருவாள் கண்டல்லோ விலகிப்போம்
> பேய்களெல்லாம்...[5]

என்ற பாடல் வரிகள் மேற்கூறிய கருத்தைத் தெளிவுறுத்தும்

**கரக வடிவம்**

கரக வடிவம் – காளியம்மன், மாரியம்மன், காத்தவராயன், மதுரைவீரன் முதலிய தெய்வங்களுக்குரிய வடிவமாகும்.

> பெரியமமனுக்கு சாமிககிம தேஙகாயிலே
> மஞ்சல தடவி சததி சறவம ரெணடு மாறியமமனுக்கு
> வேப்பிலை கறவம் பூதென்னம பாள சாததி யெளநீர்
> மூணுக்கு வையிககிறது.[6]

என்ற சுவடிக் குறிப்பில் கரகத்தின் வடிவம் கூறப்பட்டுள்ளது. இரண்டு வகையான கரக அமைப்புக்கள் உள. ஒன்று, மஞ்சள் தடவிய தேங்காயைக் கொண்டு கும்ப வடிவில் அமைக்கப் படுவது; மற்றது, வேப்பிலையை கொண்டு செய்யப்படுவது. கரகத்தின் மீது தென்னம்பாளையைச் சாற்றுவதும் இளநீர் வைத்து வழிபடுவதும் மரபாகும். தவிரவும் எலுமிச்சம் பழங்களை வரிசையாகக் கோத்து அமைக்கப்படும் கரக வடிவமும் உண்டு. மணிகளாலும், கண்ணாடிகளாலும் ஆக்கப்பெற்ற கரகம், கரகாட்டம் எனப்படும் நாட்டுப்புற நாட்டியத்திற்காகப் பயன்படுகிறது.

## இயற்கைச் செடி கொடிகள் இணைந்த செயற்கை வடிவம்

மரவழிபாடு என்பது பண்டைத் தமிழர்களின் சமய மரபுகளில் ஒன்றாகும். 'நறுஞ்சினை வேங்கை நன்னிழற் கீழோர், தெய்வங் கொள்ளுமின் சிறுகுடியீரே' என்ற சிலப்பதிகார அடிகள்[7] இக்கருத்திற்குச் சான்று கூறுவனவாக உள்ளன. மரத்தடியில் வழிபாடு செய்வதும் மரத்தையே வழிபாடு செய்வதும் தமிழ்ச் சமய மரபாகும். இம்மரபினை இக்காலக் காமன் வழிபாட்டின் மூலம் அறியமுடியும். கரும்பு, வாழைக்கன்று, நாணல், ஆமணக்குச் செடி மாவிலை முதலிய இயற்கைத் தாவரங்கள் இணைந்த இணைப்பையே காமன் தெய்வமாக மக்கள் கருதுகின்றனர் உருத்திராபதியார் கோயிலிலுள்ள அத்திமரமும், மாரியம்மன் கோயிலுள்ள வேப்பமரமும், முனியன், ஐயனார் கோயில் களிலுள்ள ஆலமரங்களும் தெய்வத்தன்மை உடையவனாக மக்களால் இன்றளவும் கருதப்படுகின்றன.

## வழிபாட்டில் பலியிடுதல்

சங்க காலந்தொட்டே இறைவழி பாட்டில் பலியிடுதல் இடம் பெற்று வருகிறது வனப்பூசை விழாவின் போது பலியிடப்படும் வரைமுறை பற்றிய சுவடிக் குறிப்பொன்று உள்ளது.

> கெடா வெடடும கணககு – முதல யிருளபபனகெடா–
> றெணடாவது மருதைகெடா – ஙவது முததாளு
> றாவுததரு கெடா – நாலாவது யிருளபபன பனனீ–
> சாவல ங அறுதது யிருளபபன சாதத்திலே
> கொஞ்சம யெடுதது பனனீக்கு முன வையிதது
> பொலி விழும போது பனனீ வெடடவும் – யிருளபபன
> பனனீ கெடா சாவ ரெததம் பிடித்து மசானத்திலே
> நாலுதிககும் சாதம யெறிந்து பொலி சட்டி பொட்டு
> விடடு வறவும் ..[8]

வனப்பூசை விழாவின்போது 21 தெய்வங்களுக்கு வழிபாடு நடத்தினாலும் அவற்றுள் மூன்று தெய்வங்களுக்கு மட்டுமே பலியிடுதல் நடைபெறுகிறது. இந்நிகழ்ச்சி மூன்று கூறுகளைக் கொண்டது. இருளப்பசாமி, மதுரைவீரன், முத்தாள் ராவுத்தர்சாமி ஆகிய மூவருக்கும் ஆட்டுக் கடாக்கள் பலியிடப்படுவது முதற்கட்ட நிகழ்ச்சியாகும். இரண்டாவது கட்ட நிகழ்ச்சி இருளப்பனுக்குப் பன்றியைப் பலியிடும் நிகழ்ச்சியாகும். மூன்று சேவலை அறுத்து அவற்றின் குருதி யோடு இருளப்பன் பலிச்சோற்றையும் கலந்து பன்றிக்கு முன் வைத்து (பலிச்சோற்றை மேலே எறிந்து) அது கீழே விழும்போது பன்றியை வெட்ட வேண்டும். பன்றி, கடா, சேவல் இவற்றின் குருதியைப் பலிச்சட்டியில் பிடித்து, மயானத்திற்கு எடுத்துச் சென்று நான்கு திசைகளிலும் உதிரச்சோறு எறிந்து பலிச்சட்டியை உடைத்துவிட்டு வருவது இறுதி நிகழ்ச்சியாகும்.

**சில விதிமுறைகள்**

ஆட்டுக்கடா, எருமைக்கடா, பன்றி, சேவல், சூலாடு முதலியன பலியிடும் உயிர்களாகக் கருதப்படுகின்றன. உயிர்ப்பலிக்குப் பதிலாகப் பூசணிக்காய், எலுமிச்சப்பழம் முதலியனவும் பலியிடப்படுகின்றன. பலியிடும்போது ஒரே வெட்டில் தலை துண்டிக்கப்படவேண்டும் என்பதும், பலிப் பொருள் தலையசைத்து அனுமதி கொடுத்த பின்னரே வெட்ட வேண்டும் என்பதும் நம்பிக்கையாகக்கடைப்பிடிக்கப் படுகின்றன. பலியிடப்பெறும் கடா, பன்றி முதலியன பிறந்த மூன்றாம் நாள் முதலாகச் சைவ உணவளித்து வளர்த்து வருவதோடு அவற்றை இறைவனுக்கு ஒப்பாக மதிக்க வேண்டும் என்பதும் மரபாகும். அறுத்தல், வெட்டுதல், கழுத்தில் துவாரமிடுதல், சூலத்தால் குத்துதல் முதலிய முறைகளால் பலி நிறைவேற்றப்படுகிறது.

## வழிபாட்டில் இசைப் பாடல்கள்

இறைவழிபாட்டில் இசைப் பாடல்கள் இடம்பெறுவது என்பது பண்டைத் தமிழர்க்கு இசைந்த ஒன்றாகும். நடுகல் வழிபாட்டிற்கு இலக்கணம் கூறும் தொல்காப்பியர் வாழ்த்தல் என்ற துறையைக் குறிப்பிடுவர். இதற்குப் பழிச்சுதல் என்று பொருள் கொள்வர் இளம்பூரணர்.[9] பெயரும் பீடும் கூறி வாழ்த்துவதே பழிச்சுதல் என்றழைக்கப்படும், இம்மரபினை இன்றைய சிறுதெய்வ வழிபாட்டுப் பாடல்களில் காணமுடிகிறது. பொதுவாகச் சிறு தெய்வ வழிபாட்டுப் பாடல்களை, விழாக்காலப் பாடல்கள் அல்லது வழிபாட்டோடு நேரடித் தொடர்புடைய பாடல்கள், உடுக்கைப் பாடல்கள், தாலாட்டுப் பாடல்கள், ஒப்பாரிப்பாடல்கள் என்று நான்கு வகைகளாகப் பிரிக்கலாம்.

## விழாக்காலப் பாடல்கள்

1. காமன் விழாப் பாடல்கள், இவை தர்க்கப் பாடல்கள், (இரதி மன்மதன் தர்க்கப் பாடல்கள், இரதி சிவன் தர்க்கப் பாடல்கள்) காமதகனப்பாடல்கள், மூன்றாங் குழிப் பாடல்கள், இலாவணிப் பாடல்கள் என நான்கு வகைப்படும். 2. அன்னப்படையல் விழாப் பாடல்கள். இவை நகர்ச்சோதனைப் பாடல்கள், சீராளப் பாவையை அரியும் பாடல்கள், அன்னப்படையல் பாடல்கள், தர்க்கப் பாடல்கள் என நான்கு வகைப்படும், 3. படுகள விழாப்பாடல்கள். இவை பாரதப் போர் பற்றிய நிகழ்ச்சிகளை விளக்கும் பாடல்களாகும். மயானச் சூறைப் பாடல்களும் முளைப்பாளி விழாப்பாடல்களும் இவ்வகையுள் அடங்குவனவாகும். விழாவின் ஒவ்வொரு சடங்கும் இப்பாடல்களைப் பாடியே நடத்தப் பெறுவதனால் வழிபாட்டோடு நேரடித் தொடர்புடைய பாடல்கள் என்று இவற்றைக் கூறுவதற்கியலும்.

**உடுக்கைப் பாடல்கள்:**

வழிபாட்டிற்கு முன்னரோ அல்லது பின்னரோ, வாரக் கிழமைகளிலோ, விழாக்காலங்களிலோ உடுக்கையை அடித்து இறைச்சக்தி வேண்டிப் பாடப்படும் பாடல்களை உடுக்கைப் பாடல்கள் எனலாம். இவை புராண வரலாறு கூறுவது, அடியார் வழிபாடு பற்றியது, குறியழைப்பது என்ற மூவகையுள் அடங்குவனவாகும்.

**தாலாட்டுப் பாடல்கள்:**

மாரியம்மன் கோயில்களில் பாடப்படும் மாரியம்மன் தாலாட்டுப் பாடல்கள் இவ்வகையுள் அடங்கும்.

**ஒப்பாரிப் பாடல்கள்:**

காமன் விழாவில் பாடப்பெறும் இரதியின் ஒப்பாரிப் பாடல்களும், படுகள விழாவில் அரவானை மணந்து பின்னர்க் களப் பலியில் அவனை இழந்த பேடியர் பாடும் ஒப்பாரிப் பாடல்களும் இவ்வகையினவாகும்.

இப்பாடல்களில் இடம்பெறும் செய்திகள் வருமாறு: கற்பனை வாய்ந்த இயற்கையிறந்த உருவ வண்ணனைகள், செயற்கரிய இறைச்செயல்கள், தம் குலங்காத்திடவும் பகையை அழித்திடவும் வேண்டி அடியார் வேண்டும் முறையீடுகள், புராண இதிகாசச் செய்திகள், தீ நிமித்தங்கள் மற்றும் நன்னிமித்தங்கள், தொன்மை வாய்ந்த நம்பிக்கைகள், சமுதாயப் பூசலைத் தெரிவிக்கும் சான்றில்லாத சில செய்திகள் முதலியன இப்பாடல்களிலிருந்து பெறப்படுகின்றன.

**நம்பிக்கைத் தொடர்பு:**

காரணம் தெரியாத முடிவுகள், புராணக் கதைகள், பரம்பரையாக வந்த கொள்கைகள் இவற்றை விலக்கி விட்டால் சமயம் என்பதே இல்லாமல் போய்விடும்.[10]

நம்பிக்கை என்ற அடிப்படையில்தான் சமயக் கொள்கைகளே எழுந்து நிற்கின்றன. பரம்பரை பரம்பரையாகச் சந்ததிக்கரை தொட்டு, ஆற்றொழுக்காக இந்நம்பிக்கைகள் வருவதால்தான் இவை மரபுகளின் முத்திரை கொண்டு விளங்குகின்றன. இத்தகு நம்பிக்கைகளின் உறைவிடமாக விளங்குவன சிறுதெய்வக் கோயில்கள் என்றால் மிகையாகாது.

## கடவுளை அழைத்தலும் குறிகேட்டலும்:

பெருந்தெய்வ வழிபாட்டைக் காட்டிலும் சிறுதெய்வ வழிபாட்டில் மக்கள் ஒன்றிப் போதற்கு அடிப்படைக் காரணியாக விளங்குவது இறைச்சத்தி தோன்றி அருள் பாலிக்கும் என்ற சமய நம்பிக்கையேயாகும். உடுக்கை வாசிக்கும் குறிக்காரப் பூசாரிகள் மரபுவழி இறையுணர்வால் மந்திரச்சொல் ஆக்கம் பெற்றவர்கள்; உடுக்கையொலி எழுப்பிய அளவிலேயே இறைவன் தம்மீது ஏறியதாகப் பரவசமெய்தி ஆவேசம் வர அருள் பெற்றவர்கள் உடுக்கையொலியோடும் கூட இறைவனை வருந்தியழைக்கும் பாடல்களையும் பாடி இறைச்சத்தி அழைக்கப்படுகிறது.

சொல்லோ தவறாது சோதனையோ மங்காது
சோதனைக் காரி சுகந்தாரும் மாமுண்டி
வாரும் வலதுபுறம் தாரும் திருவாக்கை
ஆசனம் போட்டு வைத்தேன் அமரும் வலதுபுறம்...11

என்னும் இப்பாடல் இறைச்சத்தி மெய்யின்கண் தோன்றி வெளிப்படும் உச்ச நிலையைப் புலப்படுத்துவதாகும். இறைச்சத்தி ஏறிய நிலையில் பூசாரிகள் கூறும் சொற்கள் குறிகூறல் அல்லது குறிகேட்டல் என்று கூறப்பெறும். சிறு தெய்வங்கள் அனைத்தும் பூசாரிகளின் மேல் தோன்றி அருள் கூறும் தன்மையுடையனவாகும். வழிபாட்டின் போது தெய்வம் தோன்றியே ஆக வேண்டும் என்னும் உறுதியோடு கூடிய நம்பிக்கையுடையவர் தமிழர்.

பூசாரியின்மேல் தெய்வம் தோன்றி அருள் செய்யாத சிறுதெய்வ வழிபாடு மிகக்குறைவு.

பிணியால் பீடிக்கப்பட்டவர்கள், பொருள்களைக் களவில் இழந்தவர்கள், மனநோய் உடையவர்கள், பேய் முதலிய ஆவிகளின் ஆளுகைக்குட்பட்டவர்கள், சூனியம் முதலிய செய்வினைகளால் குடும்பத்தில் குழப்பங்களுக்கும் இழப்புக்களுக்கும் ஆட்பட்டவர்கள் முதலியோர் கடவுளை அழைத்துக் குறிக்கேட்பதன் மூலம் தம்முடைய குறைகள் தீர்ந்திடத் தக்க வழிமுறைகளை அறியமுடியும் என்று நம்புகின்றனர்.

**வழிபாட்டில் அருஞ்செயல்கள்:**

வழிபாட்டின்போது இறைச்சத்தி ஏறிய நிலையில் மனிதர்கள் நிகழ்த்தும் சில செயல்களே அருஞ்செயல்கள் எனப்படும். இச்செயல்களைத் தெய்வங்களே நேரில் தோன்றி நடத்துகின்றன என நம்பப் படுகிறது. ஆணித்திருவடிகளை அணிதல், சாட்டையால் அடித்துக் கொள்ளுதல், குருதியைக் குடித்தல், குடல் ஏந்துதல், தீமிதித்தல் போன்றன குறிப்பிடத்தக்க அருஞ்செயல்களுள் சிலவாகும். கூர்மையான இரும்பு ஆணிகள் பதித்த திருவடிகளை அணிந்து வருவது இறைச் செயலாகக் கருதப்படுகிறது. தெய்வம் ஏறிய பூசாரி இத் திருவடிகளை அணிந்து கையில் சாட்டையை ஏந்தும் போது இருளப்ப சாமியே நேரில் வந்ததாக மக்கள் வழிபடுவர். பத்தரகாளியம்மன் வழிபாட்டின் போது சேவற்கோழியின் கழுத்தை முறித்துக் குருதியைக் குடிப்பதும், வாயினால் சேவலைக் கௌவிச் செல்லுதலும் மயானச் சூறை விழாவில் ஆட்டுக்குடலை வாயில் ஏந்திச் செல்லுதலும், இறையருளைப் புலப்படுத்துவன வாகவுள்ளன. மாரியம்மன், காளியம்மன், திரௌபதியம்மன் கோயில்களில் நடைபெறும் தீமிதி விழாவின் போது

எண்ணற்ற மக்கள் தீ மிதித்தலில் கலந்து கொள்வதும் அருஞ்செயலாக மதிக்கப்படுகிறது.

## வழிபாட்டில் நேர்த்திக் கடன்கள்

நம்பிக்கைகளுக்கும் நேர்த்திக் கடன்களுக்கும் நெருங்கிய தொடர்புண்டு. இறைவன்மீது கொண்டுள்ள நம்பிக்கையின் அடிப்படையில்தான் நேர்த்திக் கடன்கள் அளிக்கப் பெறுகின்றன.[12] இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையே நடைபெறும் பண்ட மாற்றுமுறை என்றுகூட இதனைக் கூறலாம். சோதனைக்குட்பட்டவர்கள் அச் சோதனையிலிருந்து மீட்சியளித்த தெய்வங்களை மகிழ்விக்க வேண்டி அளிக்கும் பொருள்களே நேர்த்திப் பொருள் களாகும்.

ஆருகடன் நின்றாலும் மாரிகடன் ஆகாது
மாரிகடன் தீர்த்தவர்க்கு மனக்கவலை தீருமம்மா ...[13]

என்ற நாட்டுப்புறப் பாடல் இந்நேர்த்திக் கடன்களைத் தவறாது நிறைவேற்ற வேண்டுமென்பதை வலியுறுத்தும். தம்மையே வருத்திக் கொள்ளும் நேர்த்திக் கடன்கள், பொருள்களாக அளிக்கப்பெறும் நேர்த்திக் கடன்கள், உயிர்ப்பலியாகக் கொடுக்கப்படும் நேர்த்திக் கடன்கள் என நேர்த்திக் கடன்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம். அலகு குத்திக் கொள்ளுதல், உடல் முழுவதும் கம்பிகள் குத்து மாறு அமைக்கப்பட்ட அலகுக் காவடியைச் சுமத்தல் தீ மிதித்தல் முதலியன முதல்வகைநேர்த்திக் கடன்களாகும். கண்மலர் (கண்ணடக்கம்) வாங்கிச் சாத்துதல், தலை கால் இவை போன்ற உறுப்புக்களைச் செய்து அளித்தல், நெல் வாரி இறைத்தல். சீராளப் பாவை செய்து கொடுத்தல், தொட்டில் கட்டுதல், பாடை கட்டி இழுத்தல் முதலியன இரண்டாம் வகை நேர்த்திக் கடன்களைச் சேர்வனவாகும். சேவல் ஆட்டுக்கடா, பசு, புறா முதலியவற்றை உயிரோடு விடுதல், சேவல் ஆட்டுக்கடா முதலியவற்றைப் பலிக்கு

விடுதல் போன்றன மூன்றாம் வகை நேர்த்திக் கடன்களைச் சேர்வனவாகும்.

**சில முடிவுகள்:**

1. தெய்வ உருவ அமைப்பைப் பொருத்தமட்டில் ஒரு சீரற்ற தன்மை காணப்படுகிறது. கட்டுரையில் கூறப்பட்ட நான்கு பிரிவுகளிலுள்ள உருவ அமைப்புகள் எல்லாத் தெய்வங்களுக்கும் உரிய பொது உருவமாகவே அமைந்துள்ளன. சான்றாகச் சூலவடிவம் மண்பிள்ளையார் வடிவம், கரக வடிவம் ஆகிய மூன்று வடிவங்களும் மாரியம்மனுக்கும் காளியம்மனுக்கும் உரிய வடிவங்களாகக் கருதப்படுகின்றன. மரவழிப்பாட்டை நினைவுகூரும் வகையில் வேப்பமரம் மாரியம்மனுக்கு இணையாக மதிக்கப்படுகிறது. எனவே, தெய்வ உருவத்தில் இதற்கு இதுதான் வடிவம் என்று அறுதியிடும் முயற்சி சிறு தெய்வக் கோயில்களில் இல்லை.

2. வீரனார், முனியன், ஐயனார் கோயில்களில் மட்டுமின்றி கன்னிமார், காளியம்மன் கோயில்களில் கூடக் கற்கள் நடப்பட்டு, அதற்கு முக்கியத்துவம் கொடுக்கப் படுவது நடுகல் வழிபாட்டின் தொடர்பை நினைவு படுத்துகின்றது.

3. வழிபாட்டுப் பாடல்களில் வரும் உருவ அமைப்பிற்கும் கோயில்களில் காணப்படும் உருவ அமைப்பிற்கும் தொடர்பு இருப்பதில்லை. சான்றாக,

> எக்கிய வயிறும் திரேகமெல்லாம் வெண்ணீரும்
> ஒட்டிய வயிறும் ஒதட்டிலே சிங்கப்பல்லும்
> சிங்கப்பல்லும் செஞ்சடையும் சிவனுடை ரூபங்களும்
> கோழிமுட்டைக் கண்ணழகும் கோடாலி பல்லழகும்...[14]

என்ற பாடல் வரிகள் காளியின் உருவ வண்ணனையைப் புலப்படுத்துகின்றன. ஆனால், காளி கோயிலில் சூல வடிவம்,

மண் பிள்ளையார் வடிவம், கரக வடிவம் ஆகியனவே உருவங்களாக அமைந்துள்ளன. மனித சக்தியையும் கற்பனையையும் கடந்து நின்று விளங்கும் தெய்வத்திற்குப் பாடல்களில் மட்டுமே உருவம் அமைத்துப் பாடி வழிபட்டதை இதிலிருந்து உணர முடிகிறது.

4. மகாபாரதப் போரின்போது பாண்டவர்கள் வெற்றி வேண்டி அரவானைக் களப்பலியிட்ட முறையை நோக்கும் போது பலியிடுமுறை ஒரு வழக்கமாக இருந்த நிலையை அறிய முடிகிறது. வீரர்கள் தம் அரசர்க்கு வெற்றி வேண்டித் தம்மையே காளிக்குப் பலியிட்டுக் கொள்ளும் வீர நிகழ்ச்சிக்குக் கலிங்கத்துப் பரணி முதலாகப் பல இலக்கியங்கள் சான்று பகரும். சங்க இலக்கியத்தில் நடுகல் முதலான வழிபாட்டில் மறியறுத்துப் பலி கொடுக்கும் முறை போற்றப் பெற்றுள்ளது. சமண பௌத்தச் சமயத் தாக்கத்தால் பெருவழக்காய் இருந்த உயிர்ப்பலி குறைந்திருக்க வேண்டும். தற்காலத்தில் சிறு தெய்வ வழிபாட்டில் கொடுக்கப்படும் பலிமுறை பண்டைத் தொடர்பினை நினைவுபடுத்துகின்றது.

5. வழிபாட்டுப் பாடல்கள் கலையுணர்வோடு கூடிய நாடகத் தன்மையைப் புலப்படுத்துவதாக உள்ளன. வழிபாடும் வழிபாட்டுப் பாடல்களும் பிரிக்க முடியாத அளவிற்குப் பிணைப்பு நிலை கொண்டவை காமன் வழிபாடும் உருத்திராபதியார் வழிபாடும் நாடகம் போலப் பாடல்கள் பாடியே நடத்தப்படுகின்றன. உடுக்கையடித்துப் பாடிக் குறிகேட்கும் நிகழ்ச்சியும் வெறியாட்டுக் களம் போலத் தனியொரு நாடகச் சூழ்நிலையைத்தான் தோற்றுவிக்கிறது. வழிபாடு, மக்கள் மனநிலை, இடச்சூழ் நிலை மூன்றையும் ஒருமுகப்படுத்தும் தன்மையை இப் பாடல்களில் காண முடிகிறது.

6. கடவுளை அழைத்தல், குறிகேட்டல் முதலியன சிறுதெய்வ வழிபாட்டின் சிறப்புக் கூறுகளாகும். தலைவியின் நோயினைத் தீர்க்க முருகனையழைத்து வெறியாட்டு நிகழ்த்தும் சங்ககால அகமரபும் தற்காலத்தில் கடவுளை அழைத்துக் குறிகேட்கும் சமய மரபும் ஒப்பிட்டு நோக்கத் தக்கன பூசாரியின் மீது மட்டுமன்றி வழிபாட்டில் கலந்து கொள்வோர் மீது கூட இறைச்சத்தித் தோன்றும் நிலையும் சிறுதெய்வ வழிபாட்டில் மக்கள் ஒன்றிப் போதற்கு ஒரு சான்றாக விளங்குகின்றது.

7. தம்மை வருத்திக் கொள்வதன் மூலம் இறையருள் கிட்டும் என்ற நம்பிக்கையையும் அவ்வாறு இறைவனை உண்மையாக நம்பித் தம்மை வருத்திக் கொள்ளும்போது புறச்செயல்கள் ஏதும் தம்மைம் பாதிக்காது என்ற நம்பிக்கையையும் தம்மையே வருத்திக் கொள்ளும் நேர்த்திக் கடன்கள் மூலம் அறிய முடிகிறது ஏனைய வகை நேர்த்திக் கடன்களின் தன்மை தேன், தினை, மலர் போன்ற வற்றைக் கடவுட் பலியென விடும் சங்ககால மரபோடு[15] ஒப்பு நோக்கத்தகும்.

பொதுவாக, பண்டைக் காலத்தில் நடைபெற்ற வழிபாட்டு மரபுகளுக்கும் இன்றைய சிறுதெய்வ வழிபாட்டு மரபுகளுக்கும் பல வகைகளில் ஒற்றுமைக் கூறுகள் உள்ளன. பெருந்தெய்வச் சமயத்தைப் போல வானளாவிய கோயில்கள், புராண இதிகாச இலக்கியங்கள், தத்துவச் சிந்தனைகள் ஏதும் இல்லாமலேயே சிறுதெய்வச் சமய மரபுகள் வழி வழியாக ஆற்றொழுக்காகக் கடைப்பிடிக்கப் பட்டு வருவதை நோக்குமிடத்து இம்மரபுகள் மக்களின் வாழ்வியலோடும் உணர்வுகளோடும் கலந்துவிட்ட செம்மையை உணரமுடிகிறது

## குறிப்புக்கள்

1. Tamil Lexicon, Vol. III, Part I, P. 1460.
2. வேங்கடசாமி, மயிலை. சீனி; **நுண்கலைகள்** (சிதம்பரம், மணிவாசகர் நூலகம், இரண்டாம் பதிப்பு, 1972), ப. 21.
3. சண்முகசுந்தரம், சு; **நாட்டுப்புறவியல் ஓர் அறிமுகம்,** (சென்னை, இலக்கிய மாணவர் வெளியீடு, முதற் பதிப்பு, 1975), ப. 108.
4. **வனப்பூசை போடும் விபரமுறை,** (பழைய சுவடியிலிருந்து திரட்டப்பட்டது; சுமார் 150 ஆண்டுகள் பழைமை வாய்ந்ததாக இருக்கலாம். பேறியாண்டவனுக்கு வனப்புசை பொடும வேபறமுறை' பெரியாண்டவனுக்கு வனப்பூசை போடும் விபர முறை) என்ற தலைப்புடன் காணப்படுகிறது இவ்வழி பாடு இன்று வழக்கில் இல்லை.)
5. **உடுக்கைப் பாடல்கள்.** (பதினெட்டாம்படியார் வழிபாட்டுப் பாடல் பதிவு: அ. கோபால், நல்ல நாயகபுரம், சீர்காழி வட்டம், 11. 06. 1982).
6. **வனப்பூசை போடும் விபர முறை:**
7. **சிலப்பதிகாரம்,** 24:11,12.
8. **வனப்பூசை போடும் விபரமுறை**
9. **தொல்காப்பியம்,** பொருளதிகாரம், நூற்பா. 63 இளம். உரை.
10. இராதகிருட்டிணன், எஸ்; **நம்பிக்கையின் மறுமலர்ச்சி** மொ. பெ; சென்னை, அமுதநிலையம் வெளியீடு, 1968), ப. 12.

11. **உடுக்கைப் பாடல்கள்** (குறிகேட்கும் பாடல். பதிவு: *அர கண்ணன், வருசபத்து, சீர்காழி வட்டம்,* 28. 01. 1982).

12. **சீர்காழி வட்டக் கோயில்களின் பண்பாட்டுக் கொடையும், இலக்கியக் கொடையும்,** (தமிழ்த்துறை, பூண்டி புட்பம் கல்லூரிச் சார்பாகச் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப்பெற்ற எம். ஃபில், ஆய்வேடு, நவம்பர், 1982), ப. 94

13. "நாடோடிப் பாடல்கள் காட்டும் நம்பிக்கை (கட்டுரை. ப. இ.), ப. 22.

14. உடுக்கைப் பாடல்கள் (பத்திர காளியம்மன் வழி பாட்டுப் பாடல், பதிவு: அர. கண்ணன்).

15. குறுந்தொகை, 105; அகநானூறு 372.

## துணை நூல்கள்


1. அரவிந்தன், மு. வை., தமிழக நாட்டுப்பாடல்கள், பாரி நிலையம், சென்னை. 1977.
2. இராதாகிருட்டிணன், மா., திராவிட முனிவர்கள், (ப.இ).
3. இராதாகிருட்டிணன், எஸ்., நம்பிக்கையின் மறுமலர்ச்சி, (மொ. பெ.) அமுத நிலையம், சென்னை. 1968.
4. கணபதி, இரா., அம்மா, கலைமகள் காரியாலயம், சென்னை. 1975.
5. சண்முகசுந்தரம், சு., நாட்டுப்புறவியல் ஓர் அறிமுகம், இலக்கிய மாணவர் வெளியீட்டகம், சென்னை. 1975.
6. சிவபாதசுந்தரம், சு., சேக்கிழார் அடிச்சுவட்டில், வானதி பதிப்பகம், சென்னை. 1976.
7. சுப்பிரமணியப்பிள்ளை, கா., தமிழர் சமயம், தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி. 1953.
8. செல்வக்கணபதி, இரா., சைவம், இராஜம் அன் கோ, சென்னை,
9. சைவ சித்தாந்த வினாவிடை, தருமபுர ஆதீனம், தருமபுரம். பதின்மூன்றாம் பதிப்பு. 1972.
10. தங்கவேலு, கோ., இந்தியக்கலை வரலாறு, தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை. 1976.
11. தட்சிணாமூர்த்தி, அ., தமிழர் நாகரிகமும் பண்பாடும், வெற்றிச் செல்வி வெளியீட்டகம், தஞ்சை. 1973.

12. தமிழர் நாகரிகம், செல்விப் பதிப்பகம், காரைக்குடி. 1968.

13. "நாடோடிப் பாடல்கள் காட்டும் நம்பிக்கை", (ப.இ.)

14. பரமசிவானந்தம், அ.மு. தமிழ்நாட்டு விழாக்கள், தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை. 1956.

15. முத்துப்பிள்ளை, சி., சிறப்புமிக்க சிவாலயங்கள், பைலட் பப்ளிகேஷன்ஸ், சென்னை. 1978.

16. முத்துப்பிள்ளை, சி., புகழ் மணக்கும் வைணவத் தலங்கள், (ப.இ.)

17. முருகையா தேசிகர்., அங்காரகன், (ப.இ.)

18. வேங்கடசாமி, மயிலை, சீனி., தமிழர் வளர்த்த அழகு கலைகள், (ப.இ.)

19. வேங்கடசாமி, மயிலை. சீனி., நுண்கலைகள், மணிவாசகர் நூலகம், சிதம்பரம். இரண்டாம் பதிப்பு 1972.

20. வையாபுரி பிள்ளை, எஸ் , தமிழர் பண்பாடு, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை. மூன்றாம் பதிப்பு. 1955.

**இலக்கியங்கள்:**

21. அகநானூறு, தென்னிந்திய சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி.

22. கலித்தொகை, தென்னிந்திய சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி.

23. களவழி நாற்பது, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி.

24. சிதம்பர சுவாமிகள். திருப்போரூர்ச் சந்நிதித் முறையும், பிறநூல்களும் கந்தசாமி தேவதானம், திருப்போரூர். 1967.

25. சிலப்பதிகாரம், தென்னிந்திய சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி.

26. சுந்தரர்., தேவாரம், (தலமுறை) காசிமடம் திருப்பனந்தாள். 1978.

27. திருக்குறள், தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி.

28. திருஞானசம்பந்தர்., தேவாரம் (தலமுறை) காசி மடம், திருப்பனந்தாள். 1978.

29. திருநாவுக்கரசர்., தேவாரம், (தலமுறை) காசிமடம் திருப்பனந்தாள். 1976.

30. திருவாசகம், காசிமடம், திருப்பனந்தாள். 1977.

31. தொல்காப்பியம், தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வெலி.

32. பெரிய புராணம், காசிமடம், திருப்பனந்தாள். 1974

33. முருகையா தேசிகர்., வைத்தியநாதர் பதிகம், (ப.இ.

**தலவரலாறுகள்:**

34. சீர்காழித் தலவரலாறு, தருமபுர ஆதீனம், தருமபுரம் 1980

35. திருப்புன்கூர் தலவரலாறு, சிவலோகநாத சுவாமி தேவதானம், திருப்புன்கூர். 1978.

36. திருவெண்காட்டுத் தலவரலாறு, சுவேதாரண்யேசுவரர் தேவதானம், திருவெண்காடு, 1976.

37. புள்ளிருக்கு வேளூர்த் தலவரலாறு, தருமபுர ஆதீனம் தருமபுரம். 1980.

**சுவடிகள்;** (அச்சில் வெளிவராதவை)

38. இரதியின் ஒப்பாரிப் பாடல்கள்

39. உடுக்கைப் பாடல்கள்

40. உருத்திராபதியார் பாடல்கள்
41. குறி கேட்கும் பாடல்கள்
42 தாலாட்டுப் பாடல்கள்
43. மன்மத சுவாமிப்பாடல்கள்
44. வனபூசை போடும் விபரமுறை

**ஆய்வுக் கோவைகள்:**

45. ஆய்வுக்கோவை, (தொகுதி-3,) அண்ணாமலைப் பல்கலைக்கழகச் சார்பு வெளியீடு, அண்ணாமலை நகர், 1981.
46- ஆய்வுக்கோவை, (தொகுதி-3.) அண்ணாமலைப் பல்கலைக்கழகச் சார்பு வெளியீடு, அண்ணாமலை நகர், 1982.

**அகராதி:**

47. அகராதி, (பெயர், பதிப்பு விவரமில்லை.)

**கலைக்களஞ்சியம்:**

48. கலைக்களஞ்சியம், தமிழ் வளர்ச்சிக்கழகம், சென்னை. 1956.

**இதழ்கள்:**

49. திருக்கோயில், (மாத இதழ்) இந்துசமய அறநிலையத் துறை, சென்னை, சனவரி. 1975.
50. திருக்கோயில், (மாத இதழ்) இந்துசமய அறநிலையத் துறை, சென்னை. சூன். 1975.
51. திருக்கோயில், (மாத இதழ்) இந்துசமய அறநிலையத் துறை, சென்னை. ஏப்ரல். 1977.

**சொற்பொழிவு:**

52. சிவத்தம்பி, கா., "நாடகமும் பண்பாடும் – தமிழ் நாடக வளர்ச்சிப் பற்றிய ஒப்பாய்வு", (சொற்பொழிவு), களம்- திருபுட்பம் கல்லூரி, பூண்டி, காலம்: 5-8-82.

## தகவலாளர் பற்றிய குறிப்புகள்

| வ. எண் | பெயர் | வயது | முகவரி | பேட்டி கண்ட நாள் | நேரம் |
|---|---|---|---|---|---|
| 1 | அகோரகுருக்கள் | 50 | அர்ச்சகர் சுவேதாரண்ய சுவாமி தேவதானம், திருவெண்காடு சீர்காழி வட்டம் | 18-8-82 | காலை 10.00 |
| 2 | அரங்காச்சாரியார், என். | 65 | செயலாளர் நாங்கூர் கருடசேவை விழாக் குழு, நாங்கூர் | 25-1-82 | மாலை 3.00 |
| 3 | இராசகோபால தீட்சதர் | 50 | பட்டாச்சாரியார் நாங்கூர் | 25-1-82 | காலை 10.00 |
| 4 | இராசமாணிக்கம், எஸ். | 40 | இடமணல் அஞ்சல் சீர்காழி வட்டம் | 28-1-82 | மாலை 6.00 |
| 5 | இராசாமணிக்குருக்கள் | 45 | அர்ச்சகர் புள்ளிருக்கு வேளூர் வைத்தியநாத சுவாமி தேவதானம், வைத்தீசுவரன் கோயில் சீர்காழி வட்டம் | 18-4-82 | காலை 9.00 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 6 | இராமசாமி பட்டர் | 45 | பட்டாச்சாரியார் நாங்கூர் | 25–1–82 | மாலை 4.00 |
| 7 | இராமநாத சிவாச்சாரியார், ந. | 50 | திருக்கோலக்கா சீர்காழி அஞ்சல் | 21–3–82 | மாலை 6.00 |
| 8 | இரெத்தினசாமி, த. | 78 | திருமுல்லைவாசல் அஞ்சல் சீர்காழி வட்டம் | 1–1–82 | காலை 11.00 |
| 9 | இலக்குமண தீட்சதர் | 50 | பட்டாச்சாரியார் நாங்கூர் | 25–1–82 | காலை 11.00 |
| 10 | கண்ணன், ஆர். | 50 | பிடாரி மேலவீதி சீர்காழி | 28–1–82 | காலை 10.00 |
| 11 | கலியபெருமாள் | 42 | திரௌபதியம்மன் பூசாரி திருமுல்லைவாசல் அஞ்சல் | 13–12–81 | மாலை 3.00 |
| 12 | கலியபெருமாள், கே. வி. | 50 | வடக்குத்தெரு திருமுல்லைவாசல் அஞ்சல் சீர்காழி வட்டம் | 13–12–81 | மாலை 4.00 |
| 13 | கல்யாணசுந்தர தேசிகர் | 53 | உள்துறை அதிகாரி வைத்தியநாதர் ஆலயம் வைத்தீசுவரன்கோயில் | 18–4–82 | காலை 11.00 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 14 | கிருட்டிணமூர்த்தி, கோ. | 55 | திட்டை அஞ்சல்<br>சீர்காழி வட்டம் | 30–1–82 | காலை<br>9.00 |
| 15 | கோபால், அ. | 65 | நல்ல விநாயகபுரம்<br>சீர்காழி வட்டம் | 16–1–82 | மாலை<br>4.00 |
| 16 | சண்முகம், ந. | 45 | தமிழாசிரியர்<br>எல்.எம்.சி. மேனிலைப்பள்ளி<br>சீர்காழி | 1–12–81 | மாலை<br>6.00 |
| 17 | சம்பத் பட்டாச்சாரியார் | 40 | நாங்கூர் அஞ்சல் | 25–1–82 | மாலை<br>5.00 |
| 18 | சாம்ராஜ் | 24 | நடராஜம் பிள்ளை சாவடி<br>சீர்காழி வட்டம் | 25–1–82 | இரவு<br>8.00 |
| 19 | சித்ருபா | 35 | இரட்டைக்காளியம்மன்<br>கோயில் தெரு, சீர்காழி | 1–12–81 | காலை<br>10.00 |
| 20 | சுப்பிரமணியக் குருக்கள் | 68 | நாங்கூர்<br>சீர்காழி வட்டம் | 25–1–82 | காலை<br>9.00 |
| 21 | சுப்பிரமணிய தேசிகர், கே. | 59 | ஓதுவார்<br>திருப்புன்கூர் சிவலோகநாதர்<br>[illegible] சீர்காழி வட்டம் | 18–4–82 | மாலை<br>3.00 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 22 | சேடாத்திரி | 55 | பட்டாச்சாரியார் தாடாளன் கோயில், சீர்காழி | 18–8–82 | மாலை 6.00 |
| 23 | சோமசுந்தரம் | 45 | இராதாநல்லூர் சீர்காழி வட்டம் | 16–8–82 | மாலை 6.00 |
| 24 | சோமசுந்தரம் குருக்கள், எஸ். | 55 | தலைமை அர்ச்சகர் சட்டைநாதர் ஆலயம், சீர்காழி | 1–12–81 | மாலை 7.00 |
| 25 | தண்டபாணி தேசிகர், த. | 48 | ஓதுவார் சுவேதாரண்ய சுவாமி தேவதானம், திருவெண்காடு | 18–8–82 | காலை 9.00 |
| 26 | நாகரெத்தினம் பிள்ளை, ப. | 85 | தாண்டான் குளம் சீர்காழி வட்டம் | 16–1–82 | காலை 8.00 |
| 27 | பத்மநாராயணன் | 26 | நடராஜம்பிள்ளை சாவடி சீர்காழி வட்டம் | 25–1–82 | இரவு 9.30 |
| 28 | மகாலிங்கக் குருக்கள் | 50 | அர்ச்சகர் திருப்புன்கூர் சிவலோகநாதர் ஆலயம், திருப்புன்கூர் | 18–4–82 | மாலை 5.00 |
| 29 | மிருத்யூஞ்செயன், சி. | 40 | தமிழாசிரியர் இடமணல் நடுநிலைப்பள்ளி சீர்காழி வட்டம் | 13–12–81 | காலை 10.00 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 30 | முத்துக்குமரசாமி, எஸ். | 60 | வடக்கு வீதி<br>சீர்காழி | 1-12-81 | மாலை<br>5.00 |
| 31 | முத்துமாணிக்கம், ம. | 26 | பூசாரித்தெரு, இளையமதுக்குடம்,<br>69, இராதாநல்லூர்<br>சீர்காழி வட்டம் | 18-8-82 | மதியம்<br>12.00 |
| 32 | முருகரெத்தினம் | 45 | தமிழ் வளர்ச்சி இயக்குநர்<br>தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சை | 7-10-82 | காலை<br>11.00 |
| 33 | முருகையா தேசிகர் | 65 | வடக்குத்தெரு<br>வைத்தீசுவரன் கோயில் | 18-4-82 | காலை<br>8.00 |
| 34 | வரதராசன் நாயுடு | 65 | புன்செய்<br>சீர்காழி வட்டம் | 25-1-82 | இரவு<br>10.00 |
| 35 | வீரராகவன் | 39 | வடக்குத்தெரு<br>நாங்கூர் | 25-1-82 | மதியம்<br>2.00 |